உமாபதி சிவம் அருளிய

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

சி. சு. மணி

அருள் நந்தி சிவம்
அருட்பணி மன்றம்
78 செல்வி நகர் சிந்துபூந்துறை திருநெல்வேலி

வெளியீடு எண் : 14
முதற் பதிப்பு : நவம்பர் 1992


# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Sivaprakasam<br>A Lucid Commentary |
| Author | : | Si. Su. Mani |
| Publisher | r | S. Chithambaranatha Kalyani<br>Arulnandhi Sivam Arutpani Manram<br>Tirunelveli-627 00' |
| Language | : | Tamil |
| Date of Publication | : | November 1992 |
| Edition | ; | First |
| Size of the Book | : | 21 × 14 c. m. |
| Printing types used | ; | 10 Point |
| Number of Copies | : | 600 |
| Number of Pages | : | 126+IX |
| Printers | : | Rexy Printers, Tirunelveli-627 001. |
| Binding | : | Pulp Board |
| Subject | : | Commentary on a Saiva Siddhantha Philosophical work |

என் அன்பிற்குரிய அண்ணாச்சி
திரு. சி. சு. மணி அவர்களின்
**மணி விழா மலராக**
இந்நூல்
வெளியிடப் பெறுகிறது.

S. *சிதம்பரநாதகல்யாணி*
தலைவர்
அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்



# பதிப்புரை

மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கினையும் எளிய, பழகு தமிழில் உரையுடன் வெளியிட வேண்டும் என்பது எங்கள் மன்றத்தின் பேரவா.

சைவ சித்தாந்தம் என்பது தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியுடைய புலவர்கள் நடுவிலே வழங்குவதாக அமையாமல் அதன் அரிய பயன் அனைவர்க்கும் எட்டுதல் வேண்டும் என்பது எங்கள் நோக்கம். அந்த வகையில் இதற்கு முன் திருவருட்பயன், சிவஞான சித்தியார் சுபக்கம், உண்மை விளக்கம் ஆகிய மூன்று நூல்கள் வெளியிட்டுள்ளோம். மற்றைய நூல்களும் எல்லாம் வல்ல கயிலாய நாதப் பெருமான் திருவருளால் விரைவில் வெளிவர இருக்கின்றன.

எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி சிவப்பிரகாச நன்னூலுக்கு இனிய தெளிந்த நடையில் உரை எழுதித் தந்த திரு. சி. சு. மணி அவர்களுக்கு எங்கள் நன்றி. அவ்வாறே அணிந்துரை வழங்கி உதவிய டாக்டர் திருமிகு ஆ. ஆனந்தராசன் M.A., Ph.D., (இணைப் பேராசிரியர், சைவ சித்தாந்தத் துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.) அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

அச்சிட்டுத் தந்த, திருநெல்வேலி ரெக்ஸி பிரிண்டர்ஸ் உரிமையாளர் கயிலைமணி திரு. கோ. சீதாபதி அவர்களுக்கும் அச்சகத் தொழிலாளத் தோழர்களுக்கும் எங்கள் நன்றி உரியது.

எங்களுக்குத் தொடர்ந்து ஆதரவு நல்கிவரும் பெரு மக்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கயிலைமணி S ***சிதம்பரநாதகல்யாணி***
தலைவர்,
அருள்நந்திசிவம் அருட்பணி மன்றம்
தொலைபேசி-23564

திருநெல்வேலி
28—11—1992

உ

# அணிந்துரை

முனைவர் ஆ. ஆனந்தராசன், இணைப் பேராசிரியர்,
சைவ சித்தாந்தத் துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

மெய்ப் பொருள் உண்மைகளை வெறும் நம்பிக்கைக்கு உரியன வாகத் தெரிவிக்காமல், அறிவிற்குப் பொருந்தும் வகையில் ஆராய்ந்து காட்டி மெய்ப்பிக்கின்ற நூல்கள் பதினான்கு சாத்திர நூல்களாகும். அவன் அருளே கண்ணாகக் கண்டுணர்ந்த மெய்கண்ட தேவர் முதலான ஞானாசிரி யர்களால் அவை அருளிச் செய்யப் பெற்றன.

அவற்றுள் ஒன்றாகிய சிவப்பிரகாசம், சிவஞான போதத்தையும் சிவஞான சித்தியாரையும் விரும்பி நோக்கிக் கருத்தில் உறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து அருத்தி மிக நூறு விருத்தப் பாக்களில் உமாபதி சிவனார் அருளியதாகும்.

திருவருட் பயனுக்கு உரை வகுத்த நிரம்ப அழகிய தேசிகர் தாம் செய்த சிறப்புப் பாயிரத்தில் சிவப்பிரகாச நூலின் சீர்மையை அழகிய முறையில் புலப்படுத்தியுள்ளார். சிவஞான போத நூல் ஆகமப் பொருள் முழுவதையும் செறித்து அடக்கிக் காட்டும் பளிங்கினைப் போன்றது. அதன் சுருக்கமும் செறிவும், அதனைப் பயில முற்படும் குறையறிவு உடை யார்க்குத் தீரா இடும்பையைத் தருவதாகும். அச் சிவஞான போதத்தின் உள்ளுறையை வெளிப்படுத்தும் நூலாக அமைந்த சிவஞான சித்தியாரோ மிக விரிந்த நூலாயிற்று. அதன் பொருள் விரிவு, பயில வருவோர்க்கு மலைப்பையும் துன்பத்தையும் தருவதாகும். இதனைத் திருவுளங் கொண்ட உமாபதி சிவனார் பயில்வோரின் அறிவு நிலைக் கேற்ப, சுருக்கியும் சொல்லாமல், விரித்தும் கூறாமல் இடை நிலைப்பட்டதாக அமையும்படி சிவப்பிரகாச நூலை அருளினார். அந்நூல், சிவாகமங்களாகிய கடலைக் கடத்தற்கு உதவும் மரக்கலம் போன்றது என்று பாராட்டுகிறார் நிரம்ப அழகிய தேசிகர்.

இந்நூல் எளிய நடையில் இயன்றது என்பதாகத் தோன்றும். ஆயின் உண்மை அவ்வாறில்லை. செறிவான சொற் கட்டும், தருக்க முறை ஆய்வும், நுட்பமான கருத்து அமைவும் இந் நூலின் தனித் தன்மை களாம். உரையின் துணையின்றி இதனை விளங்கிக் கொள்ளுதல் எளிதன்று.

சிவப்பிரகாசத்திற்கு உரைகள் பல உள்ளன. மதுரைச் சிவப் பிரகாசர் எழுதிய பேருரை, காஞ்சிபுரம் இலக்கணம் சிதம்பரநாத முனிவர் உரை, நல்லசிவ தேவர் சிந்தனையுரை, திருவுருமாமலை யடிகள் உரை. கொழும்பு திருவிளங்கம் எழுதிய புத்துரை என்பவை குறிப்பிடத் தக்கவை;

அண்மைக் காலத்தில் காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் சிவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளால் எழுதப்பெற்ற சிவப் பிரகாச உரையும், ப. இராமநாத பிள்ளை, கு. சுந்தரமூர்த்தி ஆகியோர் உரைகளும் புது வரவாகும்.

இத்துணை உரைகள் எழுதப்பட்ட போதிலும் சிவப்பிரகாச நூற் பொருள், 'கடல் அலைத்தே ஆடுதற்குக் கை வந்து நின்றும் கடல் அளக்க வாராதாற் போலே' இவ்வுரைகளுக்குள்ளே அடங்காததாய், இன்னும் பல உரைகள் தோன்றுவதற்கு இடமளிப்பதாய் உள்ளது எனலாம்.

இந் நிலையில், சிவப்பிரகாசமாகிய அறிவு நூற் பெட்டகத்தினைத் திறந்து ஆங்குள்ள அரும்பொருள்களை அனைவருக்கும் வழங்குகின்ற வகை யில், அருமையில் எளிய அழகாக, திரு. சி. சு. மணியவர்கள் எழுதிய உரை இதுபொழுது வெளிவருகின்றது.

உரை யெழுதுவது என்பது அரிய கலை. எல்லோர்க்கும் அத்திறன் கைவராது. சிலர் தம் நூற்புலமையை உரையிலே காட்டி மாணுக்கரை மருட்டுவர்; சிலர் வேண்டாதவற்றையெல்லாம் விரித்துக் காட்டி நூற் பொருளை விளங்க வொட்டாமற் செய்வர்; சிலர் அகலவுரை என்றெழுதிப் பயில்வோரை அஞ்சி அகலுமாறு செய்வர். அவையெல்லாம் இக்காலத் திற்கு ஒவ்வாதன.

மெய்ப்பொருள் நாட்டம் இல்லாதவரும் கூட விரும்பிப் படிக்கும் முறையில் எளிய நடையில் அமைந்ததாய், வேண்டிய கருத்துக்களை அள வோடு தருவதாய், நுண் பொருளையும் எண் பொருளவாக விளக்குவதாய் உள்ள உரையே இக்காலத்திற்கு வேண்டுவதாம்.

இக்காலத்தின் போக்கையும் நோக்கையும் நன்குணர்ந்த சித்தாந்த அறிஞராகிய சி. சு. மணியவர்கள் எழுதிய இவ்வுரை மேற்கூறிய இயல்புகளையெல்லாம் தன்னகத்தே கொண்டு, கல்லார்க்கும் கற்றூர்க்கும் களிப்பினை நல்குவதாய் அமைந்துள்ளது.

இனி இவ்வுரையின் இயல்புகளையும் நலன்களையும் சிறிது எடுத்துக் காட்டுதல் பொருத்தமாகும்.

1) சிவப்பிரகாசம் சார்பு நூலாதலால் உரிய விடங்களில் முதல் நூல். வழி நூல்களிலிருந்து பொருத்தமான மேற்கோள்களையும் ஒப்புமைப் பகுதிகளையும் எடுத்தாண்டு உரையைச் செழுமைப்படுத்தியுள்ளார். சிவ ஞான சுவாமிகள் அருளிய மாபாடியத்தில் அழுத்தமான ஈடுபாடும் தேர்ச்சியும் உடையவர் ஆதலால் சிவபிரகாசக் கருத்துக்களை முனிவர் எப்படியெல்லாம் எடுத்து விளக்கியுள்ளார் என்பதை ஆங்காங்கே மறவாமற் சுட்டிச் செல்கிறார். இது மாபாடியத்தைப் பயில வேண்டும் என்ற ஆர்வத்தை மாணுக்கர்க்கு ஊட்டும் என்பது உறுதி.

2) உரையில் போற்றத் தக்க கருத்து விளக்கங்கள் பல பொதிந்துள்ளன.

உயிரை அணு என்றல் சாத்திர நூல்களிற் காணும் வழக்கு. அவ்வாறு கூறுவதன் காரணத்தை விளக்கியுள்ளார், (ப. 26)

மாயை ஒண்தனை என்னும் நுட்பமான கருத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார். (ப. 36)

திரோதான சத்தி பற்றிய தெள்ளிய விளக்கம் இரண்டு இடங்களில் அமைந்துள்ளது. (ப. 33; ப. 72)

சுருங்கக் கூறின், இவ்வுரையை ஊன்றிக் கற்போர் சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் இயல்புகளை எளிதாக அறிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறுவர் என்பது திண்ணம்.

3) மணியான சொல் விளக்கங்கள் மணியவர்களின் உரையில் ஆங்காங்கே ஒளி வீசுகின்றன.

காட்டாக, கலை (ப. 41), ஊழ் (ப. 47), சாதி (ப. 46), நிட்டை (108) முதலிய சொல் விளக்கங்கள் குறிப்பிடத்தகுந்தவை,

'உன்னரிய திருவருளை ஒழிய மலம் உளதென்று
உணர்வரிதால் அதன் உண்மை தெரிவரிதாம் உனக்கே' (சிவப். 36)

என்பதில் உள்ள உணர்வு, தெரிவு என்னும் சொற்களைக் கூர்ந்து நோக்கி, உணர்வு என்பது அனுபூதி என்றும், தெரிவு என்பது ஆராய்ச்சி என்றும் வேறுபடுத்தி விளக்கியுள்ளமை காணலாம். (ப. 57)

4) சில வடமொழிக் கலைச் சொற்கள் நெடுங்காலமாக எடுத்தாளப் பட்டு வருகின்றன. அவற்றின் பொருளை அறியாமலே நாம் அவற்றைப் பயன்படுத்தி வருகிறோம். அத்தகைய சொற்களின் நேரிய பொருளை இவ்வுரையிற் கண்டு மகிழலாம்.

ஆங்காரம் என்னும் தத்துவத்தின் கூறுகளாகிய தைசதம், வைகாரி பூதாதி என்பவற்றின் சொற்பொருளும் (ப. 42), முக்குணங்களின் விரிவுகளாகிய இலகுதை, வியா விருதி, கௌரவம், அறியமம் முதலியவற்றின் பொருளும் (ப. 64) விளக்கப்பட்டுள்ள இடங்கள் நோக்குதற்குரியவை.

5) உரையாசிரியரின் திறனை அளந்து காட்டுவன, அவர் கூறும் நயமான, நுட்பமான உரைப்பகுதிகளாம்.

இவ்வுரை யென்னும் சித்தாந்தக் கருவூலத்தில் அந்தகைய அருமையான, நயமான கருத்துச் செல்வங்கள் மிளிர்வதைக் காணலாம்.

அறிவுப் பொறிகள், தொழிற்பொறிகள் பற்றிக் கூறும் 44-ஆம் செய்யுளுக்கு எழுதிய உரையில், அறிவுப் பொறிகள் தொழிற் பொறிகளுக்குத் துணையாக நிற்கும்; ஆனால் தொழிற் பொறிகள் அறிவுப் பொறிகளுக்குத் துணையாக மாட்டா என்ற நுட்பமான கருத்தை உணர்த்தியுள்ளார். (ப. 67)

'பேசரிய அராகம்' என்ற தொடரின் அடைமொழிச் சிறப்பை உணர்ந்து, உயிர்களின் விருப்பம் என்பது எல்லையற்று வளர்ந்து கொண்டே போகும் ஆதலால் பேசரிய அராகம் எனப்பட்டது என நயவுரை காண்பர். (ப. 61)

சத்தியாகிய அருளொளியே சிவமாகிய முதற் பொருளைக் காட்டும் என்பது பற்றி, 'அத்தனை அருளும்' என்றார் உமாபதி சிவம். இதனை விளக்குமிடத்தில், 'சத்தி அருள்வது தந்தையாகிய அத்தனை. எனவே சத்தியைத் தாய் என்று சொல்லாமலே உணர வைத்தார்' என்று எழுதியுள்ள உரை நுட்பம் உணர்ந்து மகிழ்தற்குரியது. (ப, 100)

அருள் அனுபவ நூலாகிய சிவப்பிரகாசத்தை அனைவரும் அறிந்து தேர்ந்து தெளியுமாறு உரையெழுதி உதவிய செயல் காலத்தினாற் செய்த நன்றியாகும்.

சைவ நல்லுலகம் திருவருள் நெறியைத் தலைப்படுவதற்கு இந்நூல் உறுதுணை செய்யும் என்று நம்புகிறேன்.

மதுரை.
15-11-1992

ஆ. ஆனந்தராசன்

சிவமயம்

# சிவப்பிரகாசம்

சைவசித்தாந்த மெய்ப்பொருளியலே விளக்குகின்ற அடிப்படை நூல்கள் மெய்கண்ட சாத்திரங்கள் எனப்படும். இவற்றுள் ஏழாவதாக வைத்து எண்ணப்படும் நூல், ஆசிரியர் உமாபதி சிவனுர் அருளிச் செய்த சிவப்பிரகாசம் ஆகும்.

மெய்கண்டாரின் சிவஞான போதம் முதல் நூல், சிவஞான போதத்திற்கு மெய்கண்டாரின் மாணவராகிய அருள்நந்தி சிவனுர் அருளிச் செய்த சிவஞான சித்தியார் வழிநூல். உமாபதி சிவம் அருளிச் செய்த சிவப்பிரகாசம் புடைநூல் அல்லது சார்பு நூல் என்று வழங்கப் பெறும்.

சிவஞான போதத்தின் 'முதல் உரை நூலாக அருள்நந்தி சிவம் எழுதிய சிவஞான சித்தியார் விளங்குகிறது. அது செய்யுள் நடையில் அமைந்தது. பரபக்கம், சுபக்கம் என்ற இருபெரும் பகுதிகளேக் கொண்டது. சிவஞான போதத்தின் செறிவான கருத்துக்கள் சிவஞான சித்தியாரில் விளக்கப்பட்டுள்ளனவே தவிரப் புதிய செய்திகள் சிவஞான சித்தியாரில் அதன் ஆசிரியரால் இணைக்கப்படவில்லே.

சிவப்பிரகாசம் புடைநூல் என்று வழங்கப்படுவதற்கேற்பச் சிவஞான போதம், சிவஞான சித்தியார் ஆகிய நூல்களே அடியொற்றியும், இறைவன் திருவருளால் உமாபதிசிவனுர்க்கு உணர்த்தப்பட்ட செய்திகளும், ஆகம நூல்களில் காணக்கிடைக்கின்ற செய்திகளும் கலந்து எழுதப்பட்ட நூலாகும். இதனே ''விளம்பிய நூல் அவை இரண்டும் விரும்பி நோக்கிக் கருத்தில் உறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து'' என்று இந்நூலின் பதினேராவது பாடலில் ஆசிரியர் உமாபதி சிவம் எடுத்துரைக்கிருர்.

சிவப்பிரகாசம், காப்புச் செய்யுள் தவிர மொத்தம் நூறு விருத்தப் பாக்களால் ஆயது. இது பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்று இரண்டு பகுதிகளேக் கொண்டது. பொது அதிகாரத்தில் ஐம்பது பாடல்களும் உண்மை அதிகாரத்தில் ஐம்பது பாடல்களும் உள்ளன.

இந்நூலுக்குச் சிவப்பிரகாசம் என்ற பெயரை ஆசிரியர் உமாபதி சிவமே சூட்டினுர் என்பது நூலின் வழியும் நூலின் பெயரும் கூறுமிடத்து ''ஆசில் சிவப்பிரகாசம் ஆகும் அன்றே'' என்று கூறுவதனுலும், நூலின் இறுதியில் ''இச் சிவப்பிரகாச நன்னூல்'' என்று அவரே குறிப்பிட்டுள்ள திலிருந்தும் தெரிய வருகின்றது.

சிவப்பிரகாசம், பெரும்பாலும் மெய்கண்டாரின் சிவஞான போதத்தை அடியொற்றிச் செல்வது என்பது முதல் நூற்பா தொடங்கி பன்னிரண்டாம் நூற்பா வரை காணப்படும் செய்திகளை நிரல்பட அமைத் துள்ளமையிலிருந்து புலனுகின்றது. இவ்வாறு பழைய உரையாசிரியர்கள் அமைத்துக் காட்டுவர். ஆயினும் ஆங்காங்கே மூல நூலிலிருந்து அமைப்பு முறையும், செய்திகளும், சற்றே விரித்தும், சுருக்கியும், முறை மாற்றியும் தரப்பட்டுள்ளமையை உணரலாம். சான்ருகச் சிவஞான போதத்தின் முதல் நூற்பா சிவப்பிரகாசத்தில் பதின்மூன்ருவது பாடலில் தொடங்குகிறது. அதற்கு முந்திய பாடல் அவையடக்கமாக அமைகிறது, ஆனுல் எட்டாம் பாடல் தொடங்கிப் பத்தாம் பாடல் முடிய தீக்கை முறையை ஆசிரியர் விளக்குகிருர். வைப்பு முறையில் உள்ள மாற்றத்துக்கு இது ஓர் எடுத்துக்காட்டு. முதல், வழி நூல்களுக்கு முரணுகாமலும், அதே நேரம் சிறுசிறு மாறுபாடுகளோடும் சிவப்பிரகாசம் விளங்குகிறது. இது புடைநூலுக்கு விதிக்கப்பட்ட இலக்கணத்தோடு பொருந்துவதே.

''இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடை நூ லாகும்.''

என்பது நன்னூல் நூற்பா. இதில் இருவர் நூல் எனப்பட்டது முதல் நூலையும் வழி நூலையும் ஆகும்.

## *காப்பு*

**ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு**
**களியார வரும்ஆனை கழல்நாளும் மறவாமல்**
**அளிஆளும் மலர்தூவும் அடியார்கள் உளம்ஆன**
**வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.**

ஒளியே வடிவான திருமேனியில் மதநீர் பொழிகின்ற யானை முகத்தினை உடைய விநாயகப் பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் நாள் தவருமல், மறவாமல் வண்டாடும் பூக்களினுலே வழிபடுகின்ற தொண்டர்களின் உள்ளத்து அறியாமையாகிய இருள் நீங்கித் திருவரு ளாகிய பேரொளி என்றும் நிலைத்திருக்கும். வலிமை மிக்க வினைகளும் அத்தகைய அடியார்களை வந்துபொருந்தா. எனவே இந்நூல் முற்றுப் பெறுதற்கு மூத்தபிள்ளையாரது திருவடிகளை வழிபடுகிறேன்.

உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூன்றையும் கடந்தது இறைவனுடைய தன்னியல்பு. இது உண்மை இயல்பு, சொரூப லக்கணம் எனவும் கூறப்படும். அது பேரொளிப் பிழம்பாக விளங்கும். அப்பேரொளியே ஞானவடிவைக் குறிக்கும். விநாயகப் பெருமானுடைய திருமுகம் பெருமித மிக்க யானையின் முகம் ஆதலால் மதநீர் பொழியும் இயல்பு குறிக்கப்பட்டது. அவர் திருவடிகளை வண்டுகள் மொய்க்கும்

மலர்களைத் தூவி வழிபடுகின்ற அடியர்களின் உள்ளம் அப்பெருமானின் அருளால் ஒளியாய் நிறையும். அதாவது அறியாமையாகிய இருள் அடியார்களின் உள்ளத்திலிருந்து நீங்கும். அத்தகைய அடியார்களுக்கு வலிமை மிக்க வினைகள் வந்து பொருந்த மாட்டா.

விநாயகப் பெருமானின் இரண்டு திருவடிகளும் ஞானசத்தி, கிரியா சத்தி ஆகியவற்றைக் குறிக்கும். அவரது வலது திருவடி மலத்தை நீக்கி மெய்யறிவைத் தரும் ஞானசத்தி ஆகும். இடது திருவடி வினையின் வலிமையை நீக்கும் கிரியாசத்தியின் வடிவினது ஆகும்.

இந்நூல் சிவப்பிரகாசம் என்ற பெயரினை உடையது. அதற்கேற்ப ஒளி என்ற சொல்லுடன் இக்காப்புச் செய்யுள் தொடங்குகிறது ஒரு நயம். இந்நூலின் பயன் மலநீக்கமும் சிவப்பேறும். சிவஞானம் ஒளி வடிவம் கொண்டதால் இருள் மலம் நீங்கும் என்பதும், திருவடிப் பேற்றால் கொடியவினை நீங்கும் என்பதும் இக்காப்புச் செய்யுளில் வலியுறுத்தப்பட்டன.

## பாயிரம்

## மங்கல வாழ்த்து

*கூத்தப் பெருமான்*

**1 ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்திஆகி**
**உலகம்எலாம் அளித்துஅருளும் உமையம்மை காணத்**
**தேங்கமழும் மலர்இதழி திங்கள் கங்கை**
**திகழ்அரவம் வளர்சடைமேல் சேர வைத்து**
**நீங்கல்அரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்**
**நின்றுஇமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்**
**பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்**
**புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம்.**

பேரொளிப் பிழம்பாகித் திருவருளாகிய ஞானத்தையே தனது வடிவமாகக் கொண்டு எல்லா உலகங்களையும் அளித்து அருளும் உமையம்மை காணுமாறு, மணம் வீசுகின்ற கொன்றை மலரினையும், பிறை நிலவையும், கங்கையையும், திகழ்கின்ற பாம்பினையும் தன்னுடைய நீண்ட சடையின் மீது சேரவைத்து, நீங்குவதற்கு அரிய பிறவித் தொடர்ச்சியினின்றும் உயிர்கள் நீங்குவதற்காகத் திருச்சிற்றம்பலத்தின் உள்ளே நின்று, வானவர்கள் துதிசெய்யத் திருநடனம் புரிந்தருளும் அம்பலவாணப் பெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளை நம் தலைமீதும், அறிவினிலும் கொண்டு வணங்கிப் போற்றுவோம்.

உமாபதிசிவம், தாம் வழிபடுகடவுளாகிய தில்லைக் கூத்தப் பெருமானுக்கு வணக்கம் செலுத்துகிறார். இந்த வழிபடுகடவுளே அவர் எழுதத் தொடங்கிய நூலுக்கு ஏற்புடைக் கடவுளாகவும் அமைகின்றமை கருதத்தக்கது. அம்பலவாணப் பெருமானுடைய திருவடிவம் அலகில் சோதி ஆதலால் 'ஓங்கு ஒளியாய்' என்றும், திருவருள் ஞானமே வடிவானது ஆகையால் 'அருள்ஞானமூர்த்தி' ஆகி என்றும் கூறினார்.

உயிர்கள் பிறப்பு இறப்புட்பட்டு அடைகின்ற துயரினை நீக்குவதற்காகவே இறைவன் திருநடனம் புரிகின்றான் என்பதனை 'நீங்கலரும் பவத் தொடர்ச்சி நீங்க மன்றுள் நிருத்தம் செய்யும்' என்று கூறினார். இறைவனின் திருவடி மலர்களே உயிர்களை உய்விக்கும் ஆகையால் அவற்றைச் சிரத்தின்மீதும் சிந்தையிலும் பதித்து வணங்கிப் போற்றுவோம் என்கிறார். இறைவனின் திருநடனம் உயிர்களின் வீடு பேற்றின் பொருட்டே என்பதனையும் அவனது ஆடலை உமையம்மை கண்டு உயிர்களுக்கு மறித்துத் தந்தருளுவாள் என்பதனையும் உணர்த்தினார்.

*சிவகாமியம்மை*

**2 பரந்தபரா பரைஆதி பரனது இச்சை**
**பரஞானம் கிரியைபர போக ரூபம்**
**தரும்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்**
**தனுகரண புவன போகங்கள் தாங்க**
**விரிந்தஉபா தானங்கள் மேவி ஒன்றாய்**
**விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்து**
**அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்**
**அன்னை அருள் பாதமலர் சென்னி வைப்பாம்.**

எல்லாவிடத்தும் நீக்கமற நிறைந்து விளங்கும் மேலான பராசத்தி எனவும், திரோதானசத்தி எனவும், இறைவனது இச்சாசத்தி, உயரிய ஞானசத்தி, கிரியாசத்தி எனவும் ஐந்து வகைப்பட்ட நிலையில் நின்று உயிர்களை ஈடேற்றுவதற்காகக் கருணையே வடிவமாகித் தூயமாயை, தூவாமாயை ஆகியவற்றின் காரியங்களான உடல், கருவி, உலகம், நுகர்ச்சிப்பொருள் என்னும் இவற்றுக்கு முதற்காரணமாக விளங்கும் விந்து, மோகினி, மான் என்னும் மூன்றினோடும் கூடிப் பல்வேறுபட்ட பெயரும் தொழிலும் பெற்று விளங்கினும் தான் ஒன்றேயாயும், மலம் அற்றதாயும், சிவபெருமானின் ஐந்தொழிற்கும் வித்தாகியும், உலகத்து உயிர்களின் தீராத பிறவித்துயர் தீருமாறு அழகிய சிற்றம்பலத்துள் இறைவன் ஆடும் திருக்கூத்தைக் கண்டருளுகிறாள், அம்மை சிவகாமி. அந்த அன்னையின் அருட்பாத மலர்களைத் தலைமேல் கொண்டு வணங்குவோம்.

உலகமெங்கும் நிறைந்து பரந்த இறைவனின் பராசத்தி அவனோடு நீக்கமின்றி நிற்கும் இயல்பினை உடையது. இவ்வியல்பு வடமொழியில் தாதான்மிய சம்பந்தம் என்று சொல்லப்படும். இத்தாதான்மியம் ஒருமையின் இருமை ஆகும். அம்மையோடு அப்பனுகிச்செறிவு ஒழியாது நிற்பது இறைவனது இயல்பு.

ஆதிசத்தி எனப்படுவது மறைப்பாற்றலைக் குறித்து நின்றது. எனவே இதனோடு முன்கூறப்பட்ட பராசத்தியையும் கூட்டி ஆதிபராசத்தி எனச் சிலர் வழங்குதல் பொருத்தமற்றது.

இறைவனுடைய விழைவு, அறிவு, ஆற்றல் என்பன மூன்றும் இச்சாசத்தி, ஞானச்த்தி, கிரியாசத்தி என வழங்கப்பெறும். இவற்றோடு முன்னர்க் கூறப்பட்ட இரண்டனையும் கூட்டி இறைவனின் ஐவகைச் சத்திகள் என்பர்.

இறைவனின் சத்திகளை இடத்துக்கேற்ப மேலும் ஐவகைச் சத்தி களாகவும் எட்டுவகைச் சத்திகளாகவும் ஏழுவகைச் சத்திகளாகவும் வகைப்படுத்திக் கூறுவதும் உண்டு. இவை எல்லாம் இடம்நோக்கிக் கூறப்படுவனவே யன்றித் தம்முள் வேறு பட்டன அல்ல. ''சத்திதான் பலவோ என்னில் தான் ஒன்றே அநேகம் ஆக வைத்திடும் காரியத்தால்.'' (சிவஞானசித்தியார் சுபக்கம்-81), ''எத்திறம் நின்ருன் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்'' (சித்தியார் சுபக்கம்-165) என்னும் சிவஞானசித்தியார் திருவாக்குகளும் இங்கு நினையத்தக்கன.

அறிவே வடிவாகத் தன்னியல்பில் நிற்பது சிவம். புறப்பொருளை நோக்கி நிற்குங்கால் அதுவே சத்தி எனப்படும். எனவே இரண்டுக்கும் வேற்றுமை இல்லை.

சிவஞானசித்தியார் பரபக்கத்தில் ''ஈசன் அருள் இச்சை'' என்று தொடங்கும் சத்தி வணக்கப்பாடலும் ''அன்னை அருட்பாத மலர் சென்னி வைப்பாம்'' என்றே நிறைவுறுவது நினையத்தக்கது.

தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவராகிய ஆசிரியர் உமாபதி சிவனர் முந்திய பாடலிலும் இப் பாடலிலும் தாம்வழிபடு தெய்வமாகிய அம்பலவாணப் பெருமானுக்கும் சிவகாமியம்மைக்கும் வணக்கம் செலுத்துகிருர்.

*முத்தபிள்ளையார்*

**3 நலம்தரல்நூல் இருந்தமிழின் செய்யுள்குற்றம்**
**நண்ணுமை இடையூறு நலியாமைகருதி**
**இலங்கும்இரு குழைஅருகு பொருதுவரிசிதறி**
**இணைவேல்கள் இகழ்ந்தகயல் கண்ணியொடும் இறைவன்**

**கலந்துஅருள வரும்ஆனை முகத்தான் மும்மைக்**
**கடம்அருவி எனநிலவு கணபதியின் அருளால்**
**அலந்துமது கரமுனிவர் பரவவளர் கமலம்**
**அனையதிரு அடியிணைகள் நினைதல் செய்வாம்.**

எழுதத் தொடங்கிய நூலுக்கு நலன்கள் எல்லாம் தந்தருள வேண்டியும், இந்நூலின் தமிழ்ச் செய்யுள்களுக்கு இலக்கணத்தால் விலக்கப்பட்ட குற்றங்கள் நேராதிருக்க வேண்டியும், இந்நூலுக்கு இடையூறு விளையாதிருக்க வேண்டியும், மகரக் குழைகளைச் சென்று தாக்குமாறு காதளவும் அகன்ற செவ்வரிகள் நிறைந்த வேல்களை வென்ற அங்கயற்கண்ணியம்மையோடும் சிவபெருமான் கூடிப் பெற்று அருளிய மும்மதமும் அருவி போல் பொழியும் யானைமுகத்தைக் கொண்ட விநாயகக்கடவுளது திருவருளால் பூத்த திருவடிகளை, முனிவர்கள் வண்டு களாக மொய்க்கின்ற தாமரைத் தாள்களை நினைந்து போற்றுவோம்.

திருவடித்தாமரைகளை அருளால் அலர்ந்தவை என்று குறித்த தனால் அவற்றில் படிந்து தேன் உண்ணும் வண்டுகளை முனிவர்களாக உரைத்தார்.

## *முருகப்பெருமான்*

4 **வளம்நிலவு குலம்அமரர் அதிபதியாய் நீல**
**மயில்ஏறி வரும்ஈசன் அருள்ஞான மதலை**
**அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த**
**அகத்தியனுக்கு ஒத்துரைக்கும் அண்ணல்விறல் எண்ணாது**
**உளம்மருவு சூரன்உரம் எனதுஇடும்பை ஓங்கல்**
**ஒன்றுஇரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த**
**களபம்மலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த**
**கந்தன்மலர் அடியிணைகள் சிந்தை செய்வாம்.**

வளமிக்க வானவர்களுக்கு ஒப்பற்ற தலைவரும், நீல மயிலைத் தனக்கு ஊர்தியாகக் கொண்டவரும், சிவபெருமான் அருளிய ஞானக்குழந் தையும் எல்லையற்ற பல கலைகளையும் ஆறு அங்கங்களையும் மறைகளையும் உணர்ந்த அகத்திய முனிவருக்கு வேதத்தின் தெளி பொருளை உபதேசிக்கும் ஞானாசிரியரும், தமது வீரத்தை எண்ணிப் பார்க்காத சூரபன்மனது மார்பையும், எமது பிறவித் துன்பத்தையும், கிரவுஞ்சம் என்னும் மலையையும் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு கூறுகுமாறு ஒளிமிக்க வேற்படையைக் கையில் தாங்கியவரும் சந்தனம் அணிந்த குறமகளாகிய வள்ளியம்மையாரைத் தழுவியவரும் ஆகிய கந்தப் பெருமானின் திருவடி மலர்கள் இரண்டினையும் வணங்கிப் போற்றுவோம்.

சூரபன்மனின் உரமும், எமது இடும்பையும் கிரவுஞ்சமென்ற மலையும் ஒவ்வொன்றும் இரண்டு கூறுபடுமாறு தம் திருக்கை வேலைச் செலுத்தியவர் என்று தனித் தனியாகக் கூட்டி பொருள் கொள்ள வேண்டும்.

சிவஞானசித்தியார் பரபக்கத்துள் முருகப்பெருமான் வணக்கம் கூறிய பாடலில் அகத்தியருக்கு முருகப்பெருமான் உபதேசம் செய் தமையும், முனிவர்களின் முனிவனாகவும், தேவர்களில் தேவனாகவும், தவநிலையோரின் தெய்வமாகவும், சிவபெருமான் அருளிய திருமதலை யாகவும் ஆசிரியர் அருள்நந்திசிவம் கூறியுள்ளதை இப்பாடல் நினைவுறுத்துகிறது.

*சந்தானபரம்பரை*

**5 தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட**
**திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரில்**
**பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்**
**பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்**
**மேவியசீர் மெய்கண்ட திறலார் மாரு**
**விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்**
**தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்**
**சந்தானத்து எமையாளும் தன்மை யோரே.**

சீகண்ட பரமேசுரர் எழுந்தருளியுள்ள திருக்கயிலையைக் காக்கும் நந்தியெம்பெருமானும், அவரது திருக்கூட்டத்தில் ஒப்பற்றவராக விளங்கும் சனத்குமார முனிவரும், உலகில் மெய்ப்பொருளை நிலை நிறுத்திய சத்தியஞானதரிசனிகளும், அவருடைய திருவடியைச் சேர்ந்த பரஞ்சோதி மாமுனியும், திருவெண்ணெய்நல்லூரை உவந்து ஊராகக் கொண்ட மெய்கண்டதேவர் என்னும் ஞானத்திறம் மிக்கவரும், குன்றுப் புகழ் கொண்ட அருள்நந்திதேவர் ஆகிய ஞானசிரியரும், அருட்செல்வ மிக்க மறைஞான சம்பந்தரும் ஆகிய இவர்களின் வழிவழிவந்த ஞான பரம்பரை எம்மை ஆட்கொண்ட ஞானப்பெருமக்களாவர்.

சந்தானகுரவர்கள் என்னும் வரிசையில் அகச்சந்தானத்து ஆசிரி யர்கள் நால்வரும், புறச்சந்தானத்து உமாபதிசிவனார் உள்ளிட்ட நால்வரும் கூறப்படுதல் மரபு. அகச்சந்தானத்தில் நந்தியெம்பெருமான், சனத்குமார முனிவர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிவர் ஆகிய நால்வர் குறிக்கப்பெறுவர். புறச்சந்தானத்தில் மெய்கண்ட தேவர், அருள்நந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய நால்வரும் கூறப்பெறுவர்.

இதனை அடுத்த பாடலில் தமக்கு அருள் உபதேசம் புரிந்த ஞானசிரியராகிய மறைஞானசம்பந்தரைத் தனித்து எடுத்துக் கூறிச் சிறப்பித்து வழிபடுகிருர்.

*குரு வணக்கம்*

**6 பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்**
**பராசரமா முனிமரபு பயில ஞானச்**
**சார்புதர வந்துஅருளி எம்மை ஆண்ட**
**சைவசிகா மணிமருதைத் தலைவன் அந்தண்**
**கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியம்**
**கடவாமை நெடும்கொடியின் கரம்தகையும் கடந்தைச்**
**சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை**
**திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம்**

உலகம் விளங்கவும், சாமவேத மரபு பெருகவும், பராசர முனிவரின் பரம்பரை வளரவும், உயிர்களுக்கு ஞானத்தைக் கொழு கொம்பாக வழங்கி அருளவும் வந்து எம்மை ஆண்டுகொண்ட சைவ முடிமணியும், மருதூருக்குத் தலைவனும், அழகிய தண்ணிய மேகங்கள் தவழும் சோலையால் சூழப்பட்ட மதில்களின் மேல் நீண்ட கொடிகளாகிய கைகள் நிலவைக் கடக்காமல் தடுக்கும் பெண்ணுகடம் என்னும் திருஊரிலே மறைஞானசம்பந்தர் என்னும் திருப்பெயர் தாங்கி எழுந்தருளி விளங்குகின்ற எமது ஞானத் தந்தையாரின் திருவளரும் தாமரை மலர் போன்ற அடிகளை எம் தலை மீது புனைவோம்.

தில்லைத் திருவீதியிலே உமாபதி சிவனர் பல்லக்கில் ஏறித் திருச் சின்னங்கள் முழங்கப் பகல் விளக்கெடுப்ப, உலாவரும் போது மறைஞானசம்பந்தர் ''பட்ட கட்டையிலே பகற் குருடு போகிறது'' என்று மொழிந்தார். பல்லக்கு, பட்ட மரத்தால் செய்யப்பட்டது. பகலிலும் விளக்கு ஏந்தி உலா வருவதால் பகற்குருடு என்றும் எள்ளி உரைத்தார். இச் சொற்கள் காதில் விழுந்த அளவிலே பல்லக்கைவிட்டு இறங்கி உமாபதி சிவனர், மறைஞானசம்பந்தரை ஞான ஆசிரியராக ஏற்றுக்கொண்டு அவரைப் பின் தொடர்ந்து அவரிடத்து உபதேசம் பெற்ருர் என்பது வரலாறு. தமது நேரடி ஞானசிரியர் என்பதனலே மறைஞானசம்பந்தருக்குத் தனிப்பட ஒரு பாடலிலே உமாபதி சிவம் வணக்கம் கூறுகிருர். ஞானசிரியருக்கு அவரது மாணவர் ஞானப் புதல்வர் ஆதலினலே எந்தை என்று சிறப்பிக்கின்ருர்.

சாமவேதம் இசையோடு ஓதப்படும் மறை. சாமவேதத்திற்கு ஆயிரம் சாகைகள் உண்டு என்பர். சாகை என்பது வேதத்தின் உட்பிரிவு. கிளை என்று பொருள்தரும். ''சாகை ஆயிரமுடையார் சாமமும் ஓதுவ

துடையார்'' என்று திருஞானசம்பந்தர், திருவாழ்கொளிபுத்தூர்த் தேவாரத்தில் குறிப்பிடுகிறார். மறைஞானசம்பந்தர் சாமவேதம் ஓதும் மரபினைச் சார்ந்தவர் என்பது குறிப்பிடப்பட்டது.

மறைஞானசம்பந்தர் பராசரமுனிவருடைய குடியைச் சார்ந்தவர் என்ற சிறப்பும் இப்பாடலில் கூறப்பட்டது. பராசரமுனிவர் வியாச ருடைய தந்தையார்.

மருதூரிலே பிறந்தமையால் மருதைத் தலைவன் என்றும் திருப் பெண்ணாகடத்திலே எழுந்தருளி இருந்ததால் ''கடந்தைச் சீர்நிலவு மறைஞான சம்பந்தன்'' என்றும் இரண்டு ஊர்களும் குறிப்பிடப்பட்டன.

## நுதலியபொருள்

**7 புறச்சமயத் தவர்க்குஇருளாய் அகச்சமயத்து ஒளியாய்ப்**
**புகல்அளவைக்கு அளவாகிப் பொன்புணிபோல் அபேதப்**
**பிறப்புஇலதாய் இருள்வெளிபோல் பேதமும்சொற் பொருள்போல்**
**பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன**
**அறத்திறனால் விளைவதாய்உடல்உயிர் கண் அருக்கன்**
**அறிவொளிபோல் பிறிவுஅரும் அத்துவிதம் ஆகும்**
**சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ**
**சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்கல் உற்றாம்.**

புறப்புறம், புறம், அகப்புறம், என்று மூவகையாகப் பிரித்துக் கூறப்படும் புறச்சமயத்தவர்களுக்கு இருளாகவும், அகச் சமயத்தார்க்கு ஒளியாகவும், தருக்க நூல் முதலியன கூறுகின்ற அளவைகளில் சிறந்த அளவாகவும், பொன்னும் அணிகலனும் போல அபேதநிலையும், இருளும் ஒளியும் போல பேதநிலையும், சொல்லும் பொருளும் போல பேதா பேதநிலை யும் இல்லாமல், சைவஆகமங்களுள் கூறப்பட்ட அறத்தின் திறத்தினால் விளைவதாயும், உடலும் உயிரும், கண்ணும் ஞாயிறும், அறிவும் ஒளியும் போலப் பிரிக்கமுடியாத அத்துவிதம் என்னும் சிறப்பினை உடையதாகவும், வேதாந்தத்தைத் தெளிவுறுத்திக் கூறும் சைவசித்தாந்தத்தின் சிறப்பினை இந்நூலில் தெளிவாகக் கூறலுற்றோம்.

சமயங்கள் எல்லாம் புறப்புறம், புறம், அகப்புறம் அகம் என நான்குவகையாக மாதவச் சிவஞான மாமுனிவரால் சிவஞானமாபாடி யத்துள் பிரித்துக் கூறப்பட்டன. இந்தப் பாடலில் புறம், அகம் என இரண்டாகக் கூறப்பட்டன. எனினும் அவற்றுள் இந்த நான்கும் அடங்கும்.

புறப்புறச் சமயங்கள் என்பன வேதங்களையும் சைவ ஆகமங் களையும் உடன்படாதவை. புறச்சமயங்கள் என்பன வேதங்களை ஏற்றுக் கொண்டு சைவ ஆகமங்களை ஏற்றுக் கொள்ளாதன. அகப்புறச்சமயங்கள்

சிவபெருமானைப் பரம்பொருளாக ஏற்றுக் கொண்டும் சைவ ஆகமங்களை ஏற்றுக்கொள்ளாமல் தமக்கெனத் தனித்தனி ஆகமங்களை ஏற்றுக் கொள்ளுவன. அகச்சமயங்கள் என்பன வேதங்களையும் ஆகமங்களையும் ஏற்றுக் கொண்டும் சிவபெருமானைப் பரம்பொருளாக ஏற்றுக் கொண்டும் பொருள் உண்மை, முத்திநிலை போன்ற அடிப்படைக் கருத்துக்களில் சித்தாந்த சைவத்தினின்றும் மாறுபட்டு நிற்பன.

சித்தாந்தசைவம், இந்நால்வகைச் சமயங்களில் இருந்தும் வேறுபட்டு அவற்றினும் சிறந்ததாய் உய்யும் நெறியை ஐயம் திரிபு அற எடுத்துரைப்பதாய் உள்ளது,

புறப்புறச்சமயங்கள் ஆறுகக் கூறப்படும். அவை உலகாயதம், பௌத்த மதத்தின் நான்கு பிரிவுகளான மாத்தியமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம், ஆருகதம் எனப்படும் சமணம் ஆகியவை ஆகும்.

புறச்சமயங்கள் எனப்படுவன தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்ற ஆறும் ஆகும்.

அகப்புறச்சமயங்கள் பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம் என்ற ஆறும் ஆகும்.

அகச்சமயங்கள் என்று குறிக்கப்படுவன பாடாணவாதசைவம் (பேதவாதம்), சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்தகாரண பரிணமவாதம் எனப்படும் சிவாத்துவிதசைவம், சுத்தசைவம் என்று ஆறு வகைப்படும்.

இந்த நான்குவகைப் பாகுபாடுகளில், முதலில் கூறப்பட்டுள்ள மூன்றும் முக்கூற்றுப் புறச்சமயங்கள் எனக் கூறப்படும். மூன்றுவகையாகப் பிரித்துக் காணப்பட்ட புறச்சமயங்கள் இவை. ஆதலால் இப்பெயர் பெற்றன. இம்மூன்று வகைகளிலும் உள்ள அனைவரையும் புறச்சமயத்தவர் என்று இப்பாடலில் ஆசிரியர் குறிப்பிடுகிருர். அடிப்படை நூல்களையும் பொருள் உண்மைகளையும் சைவசித்தாந்தத்தில் கூறப்பட்ட வகையில் ஏற்றுக்கொள்ளாத இவர்களுக்குச் சைவசித்தாந்தத்தின் சிறப்பு விளங்காது ஆகையால் 'புறச்சமயத்தவர்க்கு இருளாய்' என்று கூறினர் உமாபதிசிவம்.

அகச்சமயம் என்று குறிப்பிடப்பட்ட வகையில் அடங்குகின்ற ஆறு சமயங்களைச் சேர்ந்தவர்கள் சைவசித்தாந்தத்தைப் போலவே

''ஏகன் அநேகன் இருள் கருமம்மாயை இரண்டு
ஆக இவை ஆறு ஆதிஇல்'' (திருவருட்பயன்-52)

என்பதற்கு ஏற்பப் பொருள் உண்மை கொண்டவர் ஆகையால் அவர்

களுக்குச் சித்தாந்த சைவத்தின் உண்மைகளைத் தக்க ஆசிரியர் மூலம் அறிவுறுத்தினால் அவர்கள் இவ்வுண்மைகளைத் தெரிந்துகொள்வார்கள் என்பதனால் அகச்சமயத்து ஒளியாய் என்று குறிப்பிட்டார்.

இந்திய தத்துவ ஞானங்களுள் அளவைக் கருத்துக்கள் பல்வேறு வகையாகக் கொள்ளப்படும். இவற்றின் விரிவு சிவஞான சித்தியார் சுபக்கத்தில் 'அளவை இலக்கணம்' என்ற தலைப்பில் பதினான்கு பாடல் களால் கூறப்பட்டுள்ளது. அவை சைவசித்தாந்தம் ஏற்றுக்கொள்ளும் அளவைகளை விளக்கும். சிவஞானம் உணர்த்த உணர்வதாகிய உயிரின் அறிவாற்றல் (ஆன்ம சித்சத்தி) ஒன்றே, பொறி முதலியவற்றை உள்ள வாறு உணரும் அளவையாகும் என்பதனைச் சைவசித்தாந்தம் வலியுறுத்து கிறது. தருக்கநூல் முதலிய பிறசமய நூல்கள் இக்கருத்தை ஏற்றுக் கொள்வதில்லை. எனவே அவர்கள் புகழ்கின்ற அளவைகளுக்கு எல்லாம் அளவையாகிச் சிறப்புற்று விளங்குவது சைவசித்தாந்தமே என்று வலியுறுத்த ''புகல் அளவைக்கு அளவாகி'' என்று கூறினார்.

அத்துவிதம் என்ற சொல் இறைவனுக்கும், உயிர்களுக்கும் உள்ள தொடர்பை விளக்குவது. இச்சொல்லுக்குப் பொருள் கூறவந்த பல்வேறு சமயத்தலைவர்கள் வெவ்வேறு வகையிலே பொருள் கூறினர். பொன்னும் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களும் வேறுவேறு பெயர்களைப் பெற்றிருந்தாலும் அவையாவும் பொன்னே. ஆதலால் அவற்றுக் கிடையே வேற்றுமை இல்லை என்று கொண்டவர்கள் ஏகான்மவாதிகள். அவர்கள் கொண்ட பொருள் அபேதம் எனப்படும்.

வெளி என்ற சொல் ஒளி என்ற பொருளைத் தரும். இறைவனும் உயிர்களும் இருளும் வெளியும் போல் முற்றிலும் வேற்றுமைப்பட்டு நிற்பன என்ற கருத்தைக் கொண்டவர்களுக்கு பேதவாதிகள் என்று பெயர். இக்கருத்தும் சைவசித்தாந்தத்துக்கு உடன்பாடு அன்று.

சொல்லும் அதன் பொருளும்போல ஒருவகையால் வேற்றுமைப் பட்டும் மற்றொரு வகையால் வேற்றுமைப் படாமலும் நிற்பதுதான் அத்துவிதம் என்று மற்றும் சிலர் கூறும் கருத்து பேதாபேதம் (பேதம் + அபேதம்) என்று கூறப்படும். இக்கருத்தும் சைவசித்தாந்தத்தால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. இவை மூன்றையும் விளக்குவதற்காக ''பொற் பணி போல் அபேதப் பிறப்பிலதாய்'' என்றும், ''இருள்வெளிபோல் பேதமும் இன்றி'' என்றும், ''சொற்பொருள் போல் பேதாபேதமும் இன்றி'' என்றும் இப்பாடலில் ஆசிரியர் ஒவ்வொன்றையும் தனித்தனியே கூறி மறுத்துள்ளார்.

'சைவசித்தாந்தத் தேனமுது அருந்தினர் சிலரே' என்று குமர குருபர முனிவர் கூறுகிறார். சைவசித்தாந்தக் கொள்கையை அடைவது எளிதன்று என்பதைக் குறிக்கப் ''பெருநூல் சொன்ன அறத்திறனால் விளை

வதாய்'' என்று சிறப்பித்துக் கூறினர். இங்கு பெருநூல் என்ற சொல்லால் வேதங்கள், சைவ ஆகமங்கள் திருமுறைகள் முதலியன குறிக்கப்பட்டன. அறத்தினல் விளைவது சைவசித்தாந்தம் என்று ஆசிரியர் குறிப்பிடுவதால் அறத்தின் திறன் இல்லாதபோது சைவசித்தாந்தம் எட்டப்படுவதில்லை என்பதையும் குறிப்பால் உணர்த்தினர்.

சைவ சித்தாந்தம், அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் கூறும்போது, இறைவன் கலப்பினல் ஆன்மாக்களே ஆகவும், பொருள் தன்மையால் அவ் ஆன்மாக்களில் நின்றும் வேறாகவும், உயிருக்கு உயிராதல் தன்மையால் அவ் ஆன்மாக்களின் உடனுகவும் நிற்பான் என்று கொள்ளுகிறது. இம் மூன்றுக்கும் மூன்று உவமைகள் கூறுகிருர் உமாபதி சிவம். உடலும் உயிரும் போல, கண்ணும் சூரியனும் போல, அறிவும் ஒளியும் போல என்பன அந்த உவமைகள். ஒவ்வொரு வகைக் கலப்பே கூறும் அபேதம், பேதம், பேதாபேதம் என்ற மூன்று கொள்கைக்கும் வேருக மூவகைக் கலப்பையும் கூறும் சைவ சித்தாந்தத்தின் அத்துவிதக் கொள்கை சிறப்புடையது என எடுத்துச் சொல்வதற்காகப் ''பிறிவரும் அத்துவிதமாகும் சிறப்பினதாய்'' என்று கூறுகிருர்.

வேதாந்தங்களிலே பல்வேறுவகையாகப் பொருள் கொள்ளப்பட்டு மயக்கத்திற்குக் காரணமாய் இருக்கின்ற கொள்கையைச் சைவ சித்தாந்தம் மலைவு நீக்கித் தெளிவு படுத்துவதனல் அதனை இந்நூலுள் எடுத்துக் கூறுகிருேம் என்னும் கருத்தில் ''வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன் இங்குத்தெரிக்கல் உற்ருும்'' என்று தமது குறிக்கோளை இப்பாடல் மூலம் ஆசிரியர் விளங்க உரைக்கிருர்.

இந்தப் பாடலுக்கு மிகச் சிறந்த விளக்கம் ஒன்றினை மாதவச் சிவஞான முனிவர் தமது சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் சூத்திரம், முதல் அதிகரணத்தின் இறுதியில் தந்துள்ளார்.

## தீக்கை வகைகள்

**8 மூவகைஆர் உயிர்வர்க்கம் மலத்தார் கன்ம**
**மூலமலத்தார் மூன்றும் உடையார் அன்றே**
**தீவகமாம் எனஉருவாய் வந்து நாதன்**
**திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்**
**பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்**
**பரவிவரும் அவுத்திரியால் பாச நாசம்**
**மேவஅருள் உதவும் அவுத்திரி இரண்டு திறனும்**
**வியன்கிரியை ஞானம்என விளம்பும் ஆறே**

உயிர்கள் விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் என்று மூன்று வகைப்படுவர். ஆணவ மலம் ஒன்ருல் மட்டும் பிணிக்கப்பட்டவர்

விஞ்ஞானகலர். ஆணவம் கன்மம் என்ற இரண்டு மலங்களால் பிணிக்கப்பட்டவர் பிரளயாகலர். ஆணவம் மாயை கன்மம் ஆகிய மூன்று மலங்களாலும் கட்டுண்டவர் சகலர். இம் மூன்று வகைப்பட்டவர் களையும் இறைவன் மூவேறு வகைகளிலே ஆட்கொள்ளுவான். பக்குவம் பெற்ற சகலர்க்கு அருள்புரியும் போது மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல குரு வடிவம் தாங்கி எழுந்தருளி அம்மலங்கள் மூன்றனையும் நாசம் செய்து தன் திருவடியிலே கூட்டுவான். இவ்வாறு அருள் பெறுவதற்குத் தீக்கை இன்றியமையாததாகும். தீக்கை பலவகைப்படும். திரு நோக்கால் செய்யப்படுவது சட்சுதீக்கை. திருக்கையால் தொட்டுச்செய் யப்படுவது பரிசதீக்கை. திருவாக்கால் உபதேசிப்பது வாசகதீக்கை. பாவனையால் உணர்த்தப்படுவது பாவனதீக்கை. அருள் நூலால் வழங்கப் படுவது ஆகமதீக்கை. உயிர்களின் அறிவிலே கலந்துநின்று வழங்கப் படுவது யோக தீக்கை. இவைதவிரப் பல்வேறு வகைப்பட்ட அவுத்திரி முதலிய தீக்கைகளும் உள்ளன. அவுத்திரி தீக்கை என்பது செந்தழல் வளர்த்துச் செய்யப்படுவதாகும். இது அகத்தால் இயற்றப்படும்போது ஞானவதி எனப்படும். புறத்தே ஓமத் தழலால் செய்யும் போது கிரியாவதி என்று கூறப்படும்.

தீக்ஷா என்ற வடசொல்லுக்கு மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுத்தல் என்று பொருள் கூறுவர். தீவகம் என்ற சொல் பார்வை விலங்கு என்று பொருள்படும். காட்டு விலங்குகளைப் பிடிப்பதற்கு முயலு கின்றவர்கள் முன்பே பழக்கப்பட்ட மற்றொரு விலங்கினை ஓரிடத்தில் கட்டி வைத்து அதனைக்கொண்டு, காட்டு விலங்கைப் பிடிக்கின்ற வழக் கத்தை இச்சொல்லால் நினைவுறுத்தினர். இப்பாடலில் இறைவன் சகலர்க்கு அருள்பாலிக்கும் முறையே விதந்து கூறப்பட்டது.

சைவ சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றும் என்று முந்தைய பாட்டில் கூறிய ஆசிரியர் அதனைத் தெரிந்து கொள்ளுகின்ற உரிமை உடைய உயிர்களையும், அவற்றின் வகைகளையும், அவற்றுள் சகலர்க்குப் பாச நீக்கம் தரும் தீக்கை வகைகளையும் குறிப்பிடுகிறார்.

அவுத்திரி என்பது தீ வளர்த்து அதனுள் நெய் முதலியவற்றைப் பெய்து செய்கின்ற தீக்கையாகும். இது இரண்டு வகைப்படும். கிரியாவதி ஞானவதி என்பன அவை. கிரியாவதி என்பது புறத்தே விதிப்படி குண்ட மண்டலங்களை அமைத்துக்கொண்டு கிரியை நெறி வழுவாமல் செய்யப்படுவது. ஞானவதி என்பது அகத்தே குண்ட மண்டலங்களைக் கற்பித்துக்கொண்டு நெறிவழுவாமல் இயற்றப்படுவது.

**9 விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனு திகாரம்**
**மேவும் யோகாதிகாரம் எனச்சமய விசேடம்**
**வரும்பொருவில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்**
**வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்**

**இரங்கு அடைவில் தொகைபதினொன்று எண்பத்தொன்று ஐம்பத்**
**இருநூற்றோடு இருபத்துநால் ஆறுாறு ஐந்தில் [தொன்று**
**பரந்தநெறி அறுவகையும் ஒருவிநினைவு அரிதாம்**
**பரபதத்துள் உயிர்விரவப் பயிற்றும் அன்றே.**

சமயதீக்கை, விசேடதீக்கை ஆகிய இரண்டும் வீடுபேறு எய்த விரும்பியவர்களுக்கு மந்திரங்களை ஓதும் உரிமையினையும் இறைவனை அர்ச்சனை புரிவதற்கு உரிய உரிமையையும், யோகப் பயிற்சிக்கான உரிமையையும் தருவன. நிருவாணதீக்கை என்பது உயிர் நினைத் தற்கரிய பரபதத்துள் விரவுமாறு பயிற்றுவிக்கும். ஆறு அத்துவாக் களையும் நீங்கி உயிர் பரபதத்தை அடையும். மந்திரங்கள் பதினொன்று பதங்கள் எண்பத்தொன்று. எழுத்துக்கள் ஐம்பத்தொன்று. புவனங்கள் இருநூற்று இருபத்து நான்கு, தத்துவங்கள் முப்பத்தாறு. கலைகள் ஐந்து. ஆகிய இவை ஆறும் அத்துவாக்களாகும்.

தீக்கைகள் நான்காகக் கூறப்படும். அவை சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரிய அபிடேகம் என்பனவாகும். இவற்றுள் முதல் மூன்று வகைகளைப் பற்றி இப்பாடலில் ஆசிரியர் கூறுகிறுர். சமயதீக்கை பெற்றவர்கள் சரியை நெறியில் நிற்றலுக்கு உரிமை உடையவர்கள் ஆவார்கள். விசேட தீக்கை பெற்றவர்கள் கிரியை நெறியிலும் யோக நெறியிலும் நிற்பதற்கு உரிமை உடையவர்கள் ஆவார்கள். இவற்றினும் மேலாய நிருவாண தீக்கை பெற்றவர்களே ஞானநெறியில் நின்று வீடு பேறு அடைவதற்கு உரியவர்கள் ஆவார்கள்.

உயிர் ஆறு அத்துவாக்களையும் விட்டு நீங்கியே திருவருளைப் பொருந்தி பரபதத்தை அடைய இயலும். அத்துவாக்கள் என்று சொல் லுக்கு வழிகள் என்பது பொருள். இவை உயிரை உலகோடு இணை விப்பன. உலகு, சொல் உலகு என்றும், பொருள் உலகு என்றும் இரு வகையாகக் கூறப்படும். இவற்றை முறையே சப்தப் பிரபஞ்சம், அர்த்தப் பிரபஞ்சம் என்று வடமொழியில் வழங்குவர். மந்திரம் பதம் எழுத்துக்கள் என்ற மூன்றும் சொல் உலகைக் குறித்தன. புவனம், தத்துவம், கலை என்ற மூன்றும் பொருள் உலகைக் குறித்தன.

தீக்கைகள் பற்றிய விரிவான விளக்கம் சிவஞான மாபாடியத்தில் சிறப்புப்பாயிரத்தில் மாதவச்சிவஞான முனிவரால் தரப்பட்டுள்ளது. சிவஞான சித்தியாரிலும் எட்டாம் சூத்திரத்தில் முதல் அதிகரணத்தில் அருள்நந்தி சிவம் தீக்கைகளைப் பற்றிய விரிவான செய்திகளைத் தருகிறுர்,

**10 கிரியையென மருவும்அவை யாவும் ஞானம்**
**கிடைத்தற்கு நிமித்தம்எனக் கிளக்கும் உண்மைச்**
**சரியைகிரியா யோகத் தன்மை யோர்க்குச்**
**சாலோக சாமீப சாருபங்கள்**

மருவியிடும் உயர்ஞானம் இரண்டாம் மாரு
மலம்அகல அகலாத மன்னு போதத்
திருவருள்ஒன்று ஒன்றுஅதனைத் தெளிய வோதும்
சிவாகமம்என்று உலகறியச் செப்பும் நூலே.

கிரியை எனச் சொல்லப்படும் யாவும் ஞானம் பெறுவதற்கு வழி என்று ஆகமங்கள் கூறுகின்றன. உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம் என்ற மூன்று நெறிகளிலும் நின்றவர்க்கு முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்ற மூன்றும் பேறுகளாகக் கிட்டும். உண்மைஞானம் எனப்படுகின்ற நான்காவதுநிலை இரண்டு வகைப்படும். அவை பரஞானம், அபரஞானம் என்பனவாம். பரஞானம் என்பது உயிர்களைப் பற்றியுள்ள மலங்களை அகற்றித் தான் நிலைபெற்று நிற்கும். இவ்வாறு நிற்கும் திருப்பெருகு சிவஞானம் திருவருள் எனப் படும். அத்திருவருளினைத் தெளிவுற ஓதுகின்ற சிவாகமம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் ஆகிய அபரஞானம் என்று வழங்கப்படும்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு நெறிகளும் உபாயச் சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம் என்றும், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மை ஞானம் என்றும் வகைப்படுத்தப்படும். இவற்றுள் பிற் கூறப்பட்ட நான்கும் முதலில் கூறப்பட்ட நான்கினையும் விட உயர்ந்தன. இவற்றைப் பற்றிய விளக்கங்களையும் இவற்றால் வினையும் பயன்களையும் மாதவச் சிவஞான முனிவர் சிவஞானமாபாடியத்தில் எட்டாம் சூத்திரத்துக்கு வரைந்தருளிய பேருரையில் காணலாம். அதன் முதல் அதிகரணத்தின் ஏதுவில், 'மேற்சரியை கிரியாயோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்' என்ற பகுதிக்கு உரை எழுதும் போது சிவஞான முனிவர் 'மேலாகிய உண்மைச் சரியை கிரியா யோகங்களை என்று உரைப்பினும் அமையும்' என்று எழுதினார்.

கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபர முனிவரும்,

''விரத முதலாய பலமெய்த் தவத்தி னுண்மைச்
சரியை கிரியா யோகஞ் சார்வித்து—அருள்பெருகு
சாலோகசாமீப சாரூபமும் புசிப்பித்து
ஆலோகம் தன்னை அகற்றுவித்து''

என்று குறிப்பிடுகிறார். இங்கு ஆலோகம் என்பது தெளிந்த அறிவு என்றும், அகற்றுவித்து என்பது விரிவடையச் செய்து என்றும் பொருள் தரும். குமரகுருபரரும் உண்மைச் சரியை கிரியா யோகம் என்ற சொல்லாட்சியையே பயன்படுத்துவதும் நுணுகி உணரத்தக்கது.

11 தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின்பு அவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற்று அவர்கள்திரு அடிகள் போற்றி
விளம்பிய நூல் அவைஇரண்டும் விரும்பிநோக்கிக்
கருத்தில்உறை திருவருளும் இறைவன் நூலும்
கலந்துபொது உண்மைஎனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்
ஆசில்சிவப் பிரகாசம் ஆகும் அன்றே.

குரு முதல்வராக விளங்கும் மெய்கண்ட தேவநாயனர் சிவஞான போதம் என்னும் பெயர் தாங்கிய ஒப்பற்ற நூலினை அருளிச் செய்தார். அவருடைய மாணவராகிய அருள்நந்தி சிவனர் சிவஞான சித்தியார் என்ற நூலில் சிவஞான போதத்தின் பொருளை விரித்துரைத்தார். ஆசிரியர்களாகிய இவர்கள் இருவரின் திருவடிகளையும் வணங்கி அவர்கள் அருளிய நூல்களை ஆர்வத்தோடு கற்று என் கருத்தில் உறைகின்ற திருவருளையும், இறைவனல் அருளிச்செய்யப்பட்ட சைவ ஆகமங்களை யும், கலந்து, பொது உண்மை என இரு அதிகாரங்களாக வகுத்துக் கொண்டு, என்னுடைய ஆர்வத்தின் காரணமாக நூறு விருத்தப் பாக்களைக்கொண்ட சிவப்பிரகாசம் என்னும் பெயர் தாங்கிய இந்நூலினை எழுதலுற்றேன்.

இப்பாடலில் தமது நூல் வந்த வழியினை ஆசிரியர் உமாபதிசிவம் தெரிவிக்கிறர். குரு முதல்வர் என்ற பெயருக்கு உரிமை உடையவராகிய மெய்கண்டதேவ நாயனர் சிவஞானபோதம் என்னும் முதல் நூலைச் செய் தருளினர் என்றும், பின்பு அவருடைய ஞானப்புதல்வர் அருள்நந்திசிவம் சிவஞானசித்தியாரை முதல்நூல் ஆகிய சிவஞானபோதத்தில் கூறப்பட்ட பொருள்களை விரித்துச் சிவஞானசித்தியார் இயற்றியருளினர் என்றும் கூறுகிறர். மேலே கூறப்பட்ட இரண்டு நூல்களையும் ஆர்வத்துடன் பயின்று தமது கருத்தில் உறைகின்ற திருவருளையும் இறைவன் நூலாகிய ஆகமத்தையும் கலந்து தாம் சிவப்பிரகாசம் எழுதியதாகவும் கூறுகிறர். பொது, உண்மை என்ற பிரிவுகள் முதல் இரண்டு நூல்களிலும் தெளி வாகப் புலப்படவில்லை. எனினும் தமது நூலில் அவற்றைத் தெளிவுற விளக்கிக் கூறுவதாகவும் குறிப்பிடுகிறர்.

முதல்நூல், வழிநூல் என்பவற்றைப் பின்பற்றியே இந்த நூல் அமைந்தாலும் அவற்றைப் போலப் பன்னிரண்டு நூற்பாக்கள் கொண்ட அமைப்பு சிவப்பிரகாசத்தில் காணப்படவில்லை. கருத்தால் ஒற்றுமைப் பட்டிருந்தாலும் பகுப்புமுறையில் இந்நூல் சற்றே வேறுபட்டிருக்கிறது. ஆயினும் முந்தைய இருநூல்களுக்கும் இது சார்புநூலே என்பதை உமாபதிசிவனர் தெளிவுபடுத்துகிறர்.

*அவையடக்கம்*

**12 தொன்மையவாம் எனும்எவையும் நன்று ஆகா இன்று**
**தோன்றியநூல் எனும்எவையும் தீது ஆகா துணிந்த**
**நன்மையினர் நலங்கொள்மணி பொதியும்அதன் களங்கம்**
**நவை ஆகாது எனஉண்மை நயந்திடுவர் நடுவாம்**
**தன்மையினர் பழமைஅழகு ஆராய்ந்து தரிப்பர்**
**தவறுநலம் பொருளின்கண் சார்வுஆராய்ந்து அறிதல்**
**இன்மையினர் பலர்புகழில் ஏத்துவார் ஏதிலர்உற்று**
**இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்குஎன ஒன்றுஇலரே**

பழமையான நூல்கள் யாவையும் நல்லவையாகா. இப்போது தான் தோன்றிய நூல்கள் என்பதனுல் அவற்றைத் தீது என்று ஒதுக்குதலும் கூடாது. ஒரு மாணிக்க மணி அணிகலனில் பொதியப்பட்டிருக்கும் பொழுது நல்லவர்கள் அம்மணியின் சிறப்பினை நோக்கிக் கட்டுமானத்தில் குறையிருந்தாலும்கூட அதனுல் ஏதும் குற்றமில்லை என்பதை உணர்ந்து அந்த அணிகலனை விரும்புவர். இடைப்பட்ட தன்மை உடையவர்கள் அணிகலனின் பழமையையும் அதன் அழகினையும் கருதி அதனை ஆராய்ந்து அணிந்து கொள்ளுவர். கடைப்பட்டவர்கள் மணியின் சிறப்போ குற்றமோ அல்லது அதனில் பொருந்தி இருக்கும் அணிகலனின் அழகோ, அழகின்மையோ ஆராய்ந்து அறிதற்குத் தகுதியற்றவர்கள். ஆகையினுல் பலரும் அதனைப்புகழ்ந்தால் தாமும் அதனைப் புகழ்வர். அல்லது பலரும் அதனை இகழ்ந்தால் தாமும் அதனை இகழ்வர். இத்தகையவர்கள் தமக்கென ஓர் அறிவுடையவர் அல்லர்.

பழமையான நூல்கள் யாவும் உயர்ந்தன என்ற கொள்கை தவறு. அவற்றுள் சில ஒதுக்கத் தக்கனவாகவும் இருக்கலாம். புதிதாகத் தோன்றிய நூல்கள் என்பதனுலேயே அவை யாவும் குறைவுடையன என்ற பொருளில் ஒதுக்கத்தக்கனவல்ல. இக் கருத்தைக் கூறுவதன் மூலம் பழமையான நூல்கள் பல இருக்கப் புதிதாக ஒருநூல் எழுதுவானேன் என்று கேட்போர்க்கும், புதிய நூல் என்ருல் அதனை முற்றிலும் ஓதுக்கிவிட வேண்டும் என்ற கருத்துடையோர்க்கும் பதில் சொல்லுகிருர் ஆசிரியர்.

இரத்தினக்கற்கள் அவற்றின் குற்றம் குறைவற்ற தன்மையை வைத்தே மதிப்பிடப் பெறுதல் வேண்டும். அவற்றை இழைத்துச் செய்த நகைகள் பழமையானதாக இருக்கலாம் அல்லது புதுமையானதாக இருக்கலாம். உயர்ந்தோர்கள் மாணிக்கத்தின் குற்றமற்ற தன்மை கருதியே அதனை விரும்பி அணிவர். இடைப்பட்டவர்கள் மாணிக்கத்தின் தன்மையையும் அதனைப் பதித்துள்ள நகையையும், அவற்றின் பழமையையும் ஆராய்ந்து தரித்துக் கொள்வர். கடைப்பட்டவர்கள் மணியையும் அணி

கலையும் பற்றித் தெளிந்த அறிவில்லாதவர்கள் ஆகையினால் பலர்கூடிப் புகழ்ந்தால் தாமும் புகழ்வர். பலர்கூடி இகழ்ந்தால் தாமும் இகழ்வர். ஏனெனில் இவர்கள் தமக்கென ஓர் அறிவிலர்.

## பொது அதிகாரம்

### *பதி இலக்கணம்*

**13 பலகலை ஆகமம்வேதம் யாவையினும் கருத்துப்**
**பதிபசுபாசம் தெரித்தல் பதிபரமே அதுதான்**
**நிலவும்அரு உருஇன்றிக் குணம்குறிகள் இன்றி**
**நின்மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி**
**அலகில்உயிர்க்கு உணர்வாகி அசலம் ஆகி**
**அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்**
**செலவு அரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்**
**திகழ்வதுதற் சிவம்என்பர் தெளிந்து ளோரே.**

பலகலைகள் ஆகமங்கள் வேதங்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் குறிக்கோள் இறைவன், உயிர்கள், தளைகள் என்ற மூன்று பொருள்களின் இயல்புகளை எடுத்துரைத்தலே ஆகும். இம் மூன்றனுள் இறைவன் (பதி) பரம்பொருள் ஆவான். இப் பரம்பொருள் அருவம், உருவம், அரு உருவம் ஆகிய எதுவுமில்லாதது. குணமும் குறியும் இல்லாதது. இயல்பாகவே கட்டுக்கள் இல்லாத நின்மலமானது. ஒப்பு உவமை இல்லாத தனிப்பொருள். தோற்றமும் அழிவும் அற்ற நிலையான பொருள். எல்லா உயிர்களுக்கும் உணர்வாக விளங்குவது. அசை வற்றது. பகுப்பும் பகுதிகளும் அற்றது. இன்பமே வடிவமாக விளங்குவது. சென்றடைய அரியது. எனினும் அருளே வழியாகக் கொண்டு ஒழுகும் உயிர்களுக்குச் செல்கதியாய் நிற்பது. அணுவுக்கு அணுவாகியும் பெரிய தற்கெல்லாம் பெரியதாயும் விளங்குவது. ஞானத்தால் தெளிந்த அறிவு டையவர்கள் அதனைச் சிவம் என்று குறிப்பார்.

சைவ சித்தாந்தம் உலகத்துப் பொருள்களையெல்லாம் மூன்று பிரிவு களுள் அடக்கும். ஒன்று ஒப்பற்ற ஒரே இறைவன். இரண்டாவது பல்வேறுதரப்பட்ட எண்ணற்ற உயிர்கள். மூன்று இவ்வுயிர்கள் வீடுபேறு அடைவதற்குத் தடையாக நிற்கும் தளைகள். எனவே எல்லாக்கலைகளும் ஆகமங்களும் வேதங்களும் இந்த மூன்று பிரிவான பொருள்களைப் பற்றியே பேசும். மற்றைய நூல்கள் எல்லாம் மூன்றில் ஒன்றையோ இரண்டையோ அல்லது மூன்றையும் பற்றியுமோ பேசலாம். உலகியல் நூல்கள் எல்லாம் இம்முப்பொருள்களுள் ஒன்றாகிய தளையினைப் பற்றியே கூறுவன. சில நூல்கள் உலகையும் உயிரையும் பற்றி மட்டுமே எடுத்துரைப்பதால் அவை இரண்டைப் பற்றிப் பேசுவன. வேதங்களும்

ஆகமங்களும் அருள்நூல்களும் ஞானநூல்கள் ஆகையினுல் அவை முப்பொருள்களேயும் பேசுவனவாகும். எனவே அவையே நூல்களுக்குள் சிறந்த நூல்களாக விளங்குகின்றன.

பதியெனப்படுவது பரம்பொருள். இறைவன், கடவுள் என்று இவ்வாறு பல்வேறு பெயர்களால் அழைக்கப் பெறினும் பதிப் பொருள் ஒன்றேதான். ''ஒன்று என்றது ஒன்றே காண், ஒன்றே பதி'' என்று சிவஞானபோதம் இரண்டாம் நூற்பாவில் முதல் அதிகரணத்தில் வரும் எடுத்துக்காட்டு வெண்பா இதனே வலியுறுத்தும்,

பதி தோற்றமும் ஈறும் இன்றி என்றென்றும் நிலேத்து நிற்ப தாகும்.

பதிப்பொருள் அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று தன்மையும் இல்லாதது. ஆயினும் உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு அருவாகியும் உருவாகியும் அருவுருவாகியும் தான் நினேந்த வண்ணம் தோற்றம் கொள்ளும் வல்லமை உடையவன் இறைவன். இந்தக்கருத்தைச் சிவஞானசித்தியாரில் முதல்நூற்பாவின் இரண்டாவது அதிகரணத்தில்,

''குறித்தது ஒன்று ஆகமாட்டாக் குறைவிலன் ஆத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலேமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமை யானும்
நிறுத்திடும் நினேந்த மேனி நின்மலன் அருளினுலே''

என்று வலியுறுத்துகிருர்.

உயிர்களின் பொருட்டு அருவமாயும் உருவமாயும் அருவுருவ மாயும் தனது பேரருளாலே திருமேனி கொண்டு தோன்றுங் காலத்து இறைவன் குணமும் குறியுமின்றியே நிற்பன், இங்கு குணம் என்றது மாயையின் காரியங்களாய் உயிர்களே மருவும் தாமத இராசத சாத்துவிக குணங்களேயே ஆகும். ஏனெனில் எவ்வகைக் குணங்களும் அற்ற ஒரு பொருள் இருத்தல் இயலாது. அவ்வாறு இருப்பின் அப்பொருள் பயன் படாது. எனவே நிர்க்குணம் என்பது முக்குணங்களின் நீங்கிய நிலேயே யன்றிப் பிறிதன்று. குறிகளும் அடையாளமும் இறைவனுக்கு உபசாரமே யன்றி அவனது உண்மைப் பேரியல்புகள் ஆக மாட்டா.

இயல்பாகவே பாசங்களின் நீங்கி விளங்குகின்றவன் இறைவன், எனவே அவனே நின்மலன் என்ருர். அவன் நின்மலனுய் நிற்பதனுலே தான் மலங்களில் கட்டுண்டு அல்லலுறும் உயிர்களே அவன் விடுவிக்கிருன்.

தனக்கு ஒப்பும் உயர்வும் இல்லாத பெருமையுடையனே பரம்பொருள் என்று வழிபடற்கு உரியவன் ஆதலால் ஏகமாய் என்று கூறினர். 'சிவனேடு ஒக்கும் தெய்வம் தேடினும் வேறில்லே' என்பது

அருளாளர் திருவாக்கு. தோற்றம், இருப்பு, ஒடுக்கம் என்ற மூன்று நிலைகளும் தனக்கு எய்தலின்றித் தான் மாற்றமில்லாது நின்றே இப் பேருலகத்தைத் தோற்றியும் காத்தும் ஒடுக்கியும் வருகின்ற வல்லமை உடையவன் இறைவன். ஆதலால் நித்தமாகி என்றுர்.

உயிர்களெல்லாம் அறிவுடைப் பொருள்களே ஆயினும் அவை உணர்த்தினலன்றி உணர மாட்டா. இறைவனே முற்றுணர்வுடையவன், அவன் உயிர்க்கு உயிராக நின்று காணும் உபகாரமும், காட்டும் உபகாரமும் புரிந்து வருபவன் ஆதலால் அலகில் உயிர்க்கு உணர்வாகி என்றுர். எண்ணற்ற அண்டங்களைப் படைத்து அழித்து ஒடுக்கினும இறைவன் அசைவுற்றும் விகாரப்பட்டும் நிற்பவன் அல்லன் என்பதை உணர்த்த அசலமாகி என்றுர் (சலம்—அசைவு, அசலம்—அசைவற்ற தன்மை.)

எல்லைக்குட்படுவது, பகுக்குப்படுவது கண்டிதம் என்று கூறப்படும் எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் காலவரையறைக்கும் இடவரையறைக்கும் உட்படாதவன் என்பதனை அகண்டிதமாய் என்ற சொல்லால் குறித்தார்.

'சென்றடையாத திரு வுடையானை' என்று திருஞானசம்பந்தப் பெருமானும் 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்று மணிவாசகப் பெருந்தகையும் கூறுவதற்கேற்ப, இறைவனின் திருவடிஞானமே உயிர்களை இறைவனிடத்து இட்டுச்செல்லும் என்பதனை வலியுறுத்துதற்கு ஆனந்த உருவாயன்றிச் செலஅரிதாய் என்று கூறினர். சென்றடைய வேண்டிய உயர் கதியாகி உயிர்க்கு உறுதி பயப்பது இறைவன் திருவடியே என்று உணர்த்துவதற்குச் செல்கதியாய் என்றுர்.

இறைவன் அணுவுக்கும் அணுவாயும் அப்பாலுக்கு அப்பாலாயும் ஔிளங்குபவன். திருநாவுக்கரசு நாயனர் திருத்தாண்டகத்து 'அணுவை, யார்க்கும் தெரியாத தத்துவனை........ பெரியானை' என்று உரைத்தபடி சிறிதுமாய்ப் பெரிதுமாய்த் திகழ்பவன் என்பதை உணர்த்தச் சிறிதாகி பெரிதாய்த் திகழ்வது என்றும் கூறினர். இவ்வாறு மேலே கூறப்பட்ட ஒப்பற்ற இலக்கணங்கள் யாவும் கொண்ட செம்பொருள் எதுவே அதுவே சிவம் என்ற பெயரால் அழைக்கப்படும் மெய்ப்பொருள், அதனை ஞானத்தால் தெளிந்தோரே அறிதல்கூடும் என்பதைப் புலப்படுத்த தற்சிவம் என்பார் தெளிந்துளோரே என்று உரைத்தார்.

இந்த ஒரே பாடலில் பரம்பொருளுக்குரிய இலக்கணங்கள் யாவும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. பின்வரும் ஐந்து பாடல்களில் இதில் கூறப்பட்ட யாவும் வகுத்துரைக்கப்படுகின்றன.

**14 நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்**
**நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி**
**நாடுஅரிய கருணைதிரு உருவம் ஆகி**
**நவின்றுபல கலைநாத விந்து ஆதி**
**கூடும்ஒளி வளர்குடிலை மாயை மேவிக்**
**கொடுவினைகொள் தனுகரணம் புவனம் போகம்**
**பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கும் மேனி**
**பிறங்கிய நிட்கள சகளப்பெற்றி ஆமே.**

நிலைபெற்ற பராசத்தி விழைவாற்றல், அறிவாற்றல், நிறைந்த செயலாற்றல் என்பனவற்றை வழங்க நின்மலனாகிய சிவபெருமான் அவற்றை மேவித் தன் பெருங் கருணையினாலே தனது அருளே திருவுருவாகக் கொண்டு நாதம் விந்து முதலிய தத்துவங்களோடு பொருந்தி சுத்தமாயையினோடு கூடி மறைகள் ஆகமங்கள் ஆகியவற்றை அருள்கிறான். தூவாமாயை பிரகிருதிமாயை ஆகியவற்றோடு பொருந்தி உயிர்களுக்கு அவர்களின் கொடிய வினைக்கு ஈடாக உடல், கருவிகள், உலகு, நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவற்றைத் தந்தும் நிலைநிறுத்தியும் பின்னர் ஒடுக்கியும் அருள் பாலிக்கவல்ல அருவம் உருவம் அருவுருவம் என்ற மூன்று திருமேனிகளையும் மேற்கொள்ளுகிறான்.

இறைவனுடைய இயல்புகளை முந்தியபாட்டில் தொகுத்துத் தந்த ஆசிரியர் இப்பாடலில் வகுத்து உரைக்கிறார். அறிவரிய தன்மையுடைய இறைவன் தன்னுடைய பெருங் கருணையினால் உயிர்களுக்கு அருள் பாலிப்பதன் பொருட்டு மூவகைத் திருமேனிகளையும் மேற்கொள்ளுகிறான். உருவத் திருமேனி சகளம் எனப்பெறும். அருவத் திருமேனி நிட்களம் எனப்பெறும் அருவுருவத் திருமேனி சகளநிட்களம் எனக் கூறப்படும். குடிலை என்பது சுத்தமாயையின் பெயர். மாயை என்று இப்பாடலில் கூறப்படுவது தூவாமாயையாகிய அசுத்தமாயையைக் குறித்தது.

தோற்றுவிக்கும் திருமேனி உருவம் என்றும், ஒடுக்குகின்ற திருமேனி அருவம் என்றும் கூறுவர். பதிப்பொருளாக நிற்கும் காலத்து மூவகைப்பட்ட திருமேனியும் இல்லாமல் விளங்குகின்ற வாக்கும் மனமும் கடந்த வான்கருணையாளன், உயிர்களிடத்துக் கொண்ட பேரருளாலே ஐந்தொழில் செய்யத் திருவுளம் பற்றிய போதே திருமேனி கொள்ளுகிறான், அத்திருமேனி நம்மனோரைப் போலத் தோன்றும் கருமேனி யன்று. இதனை அருள்நந்திசிவம், சிவஞானசித்தியாரில்

''உருமேனி தரித்துக் கொண்டது என்றலும் உருவு இறந்த
அருமேனி அதுவும் கண்டோம் அருவுரு ஆன போது
திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்றும் நம்தம்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே.''

என்று கூறுகிறார்.

அடுத்தபாடலில் இப்பாடலின் கருத்துத் தொடர்வது மட்டுமன்றி மேலும் விரிவாகவும் விளக்கப்பெறுகிறது.

**15 ஈங்குஇதுஎன்றது கடந்த இயல்பி னாலும்**
**ஈறுமுதல் நடுஒன்றும் இலாமை யாலும்**
**ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்**
**உண்மைபிறர்க்கு அறிவரிய ஒருமை யாலும்**
**தாங்குஅரிய வெறுப்பினோடு விருப்பும் எல்லாம்**
**சார்வுஅரிய தனிமுதல்வன் ஆதலாலும்**
**நீங்கல்அரும் உயிர்க்கு உயிராய் நிற்ற லாலும்**
**நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே.**

சிவபெருமான் இங்கு என்று சுட்டுவதையும் இவன் என்று காட்டு வதையும் கடந்த இயல்புடையவன் ஆகையாலும், தொடக்கம் நடு இறுதி ஆகிய ஒன்றும் இல்லாதவன் ஆதலாலும், ஒப்பற்ற ஞானச்சுடர் மயமாய் நிற்பவன் ஆதலாலும், அவனது உண்மைத் தன்மையை அவன் அருளால் அன்றிப் பிறரால் அறிய முடியாத தன்மையன் ஆதலாலும், வெறுப்பும் விருப்பும் இல்லாத தனிப்பரம்பொருள் ஆதலாலும் உயிர்க்கு உயிராய் நீங்காது நிற்பவன் ஆதலாலும் தான் நினைத்த உருவை மேற் கொண்டு நின்மலனாக விளங்குகிறான்.

இங்கே கூறப்பட்ட ஆறு இயல்புகளும் முற்றறிவுடமை, வரம்பில் இன்பமுடைமை, இயற்கை உணர்வினன் ஆதல், தன்வயத்தனாதல், குறைவிலா நிறைவுடைமை, வரம்பிலா ஆற்றலுடைமை என்ற இறைவனின் பெருமைகளை எடுத்துரைக்கின்றன.

ஈங்கு என்பது இடப்பொருளையும், இது என்பது சுட்டிக்காட்டும் எல்லையையும் குறிப்பவையாகும். இறைவன் இட எல்லையைக் கடந்தவன். சுட்டிறந்து நிற்பவன். எனவே அவனுடைய வியாபக நிலையை இப்பகுதி உணர்த்திற்று.

''ஆக்கம் அளவு இறுதியில்லாய்'' எனவும் ''முந்திய முதல் நடு இறுதியும் ஆனாய்'' எனவும் மாணிக்கவாசகப் பெருமான் கூறுவன வற்றை ஆழ்ந்து உணர்தல் இங்குப் பொருந்தும். இறைவன் கால எல்லை கடந்து நிற்பவன் என்பது இப்பகுதியினால் உணர்த்தப்பட்டது.

ஓங்கிவளர் ஞானமயன் என்ற சொற்கள் இறைவன் அறிவே உரு வாக நிற்றலை உணர்த்தின. பதி பசு பாசம் என்னும் மூன்றனுள், பாசம் அறிவற்ற பொருள். பதியும் பசுவும் சித்துப் பொருள்களே என்றாலும் பசுவின் அறிவு பாசத்தால் மறைக்கப்பட்டுச் சிற்றறிவாக விளங்குவது. உணர்த்தினாலன்றிப் பசுவுக்கு அறிவு விளங்குவதில்லை. எனவே பசுவின் அறிவு அறிந்தும், மறந்தும், பிறழ உணர்ந்தும் சிறுமைக்கு உட்படுகின்றது.

பதியின் அறிவோ இயல்பாகவே யாவற்றையும் சுட்டிறந்து நின்று அறிவதாகும். எனவே இறைவனை ஞானமயன் என்றதோடு அமையாது வளர் ஞானமயன் ஓங்கிய ஞானமயன் என்ற அடைகளையும் சேர்த்துக் கூறினர்.

இறைவன் ஒருவனே. அவன் சிவபெருமானே. அவனுடைய உண்மை நிலை எனப்படும் சொரூப இலக்கணம் பிறர் யாராலும் அறியப் படாத தன்மையை உடையது. ஓங்கு தழற் பிழம்பாய் சிவபெருமான் விளங்கியதும். அந்த ஒளிப் பிழம்பின் அடியையும் முடியையும் காண்பதற்குத் திருமாலும் நான்முகனும் பன்றி வடிவாய் அகழ்ந்தும் அன்ன வடிவாய்ப் பறந்தும் இருவராலும் காண இயலாத பெருமையும் கூறும் வரலாறு அவன் ஓங்கி வளர் ஞான மயன் என்பதை உணர்த்துவது. இதனையே மாணிக்கவாசகர் திருச்சதகத்து ''தன்மை பிறரால் அறியாத தலைவா'' என்று குறிப்பிடுகிறார். அறியாத என்பது அறியப்படாத என்ற பொருளைத் தந்தது.

தான் பிறரால் அறியப்படாமலும், அதே வேளையில் தான் யாவற்றையும் முழுக்க அறிந்தும் நிற்கின்ற இயல்புடைய சிவபெருமான், தலைவன் ஆகின்றான். அவ்வியல்பு இல்லாத பிறர் யாவரும் அவனுக்கு ஆட்பட்டவர்கள் ஆகிறார்கள். எனவே இறைவனின் ''உண்மை பிறர்க்கு அறிவரிய'' ஒருமை உடைய பெருமையை இங்குக் குறிப்பிட்டார்.

இறைவனை 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்று திருவள்ளுவர் குறிப்பிட்டார். ஆசிரியர் உமாபதிசிவம் 'தாங்கரிய வெறுப்பினோடு விருப்பும் எல்லாம் சார்வரிய தனிமுதல்வன்' என்றார். உயிர்களிடத்து ஒப்பற்ற பெருங்கருணை உடையவனாகிய சிவபெருமான் ஒன்றில் விருப்பும் மற்றொன்றில் வெறுப்பும் கொள்வது இலன். ஆகவே நடுநிலைமை உடையவன்.

தாங்கரிய விருப்பு, தாங்கரிய வெறுப்பு என்று இரண்டிடத்தும் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். வெறுப்பு மட்டிலுமே தாங்குதற்கு அரியது என்பது உலகில் யாவரும் அறிந்தது. ஆனால் விருப்பும் அளவு கடந்து செல்லுமிடத்துத் தாங்கற்கு அரியதே என்பதை உமாபதிசிவம் நுட்பமாக எடுத்துக் கூறுகிறார். விருப்பும் வெறுப்பும் சார்தற்கு அரியவன் இறைவன். அவனுக்கு ஒப்பும் உவமையும் இல்லையாதனால் அவன் தனிமுதல்வன் எனப்பட்டான். ''எங்கும் எவையும் எரியுறு நீர்போல் ஏகம் தங்கும் அவன் தானே தனி'' என்பது திருவருட்பயனில் ஆசிரியர் உமாபதிசிவம் கூறும் உண்மை.

உயிருக்குத் தோற்றமும் இறுதியும் இல்லை என்பது சைவ சித்தாந்தம் உணர்த்தும் உண்மை. ஆயினும் அவ்வுயிர் உடம்பொடு கூடி உலகத்தில் உலவுகின்ற போது ஓர் உடலை விட்டு நீங்கி வினையின் பயனுக்கு ஏற்ப மற்றோர் உடலைச் சேரும் இயல்பு உடையது. ஓர்

உடலில் உயிர் நிலையாகத் தங்க இயலாமல் மாறி மாறிப் புகுந்து புறட் படுவதைத் திருவள்ளுவர் ''புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம் பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு'' (குறள் 340) என்று கூறுகிறார். எனவே உயிர் நீங்கிச் சேரும் இயல்புடையது.

உயிர்க்கு உயிராய் நிற்கின்ற இறைவன் ஒரு போதும் உயிரை விட்டு நீங்காதவன் ஆகையால் நீங்கலரும் உயிர்க்கு உயிராய் நிற்ற லானும் என்று கூறினர். நீங்கலரும் என்ற சொல் நீக்கமில்லாத என்ற பொருளைத் தந்தது. அது உயிருக்கு உரியது ஆகாமல் இறைவனுக்கு உரிய சிறப்பு

இதுவரையில் ஆறு காரணங்களைக் கூறிய ஆசிரியர் உமாபதிசிவம், இத்தகைய பெருமையும் சிறப்பும் உடைய இறைவன் தான் நினைந் தவாறு நினைந்த உருவினைத் தன்பேரருளால் நிலைநிறுத்திக் கொள்ளுவான். ஏனெனில் அவன் நின்மலன் என்று எடுத்துக் கூறி இப்பாடலை நிறைவு செய்கிறார்.

இதற்கு முந்திய பாடலில் 'பிறங்கிய நிட்கள சகளப் பெற்றியாமே' என்று சுருக்கமாகக் கூறப்பட்டது இப்பாடலில் விரித்துச் சொல்லப் பட்டது.

**16 உலகம் எலாம் ஒருவனேடு ஒருத்தி ஒன்று என்று**
**உளதாகி நின்று அளவில் ஒடுங்கும் பின்னும்**
**மலம் அதனல் உளதாகும் உருவம் மாறி**
**வருவது போவது செல்வது ஆதலாலும்**
**அலைவில் அசேதனம் மாயை ஆதலாலும்**
**அணுக்கள் உரு அடையும் அறிவு இலாமையாலும்**
**நிலவு தொழில் மருவி உருநிற்ற லாலும்**
**நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே.**

இவ்வுலகம் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்படுவதாகி அதனதனுக்குரிய கால எல்லையில் தோன்றி சிலகாலம் நின்று அதன் பின்னர் ஒடுங்கும். ஒடுங்கிய உலகம் ஆணவ மலம் பக்குவப்படு வதற்காக இறைவனல் மீண்டும் தோற்றுவிக்கப்படும் மாறி மாறித் தோன்றுவதும் நிற்பதும் ஒடுங்குவதும் ஆகிய இந்த மூன்று தொழில் களையும் செய்வதற்கு எல்லையற்ற ஆற்றலுடைய ஒருவன் வேண்டும். அவனே சிவபரம்பொருள். மாயை அசைவற்றதும் அறிவற்றதும் ஆகை யினல் அதுவாகவே தோன்றுதலும் நிற்றலும் ஒடுங்குதலும் செய்ய வல்லது அன்று. உயிர்கள் அறிவுடைப் பொருட்கள் எனினும் அவற்றின் அறிவு சிற்றறிவாகவும். உணர்த்த உணரும் இயல்பு உடைய யதாகவும் இருத்தலால் தாமாகவே உருவெடுத்துக் கொள்ளும் ஆற்றல் அவற்றுக்கு இல்லை. வினைகள் மனம் மொழி மெய்களைப் பற்றியே நிற்கும். ஆதலின் அதனலும் உருவத்தைத் தோற்றுவிக்க இயலாது.

எனவே முற்றறிவும் முழு முதன்மையும் உடைய இறைவனே உயிர்கள் செய்த இருவினைக்கு ஏற்ப அவற்றிற்கு உடல், கருவி, உலகு, நுகர்ச்சிப் பொருள் என்பனவற்றைத் தோற்றுவித்து அருளுவான்.

முதல் நூலாகிய சிவஞான போதம் இவ்வுலகத்தை இறைவனே தோற்றுவித்து நிலை நிறுத்திப் பின் ஒடுக்குகிறான் என்பதை முதல் நூற் பாவில் ''அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின், தோற்றிய'' என்று அருளிச் செய்கிறது. இதனை வழி மொழிந்து சிவஞானசித்தியாரில் ஆசிரியர் அருள்நந்திசிவம் ''ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத் திடும் உலகம் எல்லாம், வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே தருபவன் ஒருவன் வேண்டும்'' என்று அருளியுள்ளார்.

இவற்றை விளக்கி ஆசிரியர் உமாபதிசிவம் ''உலகம் எலாம் ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உளதாகி நின்று அளவில் ஒடுங்கும்'' என்று எடுத்துரைக்கிறார். அளவில் உளதாகி, அளவில் நின்று, அளவில் ஒடுங்கும் என்று மூன்று இடங்களிலும் கூட்டிப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு ஒடுக்கப்பட்ட உலகம் ஒடுங்கியவாறே ஒழியாமல் மீளவும் தோற்றுவிக்கப்படும் என்ற கருத்தினை ''மலத்துளதாம்'' என்று முதல் நூலின் முதல் நூற்பாவில் ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனார் அருளிச்செய்கிறார். இப்பகுதிக்கு உரை வகுத்த சிவஞான மாமுனிவர் தமது சிவஞான போதச் சிற்றுரையில் ''உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகம் ஆதற்பொருட்டு ஒடுங்கி, ஆணவமலம் பரிபாகம் ஆதற் பொருட்டு மீளவும் உண்டாம்'' என்று கூறுகிறார். ஒடுக்கத்தையும் உளதாதலையும் இவ்வாறு இரண்டு மலங்களின் பரிபாகத்திற்காக எனக் கூறவே மூன்றாவதாகிய மாயாமல பரிபாகத்திற்காக உலகம் சிலகாலம் நிலை நிறுத்தப் பெறுகிறது என்பதை உய்த்து உணரலாம். இக்கருத்து, சிவஞானசித்தியாரில் ''உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பது என் அரன்பால் என்னில், செயிருறு மலத்தினாகும்'' என்று உரைக்கப்பட்டது.

தோற்றம் இருப்பு ஒடுக்கம் ஆகிய மூன்றிற்கும் இறைவன் ஒருவனே அதிகாரி என்பதனையும், அவனைத் தவிர உள்பொருள்கள் என சைவசித்தாந்தத்தில் கொள்ளப்பட்ட உயிர்கள், ஆணவம், வினை, மாயை இவற்றிற்கு முத்தொழில் ஆற்றும் வல்லமை இல்லை என்பதையும் இப் பாடலின் பிற் பகுதியில் ஆசிரியர் காரணம் காட்டி நிறுவுகிறார்.

மாயையே தன்னிலிருந்து தன் காரியங்களாகிய உடல், கருவி, உலகு, நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைத் தோற்றுவித்துக் கொள்ளும் என்று கொண்டால் என்ன என்ற கேள்விக்கு, மாயை அசைவற்றது அறிவும் அற்றது. எனவே தானே உருவங்களைப் படைத்துக்கொள்ளும் ஆற்றலற்றது என்று காரணம் காட்டி இவற்றைச் செய்யும் வல்லமை

உடைய இறைவன் ஒருவன் வேண்டும் என்பதை நிலைநாட்டுகிறார். அலைவில் அசேதனம் மாயை ஆதலானும் என்பது இந்தப் பகுதி. சேதனம் — அறிவுடையது. அசேதனம் — அறிவற்றது. அலைவில் — சலனமற்றது. இக்கருத்து இனிவரும் இருபத்து மூன்றாவது பாடலில் மேலும் விளக்கப்படுகிறது.

''மாயைதான் அசித்துப் பொருள் எனவே தானாக ஒரு உருவத்தைப் படைத்துக் கொள்ளும் ஆற்றல் அதற்கு இல்லை என்பது பொருந்தும் ஆனால் உயிர் என்பது சித்துப் பொருள் தானே? ஆகையினால் அது தனக்கே ஓர் உருவத்தைப் படைத்துக் கொள்ள இயலாதா? என்ற கேள்விகளுக்கு ஆசிரியர் அணுக்கள் உரு அடையும் அறிவு இலாமை யாலும் என்ற சொற்களில் விடையளிக்கிறார். அணுக்கள் என்று இங்கே சொல்லப்படுவது ஆணவமலத்தின் சேர்க்கையால் தம் வியாபாகத்தை இழந்து அணுத் தன்மைப்பட்டு நிற்கும் உயிர்களை. முற்றறிவு இல்லாமையால் முழு ஆற்றலும் இல்லாமல் போகிறது. எனவே உயிர்களே தாம் நினைந்த வடிவை எடுத்துக்கொள்ளும் என்று கூற இயலாது.

வினையே உருவத்தைத்தரும் என்று கொண்டால் என்ன? என்ற கேள்விக்கு வடிவமில்லாத ஒன்று வினை செய்ய இயலாது. எனவே வினைக்கு முந்தியது வடிவம் என்று ஆசிரியர் குறிக்கிறார். அப்படியானால் முந்திய பிறவிகளிலே ஈட்டிய வினைகள் உருவத்தை எடுத்துக் கொள்ளும் என்று கொள்ள முடியாதா வனற கேள்விக்கு, அத்தகைய வினைகள் புத்தியைப் பற்றிக்கொண்டு நிற்குமே தவிர வடிவினை ஆக்கிக் கொள்ளும் ஆற்றல் வினைக்கு இல்லை என்பதை ''நிலவு தொழில் மருவியுரு நிற்றலானும்'' என்ற சொற்களால் குறித்தார்.

மேலே கூறப்பட்ட காரணங்களால் உலகினைப் படைக்கும் ஆற்றல் மாயைக்கும் இல்லை, உயிர்களுக்கும் இல்லை, இருவினைகளுக்கும் இல்லை, மலத்திற்கும் இல்லை என்று ஒவ்வொன்றாகக் கழித்த பிறகு உலகத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றல் இறைவன் ஒருவனுக்கே உண்டு என்பதை ''நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே'' என்ற சொற்களால் வலியுறுத்தினார்.

திருவருட்பயனில் அறியும் நெறி என்ற அதிகாரத்தின் கீழ் ''ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை யிரண்டு ஆக இவை ஆறு ஆதி இல்'' என்று இவ்வாசிரியர் குறித்த பொருள்களில் ஏகன் எனப்பட்ட இறைவன் ஒருவனைத் தவிர மற்றைப் பொருள்கள் ஐந்தனுக்கும் உலகைத் தோற்றுவிக்கும் ஆற்றல் இல்லை என்பதை இப்பாடலில் ஆசிரியர் காரணம் காட்டி நிறுவுகிறார்.

இப்பாடலில் இரண்டாம் அடியில் 'வருவது போவது செல்வது ஆதலானும்' என்று வருகின்ற பகுதி பிழைபட்ட பாடமாக இருத்தல் கூடும் எனவும், சரியான பாடம் 'வருவது பேர்வது செல்வது ஆதலானும்' என்றும் அறிஞர்கள் கூறுவர்.

**17 கந்தமலர் அயன் படைக்கும் உலகம் எல்லாம்**
**கண்ணன் அளித்திடும் அவைஎம் கடவுள் தானே**
**அந்தம்உற அழித்திடுவன் ஆத லாலே**
**அயன் அரியும் அவனதுஉயர் அதிகா ரத்து**
**வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்**
**வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானில்**
**முந்துஇரவி எதிர் முளரி அலர்வுறும் ஒன்று அலர்வான்**
**முகையாம் ஒன்று ஒன்று உலரும் முறையின் ஆமே.**

மணமிக்க தாமரை மலரில் அமர்ந்து இருக்கும் பிரமன் உலகத்தைப் படைப்பான். அவன் படைத்த உலகத்தைத் திருமால் காப்பான். எம் கடவுளாகிய சிவபெருமான் அவ் உலகங்களையெல்லாம் துடைத்து ஒடுக்குவான். முற்றிலும் ஒடுக்குகிறவனே மீளவும் தோற்று விப்பான். ஆதலால் பிரமனும் திருமாலும் சிவபெருமானது உயர்ந்த அதிகாரத்துக்கு உட்பட்டு நின்றே தத்தம் தொழில்களை இயற்றுவார்கள். ஆதலால் அவ்விருவரும் சிவபெருமானின் ஏவலை மேற்கொண்டு ஒழுகு பவரே ஆவர். படைத்தும் காத்தும் ஒடுக்கியும் வருவதால் சிவபெருமான் விகாரி ஆவாரோ என்று ஐயுற வேண்டாம். வானத்தில் ஊர்கின்ற கதிரவன் முன்னிலையில் ஒரு தாமரை மொட்டு அரும்பாகும். தாமரை அரும்பு போது ஆகும். தாமரைப் போது பூவாக மலரும். நேற்றுப் பூத்த தாமரை மலர் உலர்ந்து வாடும். இவ்வாறு பல்வேறு மாற்றங் களுக்குத் தாமரை மலர்கள் ஆட்பட்டாலும் இம்மாற்றங்களால் கதிரவன் விகாரப்படுவதில்லை. அவ்வாறே சிவபெருமானும் எல்லா உலகங் களையும் படைத்து அளித்துத் துடைப்பினும் தான் மாறுதலின்றியே விளங்குவான்.

தோற்றுவித்தல் காத்தல் ஒடுக்குதல் ஆகிய மூன்று தொழிலுக்கும் அதிதெய்வங்களாக முறையே அயன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரையும் சொல்லுவது மரபு. ஆனால் முற்றழிப்புக் காலம் என்று கூறப் படும் சர்வ சங்கார காலத்தில் யாவற்றையும் ஒடுக்கித் தான் மட்டுமே நிலைபேறு உடைய தலைவனாக நிற்பவன் சிவபெருமானே. அவ்வாறு சங்கார காரணனாக இருப்பவன் எவனோ அவனே மீண்டும் உலகங் களனைத்தையும் தோற்றுவிக்கும் ஆற்றலுடையவன். அவ்வாறு தோற்று வித்த பிறகே உலகைக் காத்து அளிக்கும் தொழிலுக்குத் தேவை ஏற்படு கிறது. எனவே முற்றும் ஒடுக்கிய சிவபெருமான் தோற்றுவிக்கும் தொழிலுக்காக அயனையும், காக்கும் தொழிலுக்காகத் திருமாலையும்

தனது எல்லையற்ற, அருள் மிகுந்த ஆற்றலினால் அவர்களுக்கு அந்தந்த அதிகாரங்களைக் கொடுத்து முறைமை செய்கிறான். அயனுக்கும் அரிக்கும் உரிய வல்லமையும் தொழிலும் அவர்களிலும் மேற்பட்ட சிவபெருமானால் அவர்களுக்கு வழங்கப்பட்ட கொடை, அதனால் தான் அயனையும் அரியையும் இப்பாடலில் பெயரால் குறித்த ஆசிரியர் சிவபெருமானைக் கடவுள் என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். கடவுள் என்பது அயன் அரி உள்ளிட்ட அனைவரையும் அனைத்தையும் கடந்து நிற்பவன் என்னும் பொருட்டு,

கண்ணன் என்பது திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்றாகிய கிருட்டிணனையே பொதுவாகக் குறிக்கும். எனினும் திருமால் சிவ பெருமானை ஆயிரம் தாமரை மலர் கொண்டு வழிபடும் போது அவற்றுள் ஒரு மலர் குறையக் கண்டு தன் கண்ணையே இடந்து அர்ச்சித்த வரலாற்றை நினைப்பிக்க இப்பாடலில் திருமாலைக் குறிக்கக் கண்ணன் என்ற பெயர் பயன்படுத்தப்பட்டது.

தொழில் இயற்றும் காலத்து இயற்றுவோன் விகாரப்படுதல் உலகியல்பு. ஐந்தொழிலையும் மேவித் தனிநடத்தும் சிவபெருமானுக்கு விகாரம் நிகழ்வதில்லை. ஏனெனில் உலகத்துப் பிறரைப் போல எதனையும் முயன்று செய்யாமல் இறைவன் தன் திருவருட் குறிப்பின் வழியே யாவற்றையும் நிகழ்விக்கிறான். இதனைச் சங்கற்ப மாத்திரையால் செய்கிறான் என்று அருள் நூல்கள் கூறும். இதனால் இறைவன் நிர்விகாரி எனப்படுவன். இதற்கு உவமையாகக் கதிரவன் முன்னிலையில் தாமரை மலர்கள் மலர்வதையும், கூம்புவதையும் ஆனால் கதிரவன் மாறு பாடற்றுத் திகழ்வதையும் ஆசிரியர் குறிப்பிட்டார் இந்த உவமை முதல் நூல் ஆசிரியராலும் வழிநூல் ஆசிரியராலும் காட்டப்பட்டுள்ளமை இங்கு நினையத் தக்கது.

**18 ஏற்றஇவை அரன்அருளின் திருவிளையாட்டு ஆக**
**இயம்புவர்கள் அணுக்கள் இடர்க் கடல் நின்றும் எடுத்தே**
**ஊற்றம்மிக அருள்புரிதல் ஏது ஆக**
**உரைசெய்வர் ஒடுக்கம் இளைப்பு ஒழித்தல் மற்றைத்**
**தோற்றம்மல பாகம்வரக் காத்தல் போகம்**
**துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்தல் ஆகும்**
**போற்றல்அரும் அருள் அருளே அன்றி மற்றுப்**
**புகன்றவையும் அருள் ஒழியப் புகல் ஒணாதே.**

உயர்வாகிய இவ்வைந் தொழில்களும் சிவபெருமானுடைய திருவிளையாட்டு என்று பெரியோரால் கூறப்பெறும். உயிர்களைத் துன்பக் கடலிலிருந்தும் திருவருளால் எடுத்து இன்பக்கரை சேர்த்தலே இத்திரு விளையாட்டின் நோக்கமாகும். ஒடுக்கம் என்ற தொழில் உயிர்களை

இளைப்பாற்றுவதற்காகவும், தோற்றுவித்தல் ஆணவமலம் பக்குவப் படுவதற்காகவும், காத்தல் கன்மமலம் கழியுமாறு அதன் பயன்களை நுகர் விப்பதற்காகவும், மறைத்தல் உயிர்களுக்கு இருவினையொப்பு ஏற்படுமாறு செய்விப்பதற்காகவும், அருளல் உயிர்களைக் கட்டினின்றும் விடுவித்து வீடு பேறு அடையச் செய்வதற்காகவும் இறைவனால் இயற்றப்படுவனவாகும். இவ்வைந்தொழில்களும் இறைவனின் அருள் தொழில்களே ஆகும்.

இப்பாடலில் கூறப்பட்ட கருத்துக்களை வழிநூல் ஆசிரியராகிய அருள்நந்திசிவம் சிவஞானசித்தியார் சுபக்கத்தில் இரண்டு பாடல்களால் குறிப்பிடுகிறார். அவை;

''சொன்ன இத்தொழில்கள் என்ன காரணம் தோற்ற என்னில்
முன்னவன் விளையாட்டு என்று மொழிதலும் ஆம் உயிர்க்கு
மன்னிய புத்தி முத்தி வழங்கவும் அருளால் முன்னே
துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதும் சொல்ல லாமே.''

''அழிப்புஇளைப்பு ஆற்றல் ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்
கழித்திடல் நுகரச் செய்தல் காப்பது கன்ம ஒப்பில்
தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பு அருள் செய்தி தானும்
பழிப்புஒழி பந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்.''

இறைவன் புரியும் ஐந்தொழிலும் அவனுடைய பேரருளின் வெளிப் பாடு. இவ்வைந்தொழில்களும் உயிர்களின் பொருட்டே இறைவனால் இயற்றப்படுகின்றன என்ற கருத்துக்களை இப்பாடலில் ஆசிரியர் தெளிவுறுத்தினர்.

இனி இத் தொழில்கள் எல்லாம் இறைவனின் திருவிளையாடல் என்று கூறப்படும். விளையாட்டு என்ற சொல்லுக்கு விளக்கம் தருகின்ற மாதவச் சிவஞான முனிவர் தமது சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் நூற்பாவின் முதல் அதிகரணத்தில் சிவப்பிரகாசத்தின் இப்பாடலையே மேற்கோள்காட்டி, ''ஐங்கலப் பாரம் பொறுத்தல் சாத்தனுக்கு விளையாட் டென்பது போல அத்துணை எளிதிற் செய்யும் ஆற்றலுடைமை பற்றியே பிறிதில்லையாகலின், அஃதறியாது விளையாட்டென்றதே பற்றி வீண் தொழில் என்றல் சிறிதும் ஏலாமையறிக'' என்று விளக்கியருளுகிறார்.

இதுவரையுள்ள ஆறுபாடல்களிலும் பதியிலக்கணம் கூறப்பட்டது. இதனையடுத்த பாடல் பசு இலக்கணம் கூறுவதாகும்.

**19 எண் அரிதாய் நித்தமாய் இருள்மலத்தில் அழுந்தி**
**இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை**
**அண்ணல்அருளால் நண்ணி அவைஅவராய் அதனல்**
**அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றல்**

**புண்ணியபாவம் புரிந்து போக்குவரவு உடைத்தாய்ப்**
**புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்**
**உள்நிலவும் ஒளியதனல் இருள்அகற்றிப் பாதம்**
**உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்போர் உணர்ந்தோர்,**

பசு வருக்கம் என்று கூறப்படும் உயிர்களின் தொகுதி எண்ணிலடங்காதது. அவ்வுயிர்கள் தோற்றம் இல்லாதவை. ஆதலால் அழிவும் இல்லாதவை. உயிர் தோற்றமில் காலம் தொட்டே ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டிருப்பது. ஆணவ மலம் பரிபாகம் அடைதல் பொருட்டு, இருவினைகளின் தன்மைக்கு ஏற்பச் சிவபெருமான் அருளாலே உடம்புகளைப்பெற்று அது அவன் அவள் என்று சுட்டப்படும் தொகுதிகளாகித் தத்தம் வினைக்கு ஈடான இன்பத் துன்பங்களை எய்தியும், நல்வினை தீவினைகளைச் செய்தும் இறந்தும் பிறந்தும், வருகின்ற இயல்பினை உடையது இருள்மலமாகிய ஆணவமலம் பக்குவப்பட்ட பொழுது திருவருள் பதிதலால் உயிர்க்கு உயிராய் விளங்கும் சிவப் பேரொளியினல் இருள்மலம் நீங்கப் பெற்று இறைவன் திருவடியை அடைந்து மாருத பேரின்பத்தைத் துய்க்கும் தகுதியைப் பெறுகின்றன என்று அருளாளர்கள் உரைப்பர்.

இந்த ஒரே பாடலில் சைவசித்தாந்தத்தில் கூறப்படுகிற உயிர் இயல்பு முற்றிலுமாக விளக்கப்பட்டது.

உயிர்கள் மூன்று நிலைகளுக்கு உட்படும். அவை முறையே இருள்நிலை, மருள்நிலை, அருள்நிலை எனப்படும். இவற்றை முறையே கேவலம், சகலம், சுத்தம் என்பர். இவை காரண அவத்தை என்று கூறப்படும். இம் மூன்று நிலைகளையும் இப் பாடலில் ஆசிரியர் நுட்பமாகக் குறித்துச் செல்லுகிருர். ''எண்ணரிதாய் நித்தமாய் இருள் மலத்தில் அழுந்தி'' என்பது வரை இருள் நிலையாகிய கேவல நிலை உணர்த்தப் பட்டது. ''இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை அண்ணல் அருளால் நண்ணி, அவை அவராய் அதனல் அலகில் நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்ருல் புண்ணிய பாவம் புரிந்து, போக்குவரவு உடைத்தாய், புணரும் இருள் மலபாகம் பொருந்தியக்கால்'' என்பது வரை மருள் நிலை என்ற சகலநிலை உணர்த்தப்பட்டது. ''அருளால் உள்நிலவும் ஒளியதனல் இருள் அகற்றிப் பாதம் உற்றிடும்'' என்ற பகுதியால் அருள்நிலை என்ற சுத்தநிலை உணர்த்தப்பட்டது.

'அலகில்நிகழ் போகங்கள்' என்ற பகுதி உயிர்களுக்கு விளைகின்ற இன்பத் துன்பங்கள் காலம் நியதி என்ற வரம்புகளுக்கு உட்பட்டே நிகழும் என்பதனை விளக்கிற்று.

**20 ஏகமாய்த் தம்கால எல்லேகளில் மீளும்**
**எண்அரிய சத்தியதாய் இருள்ஒளிர இருண்ட**
**மோகமாய்ச் செம்பில்உறு களிம்புஏய்ந்து நித்த**
**மூலமலமாய் அறிவு முழுதினேயும் மறைக்கும்**
**பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி**
**பண்ணுதலால் மலம்எனவும் பகர்வர்அது பரிந்து**
**நாகம்மா நதிமதியம் பொதிசடையான் அடிகள்**
**நணுகும்வகை கருணேமிக நயக்கும் தானே.**

மூலமலமாகிய ஆணவமலம் ஒன்றேதான் ஆயினும், பக்குவம் அடைந்த காலத்து உயிரைவிட்டு நீங்கும் தன்மை உடையதாய் எண்ணுவதற்கு அரிய ஆற்றலே உடையதாய் நிற்கும். செறிந்த இருள்கூட இதனேடு ஒப்பிடும்போது ஒளி என்று கருதுமாறு இருண்டது ஆணவமலம். மயக்கத்தை விளேவிப்பது. செம்பினில் களிம்பு போன்று எப்போதும் உடனிருப்பது. எல்லாப் பெருங்கேட்டிற்கும் காரணம் ஆதலால் மூலமலம் என்ற பெயரைப்பெற்றது. உயிர்களின் அறிவு முழுவதினேயும் மறைத்து நிற்பது. மறைப்பாற்றல் என்ற திரோதானசத்தி ஆணவமலம் பக்குவப்படும் வரையில் அதற்குத் துணேயாய் நின்று, பக்குவப்பட்ட பிறகு அரவும் கங்கையும் பிறையும் அணிந்த சடையினே யுடைய சிவபெருமானின் திருவடிகளே அவ்வுயிர்கள் அடையும் வண்ணம் செய்தலால் அதனேயும் மலம் என்று கூறுவர்.

ஆணவமலம் பல உயிர்களேயும் பற்றி நிற்பினும் அது ஒன்றே தான்; பல என்று கொள்ளப்படாது. பலவுமாய்ச் சடமுமாய் இருக்கும் பொருள்கள் எல்லாம் தோன்றி நின்று அழியும் இயல்பினே உடையன. இதனே விளக்க வந்த மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் முதல் நூற்பாவின் முதல் அதிகரணத்தில் ''ஆணவமலம் சடமாயினும் பல அன்று, ஆன்மாக்கள் பலவாயினும் சடமல்ல, ஆதலால் அவற் றின்கண் செல்லாமை அறிக'' என்று கூறுகிருர்.

ஒன்ருகிய ஆணவமலம் எண்ணிறந்த உயிர்களே வெவ்வேறுபட்ட வலிமையோடு பற்றிநிற்பது எவ்வாறு என்ற கேள்வி எழுகிறது. ஆணவ மலம் ஒன்றே ஆயினும் எண்ணுவதற்கரிய சத்திகளே உடையது என்பது அதற்குரிய விடை. அது மட்டுமல்லாமல், ஒவ்வோர் உயிரையும் பற்றி யுள்ள ஆணவமலம் அந்தந்த உயிரின் பக்குவத்திற்கு ஏற்ப அதனதனுக்கு ஏற்ற கால எல்லேகளில் உயிரைப் பற்றுவதை விட்டு நீங்குகிறது. இக் கருத்துக்களே விளக்கவே ''தம் கால எல்லேகளின் மீளும் எண்ணரிய சத்தியதாய்'' என்று உரைத்தார்.

ஆணவமலம் உயிர்களின் அறிவை மறைத்தலால் இருள்மலம் எனப்படும். உலகத்துப் புற இருள் கூட ஆணவமாகிய அக இருளே

நோக்கும்போது ஒளியெனத் தோன்றும் அளவுக்கு இது கொடிய இருளாகும். திருவருட்பயனில் ஆசிரியர் உமாபதிசிவம் இருள்மலத்தின் கொடுமையை விளக்கும்போது

''ஒருபொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும்
இருபொருளும் காட்டாது இது''

என்று கூறுகிறார். புற இருள் தான் இருப்பதையாவது காட்டிப் பிற பொருள்களை மட்டிலுமே மறைக்கும். அக இருளாகிய ஆணவம் அறிவை முற்றிலும் மறைத்தலால் பிறபொருள்களின் இயல்பை உள்ளவாறு உணர முடியாமல் மறைத்தும், அதற்குக் காரணமாகிய தன்னையும் மறைத்து நிற்கும். இதனை 'இருள் ஒளிர இருண்ட' என்று கூறினார்.

ஆணவமலம் காரிய வேறுபட்டால் எட்டுவகைப்படும் என்பது ஆசிரியர் அருள்நந்திசிவம் கூறும் கருத்தாகும். அதிலிருந்து சிறிது வேறுபட்டு ஆணவமலம் காரிய வேறுபாட்டால் ஏழுவகைப்படும் என்பது சிவஞான மாபாடியத்தில் சிவஞான முனிவர் கூறும் கருத்தாகும். எனினும் ஆசிரியர் இருவரும் ஆணவ மலத்தின் முதல் காரியம் மோகம் என்றே கொள்ளுகிறார்கள்.

மாதவச் சிவஞான முனிவர் மோகம் என்ற சொல்லை விளக்கும் போது சிவஞானமாபாடியத்தில் இரண்டாம் சூத்திரத்தில் இரண்டாம் அதிகரணத்தில் ''இவற்றுள் மோகம், மதம் முதலிய அறுவகைக் காரியங் கட்கும் ஏதுவாய்க் கட்டு நீங்குங்காறும் ஆன்மாக்களோடு சகசமா யுள்ளது. மோகம் இல்வழி ஏனை மதம் முதலியன நிகழாமையின், அது முதன்மைத்தாதல் அறிக. அம்மோகமாவது, கொள்ளற்பாலது இது நீக்கற்பாலது இது வென நூன்முகத்தான் உணர்ந்தும், அரிவையர் முதலிய விடயங்களின் மயங்குதற் கேதுவாயது'' என்று உரைக்கிறார். இதனால் மோகம் அறும் காலமே ஆணவமலம் உயிரை விட்டு நீங்கும் காலம் என்பது தெளிவாகிறது.

செம்பில் களிம்பு என்ற உவமை செம்பு உள்ள காலத்திலேயே அதன் களிம்பும் உளதாயிருக்கும் என்பதையும் இரசகுளிகையால் செம்பு பொன்னாக மாறிடின் இக்களிம்பு ஒழிந்து பொன்னாவதைப் போல் சகச மலமாக விளங்கும் ஆணவம் சிவசத்தியால் தீர்ந்து உயிரும் ஆணவ மலக் குற்றத்திலிருந்தும் விடுபடும் என்பதை விளக்குவதற்கும் பயன்படுத்தப் பட்டது.

தோற்றமில் காலம் தொட்டு உயிரோடு இருந்து இருவினை யொப்பும் மல பரிபாகமும் சத்திநிபாதமும் நிகழ்ந்தவழி ஆணவ மலம் வலி மடங்கிக் கிடக்கும் ஆதலின் நித்தம் என்றார்.

ஆணவ மலம் சகச மலம் எனப்படும். அதாவது உடன் தோன்றியது எனப்படும். மாயா மலம் கன்ம மலம் இரண்டும் ஆகந்துக மலங்கள் எனப்படும். அதாவது பின் வந்து சேர்ந்தவை என்பதாம். எல்லாப் பெருங்கேட்டிற்கும் காரணமாகிய ஆணவ மலத்தைப் படிப் படியே பக்குவப்படுத்தற்காகக் கூட்டப் பெற்றவை மாயையும் கன்மமும், இதனுல் ஆணவமலம் மூலமலம் எனப்பட்டது. உயிரின் அறிவு முழுவ தினையும் இம் மூலமலம் மறைத்து நிற்கும்.

இம்மூலமலம் பக்குவப்படுவது குறித்து உயிருக்குத் துணையாய் நிற்கும் இறைவனது ஆற்றல் திரோதான சத்தி எனப்படும். ஆணவ மலம் தோற்றமில் காலந் தொட்டு உயிரின் அறிவினை முழுவதும் மறைத்துக் கொண்டு நிற்கும் ஆயினும் தத்தம் கால எல்லைகளில் நீங்கும் என உரைத்த ஆசிரியர் அவ்வாறு நீங்குவதற்குத் துணையாகிய திரோ தானம் பற்றியும் இப்பாடலிலேயே விளக்குகிருர்.

திரோதான சத்தி என்பது மறைப்பாற்றல் என்று பொருள்படும். இம் மறைப்பாற்றல் என்னும் கொள்கை சைவ சித்தாந்தத்துக்கே உரிய சிறப்பான கொள்கைகளில் ஒன்று. ஆணவமலம் பக்குவப்படுதல் பொருட்டு, கன்மமலத்தின் பயன்களை உயிர்கட்கு இறைவன் ஊட்டும் போது இத் திரோதான சத்தி மறைப்பாற்றலாக நின்று உயிரைப் படி முறையிலே இட்டுச் செல்லும். இருவினையொப்பும் மல பரிபாகமும்சத்திநி பாதமும் விளையும் காலத்து இத் திரோதான சத்தியே இறைவனின் அருட் சத்தியாக மாறி, உயிர் சிவானந்தப் பேறு பெறுவதற்குத் துணையாக நிற்கும்.

திரோதான சத்தியை திரோதான மலம் என்று சொல்வது சிவ ஞானசித்தியாரின் சுபக்கத்தில், ''கன்ம ஒப்பில் தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பு'' என்று கூறப்படுவதின் அடிப்படையிலாகும். ஒப்பற்ற பரம்பொருளின் பேராற்றல் கட்டுற்ற சிற்றுயிரில் தங்கி நின்று அதற்குப் பக்குவத்தை விளைவித்து அதன் பின்னர் வீடு பேற்றிற்கும் துணையாகிறது என்பது கருதத்தக்கது. இதனை மனத்துட் கொண்டே சிவஞான மாபாடியம் எட்டாம் நூற்பாவில் முதல் அதிகரணத்தில், ''இனி, தவம் இவ்வாறு சரியை முதல் நால் வகைப்பட்டு நிகழ்தற்கு ஏற்பப் பக்குவம் ஆதற்பொருட்டு மலத்திற்கு அனுகூலமாய் நின்று நடாத்திய திரோதான சத்தி மலம் பரிபாகம் எய்திய வழி அக் கருணை மறமாகிய செய்கை மாறி கருணை எனப்படும் முன்னைப் பராசத்தி ரூபமேயாய் .....'' என்று மாதவச் சிவஞான முனிவரால் விளக்கப் பட்டமை இங்கு நினையத் தக்கது.

உயிருக்குக் கேடு சூழும் ஆணவமலத்தின் இயல்பு கூறிய ஆசிரியர் உயிரை ஆணவத்திலிருந்தும் விடுவிக்கும் இறைவனது பேராற்றலையும்

நினைவுறுத்தும் பொருட்டு திரோதாயி பற்றியும் இப்பாடலிலேயே உடன் வைத்துக் கூறினார்.

**21** **உன்னல்அரும் பரசிவன்தன் அருளாலே நாதம்**
**உதிக்கும்மிகும் குடிலைதனில் விந்துவரும் நாதம்**
**தன்னில்அதன் ஒளிவளரும் சதாசிவராம் அவரில்**
**தயங்கவரும் ஈசர்வித்தை தனை அளிப்பர் அதனால்**
**மன்னுவர்இவ் வகைஐவர் வாய்மையினால் முன்னே**
**வந்திடும்என்று உரைசெய்த விந்துவழா வகையே**
**முன்உதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று**
**மொழிந்திடுவர் அரும்கலைகள் முதிர்ந்து ளோரே.**

நினைவுக்கு எட்டாத் சிவபெருமானது திருவருள் சத்தியினாலே சுத்தமாயையிலிருந்து நாதம் எனும் தத்துவம் தோன்றும். நாதத்திலிருந்து விந்து என்ற தத்துவம் தோன்றும். அவ்விந்துவிலிருந்து ஒளி மிகும் சதாசிவ தத்துவம் தோன்றும் சதாசிவத்திலிருந்து ஈசுரம் தோன்றும். அதனின்று சுத்த வித்தை தோன்றும். முறையே இவ் வைந்து தத்துவங்களுக்கும் அதிதெய்வங்களாக சிவம், சத்தி. சதாசிவர், மகேசுரர், உருத்திரர் என்னும் ஐவரும் நிலைபெறுவர். முன்னர்த் தோன்றும் என்று உரைக்கப்பட்ட விந்துவினின்று சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆகிய நால்வகை வாக்குகளும் உதிக்கும் என்று அரிய சிவாகமங்களைக் கற்றுணர்ந்த பெரியோர் சொல்லுவர்.

சுத்த மாயா காரியங்களைப் பற்றி எடுத்துக் கூற வந்த ஆசிரியர் நாதம் விந்து சதாசிவம் மகேசுரம் சுத்த வித்தை ஆகிய ஐந்து சிவ தத்துவங்களைத் தோன்றும் முறைமையிலே மொழிந்தார். அதனோடு அவற்றுக்குத் தலைமை பூண்டு ஒழுகும் தலைவர்களையும் குறிப்பிட்டார்.

இவ்வைந்தும் அறிவும் செயலும் (ஞானசத்தி, கிரியாசத்தி) பொருந்தி நிற்பதால் அவற்றின் விழுக்காட்டிற்கு ஏற்ப வேறுபடுத்திக் கூறப்படும். முழு ஞானமே வடிவாக நிற்பது சிவ தத்துவம் எனவும். ஆற்றலே வடிவாக நிற்பது சத்தி தத்துவம் எனவும் இவ்விரண்டும் சமமாக நிற்பது சதாசிவ தத்துவம் எனவும், செயல் மிகுந்தும் அறிவு குறைந்தும் நிற்பது ஈசுவர தத்துவம் எனவும், அறிவு மிகுந்து செயல் குறைந்து நிற்பது சுத்தவித்தை என்னும் தத்துவம் எனவும் கூறப்படும்.

**22** **உருவாதி சதுர்விதமாய் ஒன்றுஒன்று ஒவ்வா**
**உண்மையதாய் நித்தமாய் ஒன்றாய் என்றும்**
**அருவாகிக் கன்மம்ஆர் அணுக்கள் யார்க்கும்**
**ஆவாரமாய் அசித்தாய் அசலம் ஆகி**

**விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்**
**விரிந்தவகை புரிந்துஅடைவில் மேவிஅவை ஒடுங்க**
**வருகாலம் உயிர்கள் எல்லாம் மருவுஇடமாய் மலமாய்**
**மன்னியிடும் அரன்அருளால் மாயை தானே.**

அசுத்தமாயை ஆகிய தூவாமாயை உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் என்று நான்கு வகையாகி அந்நான்கும் ஒன்றைப் போல் மற்றொன்று ஒத்திராத தன்மையாகி அழியாததாகி ஆனால் அடிப்படையில் ஒன்றாய் அவ்வடிப்படை அருவம் ஆகவும் உயிர்களுக்கு வினைப்பயன்கள் விட்டு நீங்குமளவும் அவற்றின் அறிவை மறைப்பதால் அறிவற்றதாய் அசைவு அற்றதாய் வித்தியா தத்துவங்கள் ஏழும் ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் ஆக முப்பத்தொரு தத்துவங்களிலும் பரவி நிற்பதால் அவை எல்லாம் தோன்றவும் ஒடுங்கவும் இடமாகி உயிர்களை மயக்குவதும் செய்வதால் மலம் ஆகிச் சிவன் அருளால் நிலைபெற்றிருக்கும்.

உயிர் நிலைபெறுவதற்குரிய உருவம் ஆதலின் உடலை உரு என்ற சொல்லால் குறித்தார். ஏனெனில் 'மெய்யின் வழியது உயிர் தோன்றும் நிலையே'. தனு, கரணம், புவனம், போகம் என்பன ஆகிய நான்கும் ஒன்றைப் போல் ஒன்று இல்லாமலும் அவற்றுள் ஒன்றின் இயல்பு மற்றொன்றுக்கு இல்லாமையாலும் உயிர்வகை தோறும் பல்வேறு மாற்றங்கள் உடையதாலும் 'உருவாதி சதுர் விதமாய் ஒன்று ஒன்று ஒவ்வா உண்மையதாய்' என்று உரைத்தார்.

இத்துணை வேறுபாடுகள் இருப்பினும் அவற்றையெல்லாம் காரியப் படுத்தி அடிப்படையிலே மாறாதிருக்கின்ற தன்மை உடையதால் நித்த மாய் ஒன்றாய் என்று கூறினார். காரண நிலையிலே அருவமாக இருப்பதால் என்றும் அருவாகி என்றார்.

கன்மமலம் பக்குவப்படாத உயிர்களுக்கு அவற்றின் அறிவை மறைத்து நிற்பது அசுத்த மாயை ஆதலால் 'கன்மம் ஆர் அணுக்கள் யார்க்கும் ஆவாரமாய்' என்றார். ஆவாரம் மறைத்து நிற்றல். அறிவுடைப் பொருள் ஆகாது சடம் ஆதலால் தனக்கென ஒரு செயல் அற்றது ஆதலால் அசைவு அற்றது என்பார் அசித்தாய் அசலம் ஆகி என்றும் கூறினார்.

உடல்களும் கருவிகளும் உலகுகளும் நுகர்ச்சிப் பொருள்களும் என்ற இவை எல்லாம் எண்ணிறந்த வேறுபாடு உடையவை. எனவே விரிந்த இவை யாவும் நிறைந்திருப்பது அசுத்த மாயை ஆதலின் 'விரி வாய தன் செயலில் வியாபியாய்' என்றார், இவை எல்லாம் முறையே தோன்றி முறையே ஒடுங்கும் போது அவை மருவும் இடமாய் இருப்பது அசுத்தமாயை எனக் குறிப்பதற்கு 'விரிந்தவகை புரிந்து அடைவில் மேவி அவை ஒடுங்க வருகாலம் உயிர்கள் எல்லாம் மருவு இடமாய்' என்றார்.

மாயை என்பது சைவசித்தாந்தக் கொள்கையின் படி உள் பொருளாய், நித்தமாய், மல இருளில் தடுமாறும் உயிர்களுக்குக் கை விளக்குப் போல அறிவை விளக்குவதாய் உள்ளது. ஏகான்ம வாதக் கொள்கை, மாயையை உள் பொருள் எனக் கொள்ளாமல் அநிர்வசனீயம் என்று கூறும். அதோடு அமையாது மாயையை உயிரின் அறிவை விளக்குவதாகக் கொள்ளாமல் மயக்குவதாக மட்டிலுமே கொள்ளும். திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கின்படி மாயை ஒண்தளை ஆகும். அதாவது தளையே ஆயினும் ஒளி தரும் தளை. சிவஞானசித்தியார் மாயையின் இயல்பை

''நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கு ஓர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கு ஓர்
சத்தியாய்ப் புவன போகம் தனு கரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே''

என்று கூறுவது இங்கு நினையத் தக்கது.

கன்மமார் அணுக்கள் என்ற பகுதியில் கன்மாந்தம் அணுக்கள் என்ற பாடமும் கொள்ளப்படுகிறது. ஆயினும் சிவஞான மாபாடியத்தில் சுத்த மாயை பற்றிக் கூறுமிடத்தில் மாதவச் சிவஞான முனிவர் கன்மமார் அணுக்கள் என்றே பாடம் கொண்டார்.

**23 என்னைஇது எனில்உலகுக்கு உபாதானம் இல்லை**
**இறைவன்அலது எனில்அசித்துச் சித்தினிடத்து உதியா**
**மன்னிஉளதேல் முதல்வன் என்கொல் என்னில்**
**மாயைதான் அசித்து உருவாய்மருவ மாட்டாது**
**அன்னவனும் இதுவொழிய ஆக்க மாட்டான்**
**அசத்தனும் எனில் அதுவும் அவன்போல் நித்தம்**
**முன்னவன்அவ் அசித்தை விரித்து எவையும் ஆக்கும்**
**முதன்மைஅது கொடுத்ததுஎன மொழிந்திடாரே.**

இம்மாயை எதற்காக உண்டு என்று கொள்ளப்பட வேண்டும் எனில் உலகிற்கு முதற்காரணமாக அமைவது மாயையே. ஆதலின் மாயை உள்பொருளே. சிலர் இறைவனே உலகுக்கு முதல் காரணம் என்று கொள்ளுகிறுர்களே என்று கேட்பின், இறைவன் சித்துப்பொருள். அதாவது அறிவுடைப் பொருள். அறிவுடைப் பொருளிலிருந்து அறிவற்ற பொருள்கள் தோன்றுவதில்லை. உலகம் அசித்துப் பொருள். அது இறைவனுகிய சித்தினிடத்தினிருந்து தோன்றும் என்றல் பொருந் தாது. அவ்வாறு எனில் மாயையே முதற் காரணமாக இருக்கும் பொழுது இறைவன் எதற்காக எனக் கேட்பின், மாயை அறிவற்ற பொருள் ஆதலின் அது எண்ணற்ற வகைப்பட்ட உடல், கருவி, உலகு, நுகர்ச்சிப் பொருள் முதலியனவாகத் தன்னைத்தானே படைத்துக்

கொள்ளும் ஆற்றல் அற்றது. இறைவனும் இம்மாயையை முதற் காரணமாகக் கொண்டு அல்லாமல் அவற்றைப் படைக்க மாட்டான். அவ்வாறு கொண்டால் மாயையின்றிப் படைக்கும் ஆற்றல் அற்றவன் இறைவன் என்று ஆகிவிடாதோ? எனக் கேட்பின், மாயையும் இறைவனைப் போலவே என்றும் உள் பொருள். எனவே இறைவன் புதிதாக ஒரு பொருளை முதற் காரணமாகத் தேடிக் கொள்ள வேண்டாம். இறைவனே அசித்தாகிய மாயையைக் கொண்டு எல்லாவற்றையும் ஆக்குவான். அவனது ஆக்கும் ஆற்றலை மாயை அவனுக்குத் தந்தது என்று உண்மை உணர்ந்தோர் கூற மாட்டார்கள்.

ஒரு பொருளைத் தோற்றுவிப்பதற்கு மூன்று காரணங்கள் தேவை என்பர். அவை முதற் காரணம் துணைக் காரணம் நிமித்த காரணம் எனப்படும். களி மண்ணைக் கொண்டு சக்கரம், தண்டு முதலியவற்றைப் பயன் படுத்தி ஒருவன் பானையை வனைகிறான். இவற்றுள் மண் முதற் காரணம் எனப்படும். அவன் பயன்படுத்தும் கருவிகளான சக்கரம், தண்டு போன்றவை துணைக் காரணம் எனப்படும். வனைகின்றவன் நிமித்த காரணன் எனப்படுவான். முதற் காரணத்தை உபாதான காரணம் என்று வட மொழியில் வழங்குவர். துணைக் காரணத்தை சகாரி என வழங்குவர். இவற்றை ஆங்கிலத்தில் முறையே Material Cause என்றும், Instrumental Cause என்றும் Efficient Cause எனவும் கூறுவர்.

இந்தப் பாடலில் இறைவனும் உள் பொருள் மாயையும் உள் பொருள் என்று கொள்ளாமல் இரண்டில் ஒன்றே உள் பொருளாகவும் உலகத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றல் உடையதாகவும் கொண்டால் என்ன என்ற கேள்விக்கு விடையளிக்கிறார் ஆசிரியர். வினாக்களையும் அவரே எழுப்பிக் கொண்டு விடைகளையும் அவரே தருகிறார்.

முந்திய பாடலில் அரனருளால் மாயை மன்னியிடும் என்று குறிப்பிட்டதனால் இரண்டின் இன்றியமையாமையும் இப் பாடலில் விளக்குகிறார். இறைவனே உலகுக்கு முதற் காரணம் என்று கொண்டால் அறிவுடைப் பொருளில் அறிவற்ற பொருள் தோன்றும் என்னும் குற்றம் விளையும். இறைவன் என ஒருவன் வேண்டா; மாயையே பல்வேறு வகைப்பட்ட உலகாகவும், பொருள்களாகவும் தன்னை ஆக்கிக் கொள்ளும் என்றால், அறிவற்ற பொருள் தானே தன்னை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றல் உடையது என்ற குற்றம் விளையும். அறிவற்ற உலகத்திற்கு அறிவற்ற மூலப் பொருளாக விளங்குவது மாயை, அது தானே தன்னைத் தோற்றுவித்துக் கொள்ளாது. ஆதலால் சித்துப் பொருள் ஆகிய முதல்வன் அம் மாயையிலிருந்து உலகத்தையும் மற்றைப் பொருள்களையும் தோற்றுவிக்கிறான். எனவே இரண்டும் வேண்டும்.

சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் சூத்திரத்தின் தோற்று வாயிலும் அதன் பின்னர் இரண்டாம் சூத்திரத்தின் இரண்டாம் அதிகரணத்திலும் மாதவச் சிவஞான முனிவர் மாயை உண்டு என்ப தையும் மாயை உலகுக்கு முதற் காரணம் என்பதையும் விரித்து விளக்கு கிருர். இப்பாடலில் வருகிற கருத்து, உலகிற்கு முதற் காரணம் பிரமனே என்னும் கொள்கையாளரை மறுப்பதற்கு எழுந்தது என்பதையும் மாதவச் சிவஞான முனிவர் மாபாடியத்தில் தெளிவுறுத்துகிருர். ''இதனுனே ஏனையோர் போல முதல்வனுந் தன் செய்திக்கு முதற் காரணம் வேண்டுமாயின் அஃது ஏனை முதற் காரணங்கள் போல ஒரோ வழிக் கிடையாதொழியும்; ஒழியவே, அவ்வழி முதல்வன் உலகத்தை ஆக்க மாட்டாஞய் அசத்தாஞவான் செல்லும் எனப் பிரம முதற் காரண வாதிகள் கூறும் ஆசங்கையை நீக்கியவாறுமாயிற்று. இவையனைத்தும் விளக்கிய 'அன்னவனுமிதுவொழிய வாக்க மாட்டானசத்தாஞ மெனி னதுவு மவன் போனித்த முன்னவனவ்வசித்தை விரித்தெவையு மாக்கு முதன்மையது கொடுத்ததெனை மொழிந்திடாரே' என்ருர் புடை நூல் ஆசிரியரும்.'' என்பது சிவஞான முனிவரின் பேருரைப் பகுதி.

**24 படைத்ததுஒரு படிஇன்றிப் பறவைபசு நரராய்ப்**
**பண்ணியதுஎன் முன்னைவினைப் பான்மை என்பர்**
**அடுத்தவினை உளதாயின் இறைஏன் என்னில்**
**அசேதனம் மற்று அவைஆவிக்கு அமைத்தது ஆகும்**
**எடுத்தவினை உருஉறுவது உயிரேல் தானே**
**இருவினைக்குத் தக்கஉடல் எய்தும் என்னில்**
**சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவு ஒன்று இல்லாத்**
**தன்மையனும் கூடஒரு சங்கை இன்றே.**

உலகத்துப் பொருள்களை இறைவனே தோற்றுவித்தான் என்று முந்திய பாடலில் குறிப்பிட்டது பொருத்தமுடையதாஞல், வேண்டுதல் வேண்டாமை இலாதவஞகிய இறைவன் அவற்றை ஒரு தன்மைத்தாய்ப் படைக்காதது ஏன்? பறவை பசு மானிடர் என்று பல தன்மைகளை உடையனவாய் ஏன் படைக்க வேண்டும்? என்ற கேள்விகளுக்கு ஆன்மாக்கள் முற்பிறவியில் செய்த வினைகளின் பயன்களுக்கு ஏற்ப இந்தப் பிறவியில் வேறுபாடுகள் உளவாயின என்பர் பெரியோர். சங்கிலித் தொடர்போல் வரும் வினைக்கேற்ற பிறவி என்ருல் இறைவன் ஒருவன் எதற்காக என்ற கேள்வி எழும். எனினும் வினைக்கேற்ற பிறவி களும் அறிவற்றவை. அதாவது அசேதனம். அவை வந்து உயிர்களைத் தாமே பொருந்துவதில்லை. அவற்றைப் பொருத்தியவன் இறைவனே. பழவினைக்கு ஈடான பிறவியை உயிரே விளைவித்துக் கொள்ளும் என்று கொண்டால் என்ன என்று கேட்பின், வினையும் வினைக்கேற்ற பிறவியும் அறிவற்றவை. உயிர் அறிவுடைய பொருள் ஆயினும் தாஞகச் செயல்

படும் ஆற்றல் அற்றது. எனவே அகர்த்தா எனப்படும். செயலாற்றல் அற்ற சடமும் தனக்கென சுதந்திர ஞானமில்லாத உயிரும் கூடுமோ என்று ஐயப்பட இடமேயில்லை. கூடவே முடியாது என்பதுதான் உண்மை.

முந்திய பாட்டில் மாயையும் இறைவனும் என இரண்டு பொருள் களைக் கொள்வானேன் என்ற வினவினை எழுப்பி விடையிறுத்த ஆசிரியர், இந்தப் பாடலில் வினையும் இறைவனும் என இரண்டு பொருள்கள் வேண்டுமோ என்ற கேள்வியை எழுப்பி அதற்கும் விடை தருகிறார்.

வினைக்கேற்ற பிறவிகளை இறைவன் தருவதால் புல்லும் பூடும் செடியும் விலங்கும் பறவையும் மனிதனும் எனப் பிறவி வேற்றுமைகள் உண்டாயின. மனிதப் பிறவியுள்ளும் கூர்த்த அறிவும் மந்த அறிவும் செல்வமும் வறுமையும் வலிமையும் நொய்மையும் ஆகிய வேறுபாடுகள் உண்டாயின.

வினையும் இறைவனும் ஆகிய இரண்டும் உண்டு என்று கொண்டால் முதன்மை வினைக்கா அன்றி இறைவனுக்கா என்ற கேள்வி எழும். இக் கேள்விக்கான விடையைச் சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் மாதவச் சிவஞான முனிவர் விரிவாக எடுத்துக் கூறுகிறார். வினை என்பது இறைவனது ஆணை என்பதைத் தெளிவுறுத்துகிறார்.

**25** **அல்லல்மிக உயிர்க்குஇவை நான் அனைத்தது ஈசன்**
**அருவினைகள் அருந்துதற்கோ வினையோ அன்றிச்**
**சொல்லிவரும் மாயையோ அணுவை முந்தச்**
**சூழ்ந்ததுஎனும் உரைமுதல்ஓர் தொடக்கு இலார்பால்**
**ஒல்லைவரும் எனில்உளதாம் உயிர் உண்டாவே**
**உள்துமலம் மலம்உள தாய் ஒழிந்த எல்லாம்**
**நெல்லின்முளை தவிடுஉமிபோல் அனாதி யாக**
**நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்தும் ஆறே**

அவ்வாறுயின் இவ்வுடல்களை உயிர்களோடு இறைவன் பொருத்தியது நீக்குதற்கரிய துன்பத்தைத் தருகின்ற இருவினைப் பயன்களை நுகர்வதற்காக என்று ஆகிறது. காலத்தால் உயிரை முற்பட்டுப் பற்றிக் கொண்டது. வினையோ அல்லது வினைகளுக்கு இடமாகச் சொல்லப்படும் மாயையோ என்று ஒரு கேள்வி எழுகிறது. அக்கேள்விக்கு விடையாவது மாயையும் கன்மமும் கட்டற்ற உயிரைப் பற்றிக்கொள்ளவில்லை. தோற்றமில் காலம் தொட்டே உயிர் மூல மலம் எனப்படும் ஆணவமலத்தால் கட்டுண்டு கிடக்கிறது. இம்மூலமலம் உள்ளதனாலேயே மற்றைய

மலங்களும் நெல்லிலே உண்டான முளையும் தவிடும் உமியும் நெல்லுள்ள போதே தோன்றினாற் போல அநாதியாக உள்ளன. இது சிவாகமங்கள் உணர்த்தியருளுகிற முறைமையாகும்.

ஒரு நுட்பமான கேள்வி இங்கே எழுப்பி விடையிறுக்கப்படுகிறது. உயிர்களுக்கு உடலைத் தந்தது மாயை. அவ்வுடல்கள் பல்வேறு வகைப் பட்டிருப்பதற்குக் காரணம் அவ்வுயிர்களின் முன்னை வினைப் பயன்கள் அப்படியானால் உடல் முந்தி வந்ததா? அல்லது வினை முந்தி வந்ததா? காலத்தால் முற்பட்டது வினை என்றால் உடல் இல்லாமல் உயிரால் வினை இயற்ற முடியாது. காலத்தால் முந்தி வந்தது உடல் என்றால் அந்த உடலைப் பெற அந்த உயிர் என்ன வினை செய்தது? இக்கேள்வி வரம்பற்று ஓடுவது போல், விடைதர இயலாதது போல் தோன்றுகிறது என்பது உண்மை. ஆசிரியர் சைவ ஆகமங்களின் அடிப்படையில் இதற்கு விடை தருகிறார்.

வினை தோன்றியதால் உடம்போ அல்லது உடல் ஈட்டிய வினையோ எது காலத்தால் முற்பட்டது என்ற கேள்விக்கே இடமில்லை. ஏனெனில் குற்றமற்ற உயிரை மலங்கள் எனப்படும் மாயையும் கன்மமும் பற்றவில்லை அநாதியே உயிர்க்குற்றமாகிய ஆணவமலத்தால் பிணிக்கப்பட்டிருக்கிறது உயிர். ஆணவமே மற்றைத் தொடக்குகளுக்கும் காரணமாகிறது அதாவது உயிருள்ள பொழுதே ஆணவ மலமும் உள்ளது. அதன் விளைவே மாயை கன்மம் ஆகியன உயிரைப்பற்றுவதற்கு இடம் தருகிறது.

இதனை விளக்குவதற்கு நெல்மணியை உவமை காட்டுகிறார் ஆசிரியர். நெல்மணியில் முக்கியமான பகுதி அரிசி, அது தவிர உமியும் தவிடும் முளையும் நெல்லுண்டான போதே உண்டு. இவ்வாறே உயிரும் மும்மலங்களும் தோற்றமில் காலந் தொட்டே உடனாயின.

இந்த உவமை முதல் நூலாகிய சிவஞான போதத்தில் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் மெய்கண்ட தேவநாயனார் அருளிய எடுத்துக்காட்டு வெண்பாவில்

''நெல்லிற்கு உமியும் நிகழ்செம்பி னில்களிம்பும்
சொல்லில் புதிதன்று தொன்மையே''

என்ற பகுதியில் பயன்படுத்தப்பட்டது.

இதனை வழி நூலாசிரியராகிய அருள்நந்தி சிவம் சிவஞான சித்தியார் சுபக்கத்தில், மும்மலம் நெல்லினுக்கு முளையோடு தவிடு உமிப்போல் மம்மர் செய்து அணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று'' என்று வழிமொழிந்துரைக்கின்றார்.

இப்பாடலில் முதல் அடியில் அருந்துதற்கோ என்பது வினாப் பொருளில் வராமல் 'அருந்துதற்கே' என்று கொள்ளுமாறு ஆசிரியரால்

அமைக்கப்பட்டுள்ளது. முந்தைய பாட்டில் கூறப்பட்ட கருத்துக்களை உடன்பட்டு மொழிந்தது அது.

**26 அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை**
**அராகம்இவை அனந்தரால் மாயைதனில் ஆகும்**
**உருத்திரரால் கலை அதனில் பிரகிருதி குணங்கள்**
**உளவாகும் ஆங்காரம் புந்திதனில் உதிக்கும்**
**தெரிந்தஇது திரிவிதமாம் தைசத வைகாரி**
**திகழ்தரு பூதாதிஎனத் திருத்திய சாத்துவிதம்**
**விரித்தகுணம் மனம்புத்தி இந்திரியம் என்று**
**விளம்பிய சோத்திராதி முதல் விளங்கியிடும் விரிந்தே.**

விருப்பமிகும் கலை காலம் நியதி வித்தை அராகம் ஆகிய ஐந்தும் அநந்த தேவர் அருளினுல் தூவா மாயை (அசுத்த மாயை)யில் தோன்றும். கலையினின்றும் உருத்திரர் அருளினுல் மூலப்பகுதி தோன்றும். அதனின்றும் குண தத்துவம் தோன்றும். புத்தியிலிருந்து அகங்காரம் உதிக்கும். அகங்காரம் மூன்று வகைப்படும். அவை முறையே தைசதம் வைகாரி பூதாதி என்று கூறப்படும். இம் மூன்று வகைப்பட்ட அகங்காரங்களில் தைசதம் என்று சொல்லப்படும் சாத்துவிக அகங்காரத்தினின்றும் மனமும் செவி முதலிய அறிவுப் பொறிகள் ஐந்தும் தோன்றி விளங்கும்.

அநந்த தேவர் அருளால் அதோமாயை எனப்பட்ட அசுத்த மாயையிலிருந்தும் கலை காலம் நியதியுடன் வித்தை அராகம் ஆகிய வையும் தோன்றும். சிவஞான சித்தியார் சுபக்கத்தில் இரண்டாம் சூத்திரத்தில் மூன்ரும் அதிகரணத்தில், ''மாயையில் காலமொடு நியதி பின் கலாதி தோன்றும்'' என ஆசிரியர் அருள்நத்தி தேவர் கூறுகிருர். ஆனுல் இப்பாடலிலோ கலை முதலாகத் தோற்ற முறைமை கூறுகிருர். மேல் எழுந்தவாரியாகப் பார்க்கும் போது இது முரண்பாடு உடையது போல் தோன்றும். சித்தியாரில் உலகத் தோற்ற ஒடுக்கங்கள் கூறப் பட்டன. எனவே கால தத்துவம் தோன்றிய பிறகே மற்றைத் தத்துவங்கள் தோன்றும் எனப்பட்டது. இந்நூல் சார்பு நூல் ஆகை யினுலும் இந்நூல் ஆசிரியர் உயிர்களுக்கு உணர்த்தும் முறையிலே தம் நூலை அமைத்துக் கொண்டதனுல் கலை என்பதனை முதலிலே வைத்துக் கூறினுர்.

காலம் முதலாகச் சொல்லுவது தோற்ற முறைமை. கலை முதலாகச் சொல்லுவது தொழிற்பாட்டு முறைமை. இங்கே கலை எனச் சொல்லப் பட்டது இன்றைக்கு அச்சொல் வழங்கப்படும் பொருளில் அன்று என்பதை நினைவிலே கொள்ள வேண்டும். இங்குக் கூறப்படும் கலை, கலித்தல் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்து 'சற்றே நீங்குதல்' என்ற பொருளைத் தரும்.

மாயையிலிருந்து காலம் நியதி கலை என்ற மூன்றும் தனித்தனியே தோன்றும் கலையினின்று வித்தையும் வித்தையிலிருந்து அராகமும் தோன்றும். இவ்வைந்தும் உயிருக்குச் சட்டை போல் விளங்குதலின் இவற்றைப் பஞ்ச கஞ்சுகம் என்பர். இவற்ருேடும் கூடிய போதே உயிர் துய்ப்பதற்குரிய இயல்பினைப் பெற்று புருடன் என்ற பெயரைப் பெறும். இதனைப் போற்றிப் பஃருெடையில், ''மூல அரும் கட்டில் உயிர் மூடமாய் உள் கிடப்பக் காலம் நியதி அது காட்டி — மேலோங்கும் முந்தி வியன் கட்டில் உயிர் சேர்த்துக் கலை வித்தை அந்த அராகம் அவை முன்பு'' என்று குறிக்கப்பட்டது. கஞ்சுகம் என்பது சட்டை அல்லது போர்வை என்ற பொருளைத் தரும்.

கலையிலிருந்தே மூலப் பகுதியும் தோன்றும். அம் மூலப் பகுதி சாத்துவிகம் ராசதம் தாமதம் ஆகிய முக்குண வடிவங்களைத் தோற்று விக்கும். இம் முக்குணங்களும் ஏற்றத் தாழ்வு இன்றித் தம்முள் ஒத்து நிற்கும் இடம் சித்தம் எனவும், ஏற்றத் தாழ்வு உற்ற இடம் புத்தி எனவும் கூறப்படும்.

புத்தியிலிருந்து ஆங்காரம் என்ற தத்துவம் தோன்றும். இது மூன்று வகைப்படும். அவை முறையே தைசதம் வைகாரி பூதாதி என்று கூறப்படும். தைசதம் எனப்பட்டது ஒளி அல்லது அறிவு என்று பொருள் படும். வைகாரிகம் எனப்படுவது தொழில் அல்லது செயல் என்று பொருள்படும். பூதாதி என்பது உருவம் எனப் பொருள்படும்.

இப் பாடலின் இரண்டாவது அடியில் வரும் 'புந்தி தனில்' என்பதைப் 'புத்தி தனில்' என்று பாடங் கொள்வாரும் உளர்.

இவற்றுள் ஒளியாகிய தைசத அகங்காரமும் சாத்துவிக குணமும் மனத்தினையும் அறிவுப் பொறிகள் எனப்பட்ட செவி, மெய், கண், நா, மூக்கு என்ற ஐந்தினையும் விரித்து அளிக்கும். இவை அறிவாகிய ஒளி வடிவாய் இருத்தலால் அறிவுக் கருவிகள் அல்லது ஞானேந்திரியங்கள் எனப்பட்டு ஒலி, ஊறு, உருவம், சுவை, நாற்றம் என்ற ஐந்தினையும் அறிவதற்குத் துணையாய் உள்ளன. இவ்வைந்தும் வடமொழியில் சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என வழங்கப்படும்.

**27 மன்னியகன் மேந்திரியம் ஆன இராசதம் சேர்**
**வாக்குஆதி வைகாரி மருவிவரும் சத்தம்**
**தன்னைமுதல் ஆகிய தாமதம் மிகுமாத்திரை பின்**
**தரும்இதனில் வான்அநிலம் அனல்புனல் மண்சத்தம்**
**முன்னதனில்வெளி ஆதி ஒன்று ஒன்று ஆகும்**
**முறையில்உறும் இருமைஅயன் முடிவாம் முன்னே**
**உன்னுசதா சிவர்ஆதி அதிபதிகள் ஒடுக்கம்**
**உதித்தஅடைவு எனஉரைப்பர் உணர்ந்துளோரே.**

நிலைபெற்ற செயற் பொறிகள் (கன்மேந்திரியங்கள்) வைகாரி அகங்காரத்தில் இராசத குணம் மிகுந்த வாக்கு முதலிய ஐந்தாக அவ்வவ் வற்றுக்குரிய விடயங்களோடு பொருந்தித் தோன்றும். இறுதியிலே கூறப்பட்ட பூதாதி அகங்காரம் தாமத குணம் மிக்கதாய் சப்தத்தை முதலாகக் கொண்ட தன்மாத்திரைகள் எனப்படும் ஐந்தையும் தரும். தன்மாத்திரைகளிலிருந்து அவ்வரிசையிலேயே வானம் நிலம் அனல் புனல் மண் எனும் ஐம்பூதங்களும் தோன்றும். இவ்வைம் பூதங்களும் வான் முதலாக ஒன்றிலே ஒன்ருகத் தோன்றும். இவ் ஒவ்வொன்றுக்கும் சதாசிவர் முதலாக அயன் ஈருக ஐவர் அதிபதிகளாகப் பொருந்து வார்கள். இவ்வாறு கூறப்படுகின்ற தோற்ற முறைமையிலே ஒடுக்கமும் அமைந்திருக்கும் என்று அறிஞர் பெருமக்கள் கூறுவார்கள்.

முற்பாடலிலே தைசத அகங்காரம் என்னும் ஒளி மிகுந்த பகுதியில் தோன்றிய அறிவுப் பொறிகளைப் பற்றி ஆசிரியர் கூறினர். இப் பாடலில் தொழிலும் உருவும் பொருந்திய வைகாரி அகங்காரத்தையும் பூதாதி அகங்காரத்தையும் இடமாகக் கொண்டு தோன்றுவனவாகிய செயற்பொறிகள் (கன்மேந்திரியங்கள்) ஐந்தும் தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றும் முறைமையைக் கூறுகிருர். ஐம் பூதங்களுக்கும் அதிபதிகளாய் உள்ள அதிதெய்வங்களையும் சொல்லுகிருர். ஐம்பூத களும் ஒன்றில் ஒன்று தோன்றி, தோன்றிய முறைமையிலேயே ஒடுங்கும் என்பதையும் எடுத்துரைக்கிருர்.

வைகாரி அகங்காரம் தொழில் ஆகையாலும் கன்மேந்திரியங்கள் தொழில் ஆற்றுபவை ஆகையாலும் வாய், கை, கால், எருவாய், கருவாய் ஆகிய ஐந்து தொழிற் கருவிகளும் அதனின்று தோன்றும். இவை முறையே வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் என்று வடமொழியில் கூறப்படும். வாயின் தொழில் பேச்சு. கையின் தொழில் ஏற்றலும் இடுதலும். காலின் தொழில் போக்கும் வரவும். எருவாயின் தொழில் கழிவுகளை வெளியேற்றல். கருவாயின் தொழில் இன்பம் நுகர்வது. இத் தொழில்கள் வடமொழியில் வசனம், தானம், கமனம், விசர்க்கம், ஆனந்தம் என வழங்கும். இப்பொறிகள் யாவும் இராசத குணத்தில் உதிப்பனவாகும்.

இதனை அடுத்து பூதாதி அகங்காரமாகிய தாமத குணம் பொருந்திய உருத் தோன்றி வெளிப்படுகிற தன்மாத்திரைகள் ஐந்தையும் பூதங்கள் ஐந்தையும் அவற்றின் அதி தெய்வங்களையும் கூறுகிருர். சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்பன தன்மாத்திரைகளுக்கு வட மொழியில் வழங்கும் பெயர்கள். இவை ஓசை ஊறு உருவம் சுவை நாற்றம் என்பனவாம். இவற்றிலிருந்து வான் வளி அனல் புனல் மண் ஆகிய ஐம் பூதங்களும் தோன்றும். ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி என்பன இவற்றின் வடமொழிப் பெயர்கள். இப்பாடலில் காற்று அநிலம் என்ற சொல்லால் குறிக்கப்பட்டது.

தன்மாத்திரைகள் என்பவை மிக மிக நுட்பமாக நின்று, நுண்ணிய தாகிய ஐம்பெரும் பூதங்களைத் தோற்றுவிக்கும். இப் பூதங்கள் யாவும் பருமையாய் நாம் காணும் நிலம் நீர் தீ ஆகிய பொருள்களைக் குறியாமல் அவற்றின் தோற்றத்துக்கு அடிப்படையாய் நுண்ணிதாய் விளங்குவன என்பதை நினைவில் கொள்ளுதல் தகும்.

நுட்பத்திலிருந்து பருமை நோக்கிக் கூறப்புகுவதனால் வான் ஓசைக்கு மட்டிலும் இடங்கொடுத்து நிற்கும். காற்று ஓசையுடன் ஊறும் உடையதாகும். தீ, ஓசை ஊறு உருவம் கொண்டதாகும். புனல், ஓசை ஊறு உருவம் சுவை ஆகிய நான்கும் உடையது. நிலம், ஓசை ஊறு உருவம் சுவை நாற்றம் என்ற ஐந்தையும் கொண்டதாகும். இந்த உண்மை பருமையிலிருந்து நுட்பம் கூறும் முறைமையில். ''பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி'' எனத் தொடங்கித் திருவாசகத்தில் போற்றித் திருஅகவலில் 137 முதல் 141-ம் அடிகள் வரை கூறப்பட்டுள் ளமை காணலாம்.

உன்னு சதாசிவராதி அதிபதிகள் என்ற பாடலின் பகுதி, ஐம்பூதங் களுக்கும் உரிய அதிதெய்வங்கள் இவர் என உணர்த்துவது. விண் ணுக்குச் சதாசிவரும் காற்றுக்கு மகேசுரரும் தீக்கு உருத்திரரும் நீருக்குத் திருமாலும் நிலத்துக்கு அயனும் அதி தெய்வங்கள் ஆவர்.

இப்பாடலில் பதினைந்து தத்துவங்கள் குறிக்கப்பட்டன. இதற்கு முந்திய பாடலில் இவற்றுக்கு முற்பட்ட பதினைந்து தத்துவங்கள் கூறப் பட்டன. தூவா மாயையில் தோன்றிய தத்துவங்கள் முப்பத்தொன்றில் முப்பது குறிக்கப்பட்ட பின்னர் எஞ்சுவது புருட தத்துவம் ஒன்றே. அது இங்குக் கூறப்படாமல் சிவப்பிரகாசம் நாற்பத்து ஒன்ருவது பாடலில், ''ஐவகையால் உறு பயன்கள் நுகர வரும் காலம், அது புருட தத்துவம் என்று அறைந்திடுவர் அறிந்தோர்'' என்று கூறப்படும்.

**28 நண்ணியிடும்உரு அதனுக்கு ஏது ஆகி**
**நாறு போகங்களாய் நாசோற் பத்தி**
**பண்ணிவரும் ஆதலால் அநாதி ஆகிப்**
**பலவாகி அணுக்கள் தொறும் படர்வது ஆகி**
**எண்ணிவரும் மனம்வாச கன்மத்தால் இயற்றும்**
**இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ**
**புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்**
**பொருந்தும் இது கன்மமலம் புகலும் ஆறே.**

உயிர்கள் பெற்றிடும் உடம்புகளுக்குக் காரணமாகிப் பல்வேறுப் பட்ட நுகர்ச்சிகளால் அழிவில் தோன்றும் தோற்றத்தால் சங்கிலித் தொடர் ஆகி, பலவாகி நுண்ணிதாய் உயிர்கள் தோறும் செல்வதாய் மனம்

மொழி மெய்களால் இயற்றப்படும் இயல்பினதாய் புத்தியைப் பற்றி இருப்பதாய்ப் பயன் தரும் காலத்து பாவம் புண்ணியம் என்ற பெயரைப் பெற்று, ஒடுக்கம் நிகழும் போது மாயையில் பொருந்துவதாகிக் கன்ம மலம் விளங்கும். இது ஆகமங்களில் கூறப்பட்ட முறைமையாம்.

உயிர்கள் வினைக்கு ஈடாகப் பல வகைப்பட்ட உடல்களைப் பெறுகின்றன என்பது மேல் இருபத்து இரண்டாம் பாடலிலும் இருபத்து நான்காம் பாடலிலும் கூறப்பட்டது. அவ்வாறு உயிர்களின் நுகர்ச்சிகளும் பல்வேறு வகைப்பட்டனவாகவே இருக்கும். இவையும் வினையின் பயனே.

வினை தொன்று தொட்டு வருவதனால் தோற்றமற்றது (அனாதி) எனப்படும். நாசத்தின் உற்பத்தியாவது வினை அதனால் நாசோற்பத்தி என்ற சொல்லால் குறித்தார் வித்து அழிந்து முளையும், முளை முதிர்ந்து செடியாகி வித்தும் தோன்றுவது ஒன்றின் அழிவில் மீண்டும் அதன் தோற்றம் உளதாவதற்கு எடுத்துக் காட்டாகும். இதனைப் பிரவாக அநாதி என்றும் கூறுவர். பொங்கி வரும் பெரு வெள்ளத்தில் ஒவ்வொரு துளி நீரும் ஒவ்வொரு விநாடியும் இடம் பெயர்ந்து கொண்டே இருக்கும். ஒரு துளி நகர்ந்தவுடனே அதன் இடத்தை மற்றொன்று நிரப்புவதால், வெள்ளத்தின் தொடர்ச்சி அறுபடாமல் பாயும். காண்பவர்களின் கண்ணுக்குப் பாய்கின்ற வெள்ளத்தில் நீர்த்துளிகளின் இடப் பெயர்ச்சி தென்படுவதில்லை. ஆனால் விநாடி தோறும் ஒன்று பெயர்வதும் மற்றொன்று அதனிடத்தை நிரப்பவதும் நிகழ்ந்தும் கொண்டிருக்கின்றன.

வினையும் இவ்வாறான தொடர்ச்சியை உடையதே. முந்தை வினைப் பயனை இன்பத் துன்ப வடிவில் உயிர்கள் நுகரும் போது அந்த வினைகள் அழிகின்றன. ஆனால் உயிர்கள் விருப்பு வெறுப்பு உடையனவாகையால் முன் வினையை நுகர்ந்து கழிக்கும் காலத்திலேயே தமது விருப்பு வெறுப்பின் அடிப்படையிலேயே மீண்டும் வினைகளை ஈட்டிக் கொள்கின்றன. இதுவே நாசோற்பத்தி அல்லது பிரவாக அநாதி எனப்படும்.

வினை மூன்றாகக் கூறப்படும். பழ வினை, ஏன்ற வினை, ஏறு வினை என்பன அவை. சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்று இவற்றைக் குறிப்பர். பலபிறவிகளில் ஈட்டிக் கொள்ளப்பட்ட வினைகளின் தொகுப்பு சஞ்சிதம். இந்தப் பிறவியில் நுகருமாறு இறைவனால் கூட்டப்படுவது பிராரத்தம். இதனை நுகரும் காலத்தே உயிர்கள் தம் விருப்பு வெறுப்பால் ஈட்டும் வினை ஆகாமியம்.

இவ் வினைத் தொடர் நினைவில் படர்ந்து மனம் மொழி மெய்களால் இயற்றப்படுவன. மனம் வாசகம் காயம் என்ற மூன்று சொற்களும் செய்யுள் ஆதலால் மன, வாச, காயம் என நின்றன. வினை புத்தியைப் பற்றியே நிற்கும். பயன் தரும் காலத்தில் நல்வினை புண்ணியம் எனப்படும். தீவினை பாவம் எனப்படும். இவற்றின் விளைவுகள் இன்பத் துன்பங்கள்.

இவ்விரு வினைகளும் ஒடுக்க காலத்தில் மாயையைப் பற்றுக் கோடாகக் கொண்டு நின்று அடுத்த பிறவியில் பக்குவப்பட்ட வினைகள் அனுபவத்திற்கு வரும் என்பது; 'புலர்காலை மாயை மேவிப் பொருந்தும்' என்ற பகுதியால் உணர்த்தப்பட்டது. இங்கு புலர் காலை என்பது ஒடுங் கும் காலத்தைக் குறித்தது. புலர்தல் — உலர்ந்து போதல்.

**29 கன்மநெறி திரிவிதம்நற் சாதிஆயுப் போகக்**
**கடன்அதுஎன் வரும்மூன்றும் உயிர் ஒன்றில் கலத்தல்**
**தொன்மையது ஊழ்அல்லது உணவுஆகா தானும்**
**தொடங்குஅடைவில் அடையாதே தோன்றும் மாறித்**
**தன்மைதரு தெய்விகம் முற்பௌதிகம் ஆன்மிகமாம்**
**தகையில்உறும் அசேதன சேதனத்தாலும் சாரும்**
**நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு இவண் ஊண்**
**நாடில்அதன் ஊழ்வினையாய் நணுகும் தானே.**

வினைக்கு ஈடாக இனம் வாழ்நாள் துய்த்தல் ஆகிய மூன்றும் ஓர் உயிருக்குத் தொன்று தொட்டுப் பொருந்தி வரும். அவ்வினை பக்குவம் அடைந்த காலத்தே உயிர்களுக்குப் பயன் தரும். உயிர்களால் நுகரப் படும். அப்போது அது ஊழ் என்ற பெயரைப் பெறும்; வினை யீட்டப் பட்ட கால அடைவிலே உயிர், வினைப் பயன்களை நுகர்வதில்லை. வினையின் வன்மை மென்மைகளுக்கு ஈடாகவும்; பக்குவப்பட்ட முறைமையிலும் உயிர்கள் அவற்றின் பயன்களை நுகருமாறு இறைவன் கூட்டுவான். வினைகள் உயிரை வந்து சாரும் போது மூன்று வழிகளிலே வந்தடையும்: அவற்றை ஆதி தெய்விகம் ஆதி ஆன்மிகம் ஆதி பௌதிகம் என்று கூறுவர். அறிவற்ற பொருள்களாலும் அறிவுடைப் பொருள்களாலும் வினைப்பயன் வினைசெய்த உயிரைச் சாரும். ஓர் ஆன்மாவின் இப் பிறவி யில் அவ்வுயிர் நல்லனவும் தீயனவும் நுகர்வதனை ஆய்ந்து பார்த்தால் அவை அவ்வுயிரின் முன்னை வினைப் பயனைப் பொறுத்தே அமைகின்றன என்பது புலனாகும்.

இனம், வாழ்நாள்; துய்த்தல் ஆகிய மூன்றும் முறையே சாதி ஆயுள் போகம் என வடமொழியில் வழங்கும். சாதி என்பது பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிக்கப்படும் சாதிப் பிரிவினைகள் என்று கொள்ளுதல் வேண்டா, நற்சார்பில் வந்து உதித்தலே சாதி என்ற சொல்லால் குறிக் கப்பட்டதாகக் கொள்ளுதல் தகும்.

''மனத்துளது போலக் காட்டி, ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு'' (குறள் 454)

''மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். (குறள் 457)

என்ற திருவள்ளுவ நாயனார் திருவாக்குகளை இங்கு நினைவு கூர்க. சில

ஞூர்ன் பேர்தம் பன்னிரண்டாம் சூத்திரத்திலும் அடியாரோடு இணங்குக. அல்லாரோடு இணங்குவந்த விடுக என்றதும் இக்கருத்துப் பற்றியே.

வாழ்நாள் என்பதுவும் பிறவியிலேயே வரையறுக்கப்பட்டது என்பது பெரியோர் கொள்கை. பிறந்தவுடனேயே உறுதியாகக் கூறத்தகுவது இவ்வுயிர் என்றோ ஒரு நாள் இறக்கும் என்ற ஒன்றுதான். இக்கருத்து சிவஞான சித்தியாரில் சுபக்கத்தில்

''கருவினுள் அழிவதாயும் கழிந்திடாது அழிவதாயும்
பரிணமித்து அழிவதாயும் பாலனாய் அழிவதாயும்
தருணனாய் அழிவதாயும் தான் நரைத்து அழிவதாயும்
உருவமே அழிவே ஆனால் உள்ளபோதே பார் உய்ய''

என்ற திருப்பாட்டால் விளக்கப்பட்டது.

இவ்வாறே துய்த்தல் என்பதும் வினைப்பயனுக்கு ஏற்ப இறைவன் கூட்டினாலன்றி ஓர் உயிருக்கு வாய்க்குமாறு இல்லை. 'பொன்னும், மெய்ப் பொருளும் தருவானை போகமும் திருவும் புணர்ப்பானை' என்ற சுந்தர மூர்த்தி நாயனார் திருவாக்கு 'தருவதும் இறைவன்; புணர்ப்பதும் இறைவன்' என்ற கருத்தை வலியுறுத்தும். திருவள்ளுவ நாயனாரும்,

''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது'' (குறள் 377)

என்றுரைத்தது இதனை வலியுறுத்தும்.

ஊழ்த்தல் என்ற சொல்லுக்கு மலர்தல் என்பது பொருள். ''இணர் ஊழ்த்தும் நாறாமலர் அனையர்'' என்ற வள்ளுவர் வாக்கு இதனை விளக்கும். பக்குவப்பட்டு உயிரின் அனுபவத்திற்கு வரும் வினைப்பயன் ஊழ் என்று கூறப்படும். பரிமேலழகர் திருக்குறளில் ஊழ் என்ற அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்யும் போது, ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருட் கிளவி'' என்று எழுதுகிறார். முன்னும் பின்னுமாகச் செய்த வினைகளில் எது பக்குவப்பட்டதோ அதன் பயனை நுகருமாறு இறைவன் ஊட்டுகிறான். இக் கருத்து 'ஊழ் அல்லது உணவு ஆகாது' என்ற சொற்றொடரால் விளக்கப்பட்டது. ஈட்டப்பட்ட கால வரம்பில் முன் பின்னாகவும் வன்மை மென்மைகளுக்கு ஏற்பவும் வினையின் பயன்கள் உயிரை வந்து சார்கின்றன.

ஆதி தெய்வீகம் எனப்படும் வினைவாயில், கருவினுள் பட்ட போதும் பிறப்பிலும் இறப்பின் போதும் நேர்கின்ற துயரங்கள். ஆதி ஆன்மீகம் என்பது பிற உயிர்களாலும் விலங்குகளாலும் பறவைகளாலும் தன்னாலும் வருகின்ற துயரங்கள். இது இரண்டு வகைப்பட்டு மனத்தால் படும் துயரம் எனவும், உடலால் படும் துயரம் எனவும் நிகழும். மனத்தால் படும் துயரங்கள் அழுக்காறு, அவா, வெகுளி, கவலை முதலியன. உடலால் நேரும் துயரங்கள் பிணி, காயங்களால் வருவன. ஆதி பௌதிகம்

எனப்படுவது. ஐம்பூதங்களிலிருந்து தோன்றி விளைகின்ற துன்பங்கள். மழை, காற்று, நில நடுக்கம், எரிமலை என்பவை அவை. துன்பத்திற்குக் கூறியவாறே இன்பத்திற்கும் இவ்வினைப் பயன்கள் இவ்வழிகளால் வந்து பொருந்துவதை உய்த்துணர முடியும்.

வாகீச முனிவர் இயற்றிய ஞானமிர்தம் என்னும் நூலில் 26-வது அகவலிலும் சிவஞான மாபாடியம் முதலிய பெருநூல்களிலும் இவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

**30 மேலைக்கு வருவினை ஏது என்னில் அங்கண்**
**விருப்புவெறுப்பு எனஅறி அவ்விளைவும் எல்லாம்**
**மூலத்த வினைப்பயில்வாம் என்னில் நாம்மேல்**
**முற்றி அதன்பயன் உனக்கு முளைக்கும் என்பர்**
**ஞாலத்து வினைகள் இருதிறன் ஆகும் புந்தி**
**நண்ணாத வினைநணுகும் வினைஎன ஒன்று இரண்டாம்**
**ஏலத்தான் இதம்அகிதமாம் இதனால் வழுவாது**
**எய்தியிடும் புண்ணிய பாவங்கள் என்றே.**

முற்பிறப்பில் செய்த வினைகளை இப்பிறப்பில் நுகர்ந்து கழிக்கிறோம் எனின் இனிமேலும் பிறப்பு வருவதற்குக் காரணமாக இருப்பது எது என்று கேட்பின், இப்பிறப்பில் வினையின் பயனை நுகரும் உயிர்கள் நான் என்றும் அகங்காரத்தோடு நுகர்கின்றன. அப்போது விருப்பும் வெறுப்பும் விளைகின்றன. இவற்றிலிருந்து ஏறுவினை என்றும் ஆகாமியம் தோன்றி அடுத்த பிறப்பிற்குக் காரணமாகின்றது. விருப்பும் வெறுப்பும் தோன்றுவதே முன்னைவினைப்பயன் ஆகாதோ எனக் கேட்பின் யான் என்றும் உணர்வே யான் செய்தேன் பிறர் செய்தார் என்ற எண்ணங்களைத் தோற்றுவித்து, அடுத்த பிறப்பிற்கு முளைஆகின்றன. இவ்வாறு பிறர்க்கு நலமும் தீங்கும் விளைவிக்கும் வினையும் இரண்டு வகைப்படும். அறிந்து செய்யும் வினை (புத்திபூர்வம்) அறியாது செய்யும் வினை (அபுத்திபூர்வம்) என்பன அவை. அவற்றின் பயன் தப்பாது விளையும்.

வினைப்பயன்களை நுகரும்போது விருப்பு வெறுப்புக்கள் தோன்றுகின்றன. அவை முயற்சியால் வருகின்றன. இன்பம் வரும்போதும் துன்பம் நேரும்போதும் இவை என்வினைப்பயனால் நேர்ந்தன எனக் கருதாது, நான் செய்தேன் என்றும் பிறர் செய்தார் என்றும் கருதுவது உலகியல். இதனால் மேலும் வினை விளைவதால் ''யான் செய்தேன் பிறர் செய்தார் என்றும் இக்கோணை ஞான எரியால் வெதுப்பி'' என்று கூறுவார் சிவஞான சித்தியார் ஆசிரியராகிய அருள்நந்திசிவம். அவரே ''பிற்செயாது அனுபவிப்பது இன்று'' என்று வேறு ஓரிடத்தும் உணர்த்துகிறார்.

வினைகள் இரு திறப்பட்டு, அறிந்து செய்வினைகள் எனவும், அறியாது செய்த வினைகள் எனவும் நிற்கும் இவற்றால் பிறர்க்கு நலம் தீங்கு

கள் விளைவிக்கிறோம். அவற்றின் விளைவு புண்ணிய பாவங்கள் எனப்பட்டு வழுவாது இறைவனால் ஊட்டப்படும்.

31 உற்றதொழில் நினைவுஉரையின் இருவினையும் உளவாம்
ஒன்று ஒன்றால் அழியாது ஊண் ஒழியாது உன்னில்
மற்று அவற்றில் ஒருவினைக்குஓர் வினையால்வீடு
வைதிக சைவம் பகரும் மரபில் ஆற்றப்
பற்றியதுகழியும்இது விலையால் ஏற்கும்
பான்மையுமாம் பண்ணாது பலிக்கும் முன்னம்
சொற்றரு நூல்வழியில் வரில் மிகுதி சோரும்
சோராது அங்குஅது மேலைத் தொடர்ச்சி ஆமே.

மேற் கூறப்பட்ட வினைகள் இரண்டும் மனமொழி மெய்களால் முறையே நினைவாலும் சொல்லாலும் தொழிலாலும் விளைவனவாகும். ஒரு வினையால் மற்றொரு வினை அழியாது. கூர்ந்து நோக்கினால் வினைப்பயனின் நுகர்ச்சியே வினைத் தொடக்கை நீக்கும். ஆயினும் வைதிக சைவ மரபில் கழுவாய் செய்யப் பாவம் நீங்கும் எனப்படுகிறதே என்னில் புண்ணியத் தால் பாவத்தை ஒழிப்பது விலை கொடுத்து நற்பயனை வாங்க முயல்வதற்கு ஒப்பாகும். ஆகம விதிப்படி கழுவாய் செய்தாலும் வினையின் கொடுமை நீங்குமே ஒழிய வினையின் பயன் வேரறக் கழியும் என்பது உண்மையன்று. அதன் வழி எஞ்சி நின்ற வினைப்பயன் அடுத்த பிறவிக்கும் தொடர்புடைய தாகும்.

சிவப்பிரகாசத்தில் வரும் நெருடான பாடல்களுள் இது ஒன்று. இதற்கு உரை வகுத்த பெரியோர்கள் தங்களுக்குள் சிற்சில இடங்களுள் மாறுபாடு கொள்ளுகிறார்கள். வைதீக சைவ நூல்களுள் விதிக்கப்பட்ட கழுவாயைத் தாமே செய்தாலோ அல்லது பொருள் கொடுத்து மற்றொரு வரைக் கொண்டு செய்வித்தாலோ கொடும் தீவினைகள் நீங்கும் என்றும் கூறிவிட்டு அதன் பிறகு ''முன்னே சொல்லப்பட்ட வேதாகமங்களின் முறைமையிலே ஒருவன் தான் செய்த தோஷத்துக்குத் தக்க பிராயச்சித்தஞ் செய்தாலும் அந்தத் தோஷத்தின் கௌரவங் கெட்டுத் தோஷமாத்திர நிற்கும். அதேதென்னில் ஒருவன் பிரமஹத்தி கோவதை முதலாயுள்ள தோஷங்கள் செய்து அதற்குத் தக்க பிராயச்சித்தஞ் செய்தாலும் நரக வேதனைக்குள்ள கௌரவம் கெட்டுக் கொலைத் தோஷ மாத்திரம் நிற்கு மென அறிக'' என்பது மதுரைச் சிவப்பிரகாசர் வகுத்த உரை.

சிதம்பரநாத முனிவர் உரையில், ''ஒரு வினையால் ஒரு வினைக்கு விடுதலையும் வேதாகமங்கள் சொல்லும். ஒழிதல் எப்படி எனில் அவை சொன்ன முறையிலே செய்தால் கூடின பாவகன்மம் நீங்கும். இங்ஙனம் புண்ணியத்தால் பாவம் ஒழிகை விலைக்குக் கொள்ளும் முறைமை உடையதுமாம். இப்படிச் சாந்தி பண்ணாது இருப்பினும் அபுத்தி பூர்வமாகப் பாவம் ஒழிகைக்கு ஏற்ற புண்ணியமும் சித்திக்கும்'' என்று பொருள் காண்கிறார்.

யாழ்ப்பாணம் திரு மு. திருவிளங்கனூர் பாடலில் வரும் சொற்களை இயைத்து ''வீடு ஆற்றக் கழியும்'' என்று பொருள் காண்கிறார். இதன் மூலம் மரபினால் விடுதலையை ஆற்ற வினை கழியும் என்றே பொருள் கூறுகிறார்.

சிந்தனை உரையின் ஆசிரியர் சொற்றரு நூல் வழியில் வரின் என்பதற்குச் ''சரியை கிரியை யோக நெறிகளை முறையே பின்பற்றி ஒழுகிய பிறகு முதல்வன் ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளுவான்'' என்று உரை காண்கிறார்.

''ஓர் பாவத்திற்கு எத்தனைப் புண்ணியம் பரிகாரமாக வேண்டப்படுமோ அத்துணையும் அவ்வாறே ஆகுக எனப் பின் சங்கற்பிக்கினும் அது பரிகாரமாகிப் பாவம் ஒழிதலும், எத்துணைப் பாவம் இருக்கினும் அதனால் எட்டுணைப் புண்ணியமேனும் கெடுதலும் ஆவது அன்மையின் புண்ணியப் பயனோடு பாவப் பயனும் அனுபவித்தே தீரும்'' என்று திருவுருமாமலைச் சாரலில் வாழும் ஓர் அடிகள் தாம் இயற்றிய உரை நூலில் குறிப்பிடுகிறார்.

இவ்வுரைகள் யாவும் தம்முள் வெவ்வேறு இடங்களில் மாறுபட்டு நிற்கின்றன என்பது தெளிவு. ஒரு தீவினைப் பயன் மற்றொரு நல்வினைப் பயனால் கழியும் என்பது பொருந்தாமையை இருவினையொப்பு என்ற சொல்லுக்கு விளக்கம் கூறுமிடத்து மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் எட்டாம் நூற்பாவில்,''ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலன்றிப் புண்ணிய பாவமிரண்டினும், அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனதறிவின் கண் அவ்விரு வினையும் அவ்வாறொப்ப நிகழ்தலே ஈண்டு இருவினையொப்பு என்பதற்குப் பொருள் என நுண்ணுணர்வால் கண்டு கொள்க'' என்றருளிச் செய்துள்ளார். எனவே ஒரு நல்வினை மற்றொரு தீவினையை அழிக்காது என்பதே சைவசித்தாந்தம் கூறும் கருத்தாகும்.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் உமாபதி தேவநாயனார் சங்கற்ப நிராகரணத்துள் சைவவாதி சங்கற்பத்துக்கு நிராகரணம் கூறுகின்ற இடத்து

''அருவினை தூக்க உருவினை நில்லாது
ஒருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறுமாறு செப்புக'' (சங்கற்பநிராகரனம் 20-22-24)

என்று கூறுவதும் இங்கு நினையத்தக்கது.

இதுபோலவே இவ்வாசிரியர் இயற்றிய மற்றொரு நூலாகிய திருவருட்பயனில், ''நீடும் இருவினையும் நேராக நேர் ஆதல், கூடும் இறை சக்தி கொளல்,''(51) எனவும் ''ஏன்றவினை உடலோடு ஏகும் இடைஏறும் வினை, தோன்றில் அருளே சுடும்'' எனவும் கூறப்பட்டுள்ளவற்றை நினைவில் கொள்ள வேண்டும்.

இக்கருத்துக்களை ஒரு சேர வைத்து நோக்கினுல் ஒரு நல்வினையால் மற்ருெரு தீவினை கழிக்கப்படுவதில்லை என்பதும் வினை நீங்குவதற்கு இறைவன் திருவருளே துணை நிற்க வேண்டும் என்பதும் புலனுகும். சமய குரவர்களான திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும், இறைவன் திரு வடி இணைகளை இறுகப்பற்றிக் கொண்டவர்களுக்கு வினைகள் வேரோடு அறும் என்று பல இடங்களில் அறிவுறுத்தி அருளியுள்ளமையையும் கருதினுல் வினைகளை முற்றிலும் துடைப்பவன் இறைவனே என்பதும் தெளிவாகும்.

எனவே இப்பாடலின் உட்கிடை திருவருளால் அன்றி வினைப்பயன்கள் துடைக்கப்படா என்பதும் அழியாத வினைகள் அடுத்த பிறவிக்குப் பயனுய் வந்து விளையும் என்பதுமே ஆகும்.

**32 மோகம்மிக உயிர்கள் தொறும் உடனுய் நிற்கும்**
**மூலஆணவம் ஒன்று முயங்கி நின்று**
**பாகம்மிக உதவுதிரோ தாயி ஒன்று**
**பகர்மாயை ஒன்றுபடர் கன்மம் ஒன்று**
**தேகம்உறு கரணமொடு புவன போகச்**
**செயல்ஆரும் மாமாயைத் திரட்சி ஒன்று என்று**
**ஆகமலம் ஐந்து என்பர் ஐந்தும் மாருது**
**அருளென்பது அரிது என்பர் அறிந்து ளோரே**

உயிர்கள் தோறும் தோற்றமில் காலம் தொட்டே அறிவை மறைத்துக் கொண்டு உடனுக நிற்கும் மூலமலமாகிய ஆணவ மலம் ஒன்று உயிரோடு கலந்து நின்று அதற்குப் பக்குவம் ஏற்படுமாறு உதவுகின்ற திரோதாயி ஒன்று சொல்லப்பட்ட மாயை ஒன்று.உயிர்தோறும் படர்ந்து நிற்கும் கன்மம் ஒன்று. உடல் கருவி உலகு நுகர்ச்சிப்பொருள் என்று கூறப்படும் மாயையின் காரியமான மாயேயம் ஒன்று. ஆக மொத்தம் ஐந்து மலங்கள் உள என்பர். இந்த ஐந்து மலங்களும் ஒழியாமல் இறைவன் அருள்பாலிப்பது என்பது நிகழாது என்று அறிஞர் கூறுவர்.

இப்பாடல் உயிர்களைப் பற்றி நிற்கும் ஐந்து மலங்களையும் விரித்துக்கூறி விளக்குகிறது. எல்லாப் பெருங்கேட்டிற்கும் காரணமாகி உயிர்களின் அறிவை முற்றிலும் மறைத்தும் தோற்றமில் காலம் தொட்டே உயிரோடு இயைந்தும் நிற்பதாகிய ஆணவமலத்தை முதலில் கூறினுர். ஆணவமலத்தை வலி இழந்து போகுமாறு செய்வதற்காக உயிரோடு பொருந்தி நின்றும் உயிரின் அறிவை மயக்கியும் மலபரிபாகம் எய்திய போது உயிர்களுக்குக் கருணை மழை பொழிவதாகிய திரோதானத்தை அடுத்துக் கூறினுர். மேல் இருபதாம் பாடலில் இது போலவே இரண்டையும் இணைத்துக் கூறியதைக் காண்க. உள் பொருளாய்ச் சொல்லப் பட்டதும் விடியுமளவும் விளக்குப் போல் நின்று உயிரின் அறிவைச் சற்றே

விளக்கி வருகின்றதும் ஆகிய மாயா மலத்தை மூன்றுவது கூறினர், நல்வினைதீவினை என்றும் புண்ணியம் பாவம் என்றும் இன்பத் துன்பம்என்றும் பலவகையால் வேறுபட்டு உயிர்கள் அனைத்திலும் படர்ந்து நிற்கும் கன்ம மலம் ஒன்று. மாயையின் காரியங்களாகிய உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள்கள் என்று விரிந்து தோன்றும் மாயையின் காரியங்கள் ஆகிய மாயேயம் ஒன்று, ஆக மொத்தம் மலங்கள் ஐந்து என்று அறிந்துளோர் கூறுவர்.

மாயையின் காரியங்கள் மாயைக்குள்ளேயே அடங்கும் எனினும் உயிரைப் பிணிக்கும் செயலில் மாயையும் அதன் காரியங்களும் தம்முள் வேறுபட்டு நிற்கும் ஆதலால் அவை இரண்டையும் தனித்தனியாகக் கூறினர்.

இறைவனின் மறைப்பாற்றலாகிய திரோதான சத்தி உயிர்கள் பக்குவப்படும் வரையிலும் அவற்றைக் கட்டுக்குள் வைத்திருக்கும். ஆதலால் அதுவும் மலங்களில் ஒன்று என்று உபசரித்துக் கூறப்படும்.

ஆணவம் கன்மம் மாயை என்று மூன்று மலங்களே கூறப்படுவது பெரு வழக்கு. எனினும் அவற்ருேடு திரோதானம் மாயேயம் இரண்டையும் கூட்டி மலங்களை ஐந்தாகக் கூறுவதும் மரபு. திருவாசகம் நீத்தல் விண்ணப்பத்தில் இருபத்து ஒன்பதாவது பாடலில் ''மலங்கள் ஐந்தால் சூழல்வன் தயிரில் பொரு மத்து எனவே'' என்று மாணிக்கவாசகர் அருளிச் செய்கிருர். குமரகுருபர முனிவர், கந்தர் கலிவெண்பாவில், ''பஞ்ச மலம் காய்ந்த சிவஞான கடாக்களிறு''என்று மலங்களை ஐந்தாகக் கூறுகிருர்.

**33. ஒங்கிவரும் பலஉயிர்கள் மூன்று அவத்தை பற்றி**
**உற்றிடும் கேவலம் சகலம் சுத்தம்என உணர்க**
**ஈங்குவரும் கலாதியொடுகுறி உருவம்ஒன்றும்**
**இன்றிமலம் அன்றிஒன்றும் இல்லைஎனும் இயல்பாம்**
**ஆங்குஅறிவை அறிவுஅரியன் அறிகருவி அணையா**
**ஆதலினல் இருள்மருவு மலர்விழிபோல் அதுவாய்**
**நீங்கும்வகை இன்றிநித்த வியாபகமாய் அங்கண்**
**நிற்பது கேவலம் என்று நிகழ்த்தும் நூலே.**

மேன்மேலும் உயர்ந்து வருகின்ற எண்ணற்ற உயிர்கள் மூன்று நிலைகளைப் பொருந்தி வரும். இம்மூன்று நிலைகளும் முறையே கேவலம் சகலம் சுத்தம் எனப்படும். இந்த வாழ்வு சகல நிலை ஆகும். இவ்வாழ்வில் உயிரைப் பொருந்திய கலை முதலியனவும் குறியும் உருவமும் ஏதும் இல்லாமல் ஆணவத்தைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்னும்படி இவ்வுயிர் தனித்து இருக்கும் நிலை கேவல நிலை எனப்படும். அந்த நிலையில் உயிர் அறிவுடைப் பொருளாய் இருந்தும் தன்னையே அறிய மாட்டாத தாய், பிற பொருள்களை அறிவதற்குத் தேவையான கருவிகள் கூடாமல்

இருப்பது ஆதலால் பிறவற்றையும் அறிய மாட்டாததாய் இருக்கும். செறிவான இருளிலே நிற்பான் ஒருவனுடைய கண் எவ்வளவுதான் மலர விழித்துப் பார்த்தாலும் இருளே ஆக இருப்பது போல இருள் மலமாகிய ஆணவ மலமேயாய் நிற்கும். ஆணவ மலத்தில் இருந்து நீங்கும் வகை இல்லாமலும் பிறப்பு இறப்பு இல்லாமையால் நித்தமாகவும், முழுவதும் ஆணவத்தினுல் மறைக்கப்பட்டு நிற்கும். அருள்நூல்கள் உயிரின் இந்த நிலையைக் கேவல அவத்தை என்று கூறும்.

அவத்தை — நிலை. கேவலம் சகலம் சுத்தம் ஆகிய மூன்று நிலைகளையும் முறையே இருள் நிலை மருள் நிலை அருள் நிலை என்பர். இம் மூன்று அவத்தைகளும் காரண அவத்தைகள் எனப்படும். கேவல நிலையைப் புலம்பு என்றும் குறிப்பர். அதற்குத் தனிமை என்று பொருள்.

கேவல நிலையை விளக்குகின்ற சிவஞான சித்தியார்,

''அறிவு இலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்களோடும்
செறிவு இலன் கலாதி யோடும் சேர்வுஇலன் செயல்கள் இல்லான்
குறியிலன் கருத்தா அல்லான் போகத்தில் கொள்கை இல்லான்
பிறிவுஇலன் மலத்தினேடும் வியாபி கேவலத்தில் ஆன்மா'' என்று

கூறுகிறது. அதனையும் இப்பாடலுடன் இயைத்துப் பொருள் தெளிக.

குறி என்றது நுண்ணுடலையும், உருவம் என்றது பருவுடலையும் குறிக்கின்றன. மலமன்றி ஒன்றுமில்லை எனும் இயல்பாய் என்றது கேவல நிலையில் உள்ள உயிருக்குத் தான் கடிய தொழில் ஆணவத்தால் கட்டுண்டு கிடக்கிறேம் என்று தெரியும் வன்மையும் இல்லாதிருப்பது பற்றி, ஆணவத்தோடு அத்துவிதமாய் நிற்கின்ற நிலையைக் குறித்தது.

குற்றமற்ற கண் ஆனுலும் இருளில் பொருள்களை அறியும் தன்மை கண்ணுக்கு இல்லை. ஆணவ இருளில் முற்றிலும் மூழ்கி நிற்பதால் உயிருக்குத் தன்னை அறியும் அறிவும் இல்லை. அறிகருவிகளுடன் உயிர் பொருந்தாத நிலையே கேவல நிலை. ஆகையினுலே அந்நிலையில் உயிர் பிற பொருள்களையும் அறியுமாறில்லை. கட்டு நிலையிலிருந்து நீங்கும் வகையினையும் உயிர்கள் அறிய மாட்டா. ஆணவ மலத்தினேடும் வியாபித்து நித்தப் பொருளாக உயிர் இருளில் அழுந்தி இருப்பது கேவல நிலை என்பது இப்பாடலில் விளக்கப்பட்டது,

**34 இன்மைமலம் மாயைகன்மம் என்றுஇரண்டே இறைதான்**
**இலங்குபல உயிர்களும்முன் புரிந்த இருவினையின்**
**தன்மைகளால் எவர்களுக்கும் தனுகரணம் புவனம்**
**தந்திடும்இங்கு அதனுலே இருபயனும் சார்ந்து**
**கன்மம்எலாம் நேராக நேர் ஆதல் மருவக்**
**கடவுள் அருளால் எவையும் கழித்திடுவன் அதனுல்**
**பின்மலம் ஆனவை அணுகா பெருகுஒளி முன்புஉளதே**
**பெற்றிடும்என்று இத்திறம்என் பேசும் ஆறே.**

இருள் மலம் அல்லது ஆணவ மலம் என ஒன்று இல்லை. மாயை கன்மம் என்ற இரண்டே மலங்களாகக் கொள்ளத் தக்கன. முன் செய்த நல்வினை தீவினைக்கு ஈடாக இறைவன் உயிர்களுக்கு உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள்களை வழங்கியருளுவான். அவ்வாறு வழங்கப்பட்ட இவற்றைக் கொண்டு இருவினைப் பயன்களை உயிர்கள் அனுபவிக்கும். அப்போது இருவினை ஒப்பு நிகழும். அதனால் வினை முழுவதினையும் இறைவன் கழித்திடுவான், அதன் பின் மாயை கன்மம் என்று கூறப் பட்ட இவ்விரண்டு மலங்களும் உயிர்களை வந்து அணுகா. இந்நிலையில் உயிர்கள் தமக்குரிய பேரொளியைப் பெற்றுத் திகழும் என்று சிலர் கூறு வார்கள். அவர்கள் கூற்றுப் பொருந்துமா?

ஆணவ மலம் என ஒன்று உண்டு என்பதும் அதனாலேயே உயிர் களுக்கு அறியாமையும் பிறப்பு இறப்புக்களும் இவற்றின் தொடர்பாக வருகிற இன்பத்துன்பங்களும் உளவாகும் என்பதும் சைவசித்தாந்தம் கூறும் முறைமை. இதற்கு மாறாக ஆணவ மலம் என்பதொன்று இல்லை. மாயை கன்மம் ஆகிய இரு மலங்களே உள்ளன. அவற்றின் பயனே உயிர்களுக்கு இன்பத் துன்ப மயக்கங்கள் என்று ஐக்கியவாதசைவர் முதலிய சில தத்துவ நெறியாளர்கள் கொள்ளுகிறார்கள். அவர்களின் கருத்து இப்பாடலில் கூறப்பட்டு, இதை அடுத்த பாடலில் ஆசிரியரால் மறுக்கப்படுகிறது.

**35** **மாயைமுதல் எனவினையின் பான்மைமுதல் எனவே**
**மன்னுபனை விதைமரபின் மயங்கும்மலம் சுத்தற்கு**
**ஏயும்நெறி என்கொல் அதன் இயல்புஆயின் முத்தி**
**என்பதுஎன் மற்றுஇவைநிற்க இரும்கலாதி உணர்வாய்**
**மேயபினர்த் தன்உருவம் விளங்காமை விளக்கும்**
**மிகும்உலகம் தனில் என்னில் இவை விடுங்கால்உணர்வுள்**
**தோயும்நெறி இலதாதல் அறியாமைஎன நீ**
**சொல்லியது மலம் என்பர் துணிந்துளோரே**

முதலில் தூயதாய் இருந்த உயிரை மாயையும் கன்மமும் வந்து பற்றின எனின் இவை இரண்டுள் உயிரை முதலில் பற்றியது மாயையா கன்மமா? என்ற கேள்வி பிறக்கிறது. பனை முந்தியதா விதை முந்தியதா என்ற கேள்வி வரம்பின்றி ஓடுவதைப்போல இக்கொள்கை யும் மயக்கத்தைத் தரும். இம்மலங்கள் இரண்டும் தூய ஆன்மாவை ஏன் வந்து பற்றின? இவை இரண்டும் இடையில் பற்றவில்லை. அவை ஆன்மாவில் இயற்கையாக உள்ளன என்று கூறினால் இயற்கை என்பது என்றைக்கும் அழிவில்லாதது ஆதலால் இந்த இரு மலக்கட்டிலிருந்தும் வீடு பேறு என்ற ஒன்று இல்லாததாய் முடியும். மேலும் கலை முதலியவை உயிரை வந்து பொருந்திய பின் பிற பொருளை அறிகின்ற அறிவைப்

பெறுகிற உயிர், தன்னை அறியாமல் இருப்பானேன். மாயைதான் இத் தகைய அறியாமையைச் செய்தது என்றால் கலை முதலியன நீங்கிய விடத்துத் தன்னைத்தான் உணருகிற ஆற்றல் விளைய வேண்டும் அன்றோ? அப்போதும் உயிரைத் தடுப்பது அறியாமையே என்று நீ மறுமொழி கூறு வாயானால், நீ சொல்லும் அந்த அறியாமையே ஆணவ மலம் என்று விடையிறுப்பர் தெளிந்து துணிந்த அறிவுடையோர்.

மாயை, வினை என்று இரண்டே மலங்கள் உள்ளன என்று கொண் டால் எழும் சிக்கல்களை இப்பாடலில் வினா விடை முறையில் ஆசிரியர் விடுவிக்கிறார். உடல் கருவி முதலியன வினைக்கு ஈடாக வருவன என்னும் போது வினை முந்தியதாகிறது. வினை ஆற்றுவதற்கு உயிருக்கு உடல் தேவைப்படுகிறது. அப்படியானால் உடல் மாயையின் காரியம் ஆதலால் மாயை முந்தியதாகிறது. இது எவ்வாறு உளதெனில் பனை முந்தியதா பனையின் விதை முந்தியதா என்ற கேள்வி அருவழக்காய், வரம்பின்றி ஓடுவதைப் போன்றது.

முந்தின கேள்விக்கு விடையாக மாயையும் கன்மமும் உயிரை இடையிலே வந்து பற்றவில்லை அவை இரண்டும் உயிரின் இயல்புகள் என்று விடையிறுத்தால், இயல்புகள் அழிவதில்லை; இயல்புகள் அழிந் தால் பொருளே அழியும், ஆதலால் கட்டிலிருந்து நீங்கிய வீடுபேறு என்பதே இல்லாமல் போகும். அந்நிலையில் முத்தி நிலை என்ற பேச்சுக்கே இடமில்லை.

இவை தவிர, கலை முதலியவை மாயையின் காரியங்களாய் உயிரை வந்து பற்றிய பின்னரும் உயிர் உலகத்துப் பிற பொருள்களை அறிகின்ற ஆற்றல் பெறுகிறதேயன்றித் தன்னைத்தான் அறியும் ஆற்றலற்று இருக் கிறது என்பதையும் காண்கிறோம். தன்னைத்தான் அறியும் ஆற்றல் என் பது ஆன்மரூபம் எனப்படும். அதற்கு விடையாக மாயை விரிந்து பரந்த பொருள் ஆதலால் ஆன்மாவின் இயல்பை மறைத்து மயக்குகிறது என்று விடை சொல்லக் கூடும். அவ்வாறாயின் கலை முதலியவை நீங்கிய காலத்தே உயிர் தன்னைத்தான் அறிய இயலவில்லையே அதற்குக் காரணம் என்ன என்ற வினா எழுகிறது.

உயிரின் அறியாமை அது தன்னைத்தானே உணர மாட்டாது தடுத்து நிற்கின்றது என்று விடை சொல்வாய் ஆயின் அந்த அறியா மையே சைவசித்தாந்தத்தில் ஆணவம் என்ற பெயரால் குறிக்கப்படுகிறது என்று தெளிந்து துணிந்த அறிவுள்ளோர் விடையிறுப்பார்கள்.

விதை முந்தியதோ பனை முந்தியதோ என்ற கேள்வி வடமொழி வழக்கில் தாலபீஜ நியாயம் என்று வழங்கப்படும். தாலம் — பனை. பீஜம் — வித்து.

**36 அன்னியம் ஆனவை உணர்த்தி அனன்னியமாய் நிறைந்த**
**அறிவு அறியாமையினாலும் அருள்நிலவும் காலம்**
**தன்னில் அவனே யாவுமாய் நின்றதொன்மை**
**தாம்உணர்த லாலும்உயிர் தான்என ஒன்று இலதாய்**
**மன்னியிடும் மலம்மாயை கன்மங்கள் மாறி**
**வந்திடும்இங்கு இதுவழுவாது ஆதலினால் மனத்தால்**
**உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதுஎன்று**
**உணர்வு அரிதால் அதன்உண்மை தெரிவுஅரிதாம் உனக்கே**

உயிர்கள் தம்மிலும் வேறாகிய, நிலை பேறற்ற உலகத்தை அறியு மாறு செய்தும், அதே நேரத்தில் உயிர்க்கு உயிராயும் உயிருள் நிறைந் தும் விளங்குகின்ற திருவருளை அறியாவிடாமலும் செய்வது ஆணவ மலம். படிமுறையே திருவருளால் பக்குவப் படுத்தப்பட்டு நிறைந்த ஞானம் விளங்கும் நிலையை எய்தியவுடன் தோற்றமில் காலம் தொட்டே உயிர்க்கு உயிராகி. உயிரின் வேறின்றி விளங்குகின்ற இறைவனின் பேரருள் உயிர் களுக்கு விளங்கும். ஆதலால் திருவருள் தோன்றும் வரையும் உயிர் என ஒரு பொருள் இல்லை என்னுமாறு ஆணவ மலம் உயிரில் நிலை பெற்று இருக்கும். படைப்புக் காலத்தும் ஒடுங்கும் காலத்தும் மாயையின் காரி யங்களும் கன்மத்தின் காரியங்களும் உயிரைப்பற்றியும் விட்டு நீங்கியும் வரும். ஆணவ மலமோ அவ்வாறு பற்றுவதும் நீங்குவதும் இல்லாது என்றும் உயிரோடு பொருந்தியிருக்கும். எனவே மனத்தால் நினைப்பதற் கும் அரிய திருவருளின் துணை கொண்டு அறிந்தால் அன்றி ஆணவ மலம் என்ற ஒன்று உண்டு என்பதை அறிவது யாவர்க்கும் அரிதாம். திருவரு ளால் உணர்த்தப்பட்டால் அன்றி ஆணவமலத்துண்மை உனக்குத்தெரி தல் அரிதாம்.

அன்னியம் — வேற்றுப்பொருள். அனன்னியம் — தன்னில் வேறற நிற்கும் பொருள். கேவல நிலையிலும் சகல நிலையிலும் உயிர்க்கு உயிராக நிறைந்து நிற்பவன் இறைவன். திருவருள் வாய்க்கப்பெற்று உயிர் சுத்த நிலை எய்தும்போது, தொன்மைக்காலம் தொட்டே இறைவன் தன்னுள் வேறற நிறைந்து நிற்கும் பெருந்தகைமையை உணர்தல் கூடும்.

கேவல நிலையில் தான் என ஒன்று இல்லாததாகி ஆணவ மலமே வடிவாக உயிரின் அறிவை அது மறைத்து நிற்கும். ''ஒரு பொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும், இரு பொருளும் காட்டாது இது'' என்ற திருவருட்பயனும் (பாடல் 23) இதனை விளக்கும்.

கேவல நிலையில் உயிரை ஆணவம் மட்டிலுமே பற்றி இருக்கும். சகல நிலையில் ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றும் பற்றியிருக்கும். தூய நிலையாகிய சுத்த நிலையில் இவை யாவும் அகன்றவிடத்தே உயிர் திருவருளால், தான் மலத்தால் பற்றப்பட்டிருந்ததையும் இறைவனின்

பெருங்கருணையால் விடுதலை பெற்றதையும் அறிகின்ற அறிவைப்பெறும் என்பது இங்கு நிலை நிறுத்தப்பட்டது.

சகல நிலையில் மாயையின் காரியங்களும் கன்மத்தின் காரியங்களும் உயிரைப் பற்றி நின்றாலும் ஒடுக்கம் வரும் காலத்து அவை நீங்கி, மீண்டும் தோற்றுவிக்கும் காலத்து உயிரைப் பற்றும். பற்றியும் நீங்கியும் வருவது மாயா காரியங்கள்; கன்மத்தின் காரியங்கள். ஆணவ மலமோ அவ்வாறின்றி உயிரை வீடு பேறு அடையும் காலம் வரை பற்றியிருப்பது ஆதலால் ''இங்கு இது வழுவாது'' என்று கூறினர்.

இத்தகைய ஆணவ மலத்தை உண்டு என்று உணர்வதற்கும், அதன் உண்மை தெரிவதற்கும் திருவருளின் துணை இன்றியமையாதது. உணர்வதென்பது அனுபூதி என்பதும் தெரிதல் என்பது ஆராய்ச்சி என்பதும் குறித்தன.

ஆணவ மலத்தின் உண்மை உணர்ந்து கொள்வதற்கே அரிது. அதனையும் திருவருளே அறிவிக்க வேண்டும் என்ற ஆசிரியர், ஆணவ மலத்தை நீக்குவதற்கும் திருவருளே துணையாக வேண்டும் என்பதனையும் இப்பாடலில் வலியுறுத்தினர்.

**37 புகலும்மலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை**
**பொருந்தியிடும் அரன்அருளால் போதம் தீபம்**
**சகலம்எலாம் உடன்ஆய வாறு போலத்**
**தரும்அருளை மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்**
**இகல்இவரும் இவைஉணரில் இருள்வெளியாம் தன்மை**
**எய்தும்இவை தன்செய்தி இலங்கும் விந்து**
**பகர்வுஅரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்**
**பான்மையினல் ஒரு நாதம் படரும் தானே.**

இறைவன் திருவருளால் ஆணவமலத்தை அகற்றும் பொருட்டு கலை முதலாகிய மாயையின் காரியங்கள் உயிரின் அறிவைப் பொருந்தும். விளக்கு என்பது தகழி, திரி, நெய், சுடர் ஆகிய யாவற்றையும் கூட்டி ஒரு பொருளாகக் காணப்படுவது போல், இவ்வாறு கலை முதலியன உயிரின் அறிவைப் பொருந்துகின்றன அந்த நிலையிலும் கூட உயிரின் அறிவை ஆணவமலம் மறைத்து நிற்கும். ஆணவமலம் இருள் போன்றது. மாயாமலம் ஒளி போன்றது. எனவே இரண்டும் ஒன்றற்கொன்று மாறுபட்டன. இந்நிலையில் விந்து தத்துவத்தினின்றும் சொல்லுதற்கரிய உணர்வாகவும் ஒளியாகவும் உயிர்களின் வினைக்கு ஈடாக ஒரு நாதம் மேல் நோக்கி எழுந்து படரும்.

இதற்கு முந்திய பாடல்களில் ஆணவமலம் என்ற ஒன்று உண்டு என்புதையும் அது உயிரைத் தோற்றமில் காலந் தொட்டே பற்றி நிற்கும்

என்பதையும், அதுவும் உயிரின் இயல்பன்று உயிரின் குற்றமே என்பதையும், அதனை அறிந்து கொள்ளுவதும் அதனை நீக்குவதும் திருவருளின் துணையின்றி உயிர்களால் இயலாது என்றும் கூறிய ஆசிரியர் இந்தப் பாடலில் இறைவன் எவ்வாறு உயிர்களின் ஆணவத்தைப் படிமுறையே நீக்குகின்றான் என்பதனைச் சொல்லத் தொடங்குகிறார்,

ஆணவமலத்தை ஒழிப்பதற்காகக் கலை முதலிய மாயா காரியங்களை இறைவன் அருளால் உயிரின் அறிவு பொருந்தும். ஆணவம் இருள் போன்றது. மாயை ஒளி போன்றது. இந்த ஒளி பகற்காலத்தில் விளங்கும் கதிரவனது பேரொளி போல அல்லாமல் இருளைச் சற்றே நீக்கும் கை விளக்கைப் போன்றது. விளக்கு என்பது சுடரை மட்டும் குறியாமல் தகழி, திரி, நெய், சுடர் ஆகிய யாவும் சேர்ந்து அமைந்தது போல மாயையும் தூய மாயை,கலப்பு மாயை, தூவாமாயை ஆகியவற்றின் காரியங்களையும் ஒரு சேரக் குறித்தது. இவைகளை முறையே சுத்த மாயை,மிச்சிர மாயை அசுத்த மாயை என்று குறிப்பர்.

சுடர் போன்ற மாயை உயிரின் அறிவை விளக்குகின்ற போது ஆணவம் என்ற இருள் தன் தொழிலாகிய அறிவை மறைத்தலையும், உயிர் சிவனருளைச் சாராமல் தடுத்தலையும் செய்துவரும். ஒன்றற்கொன்று முரண்பட்டு வரும் இவ்விரண்டையும் உணர்ந்தால் இவற்றின் இயல்புகள் விளங்கும்.

சிவஞான மாபாடியத்தில் நான்காம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் ''மாயா தனு விளக்காய்'' என்ற பாடலுக்கு உரை வகுத்தருளிய மாதவச் சிவஞான முனிவர் ''காட்டாகி நின்று விடயங்களையறியுமாறு ஆன்ம ஞானத்தை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடுத்து நிற்றல் மலத்தின் செய்தி. இவையிரண்டும் இங்ஙனம் ஒளியும் இருளும் போல இகலி நிற்றலின், அத்தன்மைத்தாகிய மாயை இத்தன்மைத்தாகிய மலமாமாறு யாண்டையது'' என்று எழுதியுள்ளதும் இங்கு நினையத்தக்கது. சிவஞான சித்தியாரில் இக்கருத்து,

''போத காரியம் மறைத்து நின்றது புகல்மலம் காண்
ஓதலாம் குணமும் ஆக உயிரினுள் விரவலாலே
காதலால் அவித்தை சிந்தத் தரும்கலை ஆதி மாயை
ஆதலால் இரண்டும் சோதி இருள்என வேறாம் அன்றே''.
(சித்தியார் 174)

என்னும் பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு இறையருளால் உயிரின் அறிவில் கலை முதலியன பொருத்தப்பட்ட பிறகு அறிவும் விளக்கமுமாகிய விந்து சத்தி உயிர்களினிடத்திலே வாக்குகளைத் தோற்றுவிப்பதற்காக ஒரு நாதம் தோன்றும். இந்த வாக்கு சூக்குமை வாக்கு எனப்படும். இது நுண் ஒலி ஆகும்.

**38 வந்துஅடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்**
**வரும்அடைவு படஒடுக்கி மயில்அண்ட சலம்நேர்**
**சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி உயிரில்**
**சேர்ந்துவரும் அவைமருவும் உருஎவையும் தெரித்து**
**முந்தியிடும் செவியில்உரு உள்உணர்வாய் ஓசை**
**முழங்கியிடும் மத்திமைதான் வைகரியில் உதானன்**
**பந்தம்உறும் உயிர் அணைந்து வந்தமொழி செவியின்**
**பால்அணைய நினைந்தபொருள் பகரும்தானே**

முந்தைய பாட்டில் கூறப்பட்ட அறிவே வடிவமாகிய நாதம் என்ற சூக்குமை வாக்கு உந்தியிலே வந்து பொருந்தி எழுத்துக்களின் வெவ்வேருன ஒலிகள் நெரியாதபடி நிற்கும். மயிலின் முட்டையை வெளிச்சத்தில் பார்க்கும்போது அதனுள் பல்வேறு நிறங்களாய்த் தோற்றம் காட்டி அம்முட்டையை உடைத்தால் அந்த நிறங்கள் மறைந்து போவதைப் போல உயிரின் சிந்தையில் பைசந்தி வாக்கு நினைவு மாத்திரையாய் நிற்கும். அடுத்ததாகிய மத்திமை வாக்கு எழுத்துக்களின் ஒலி வடிவங்களை பிராண வாயுவோடும் கூட்டி நிரல்படுத்தி செவிக்கும் கேளாது உயிரினிடத்தில் உள்ளறிவாய் ஓசையுமாய் முழங்கும். நான்காவதாகிய வைகரி வாக்கு உதானன் என்னும் காற்றுப் பிராணவாயுவோடும் கூடிச்செவிக்குக் கேட்கத்தக்கதாக நினைவில் எழுந்த ஒலிக்கூட்டத்தைச் சொல்லாக மாற்றி ஒலிக்கச் செய்யும்.

முந்திய பாடலில் நால்வகை வாக்குகளில் சூக்குமை வாக்குப் பற்றிக் கூறிய ஆசிரியர் இப்பாடலில் மற்றை மூன்று வாக்குகளும் ஆகிய பைசந்தி, மத்திமை, வைகரி ஆகியவற்றைப் பற்றிக் கூறுகிருர்.

சூக்குமைவாக்கு நாதவடிவாக எழுந்து உந்தியை வந்து கூடி ஒலிக்கும் போது பைசந்தி வாக்காகிச் சொல்லுக்குரிய எழுத்துக்களை மயில் முட்டையின் உள்ளே தோன்றும் தெளிந்தும் தெளியாத நிற வேறுபாடுகளைப் போலாகி அதன் பின்னர்ப் பிராணவாயுவிஞேடும் கூடி மத்திமை வாக்காகி உள்ளுறு ஓசையாகி, உரக்கச் சொல்லும் போது பிராணவாயுவும் உதான வாயும் கூடி நா உள்நாக்கு பல் உதடு இவற்றில் படிந்து தெறித்துச் செவிப்புலனுக்குக் கேட்பதாகும் வைகரி என்னும் வாக்காகும்.

சூக்குமை நுண்ஒலி என்றும் பைசந்தி நினைவு ஒலி என்றும் மத்திமை மிடற்ருெலி என்றும் வைகரி செவி ஒலி என்றும் கூறப்படும். இவற்றுள் நுண்ஒலியாகிய சூக்குமை வாக்கு அழிவற்றது என்றும், மற்றவை அழியும் இயல்புடையவை என்றும் கொள்ளப்படும்.

**39 இத்தகைமை இறைஅருளால் உயிர்அறியும் அறிவுக்கு**
**ஈடாக வாடாதே ஈர்இரண்டில் உரைத்த**
**வித்தைமுதல் ஐவரால் விளங்கும் ஞானம்**
**மேவியிடும் என உரைப்பர் அசுத்தமாயை**

**வைத்தகலை தான்மூல மலம் சிறிதே நீக்கி**
**மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்**
**புத்திதரவித்தை இடை நின்று அறிவை உயிர்க்குப்**
**பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்திபுணர்ந்தே**

இந்த முறையிலே நிலை பெற்று வருகிற வாக்குக்கள் நான்கோடும் கூடி இறைவனின் பேரருளாலே உயிரின் அறிவுக்குத்தகுந்ததாக முன்னே கூறப்பட்ட சிவ தத்துவங்கள் ஐந்திலும் உயர்கின்ற அறிவு பொருந்தும் என்று பெரியோர்கள் கூறுவர். உயிரின் அறிவை மறைத்து நிற்கும் ஆணவ மலத்தை அசுத்தமாயை எனப்படும் தூவா மாயையில் தோன்றிய கலை, சத்தி தத்துவத்தின் துணையோடு சற்றே விளக்கும். அப்போது புலன்களின் வாயிலாகப் பொருள்களை உயிர் பொருந்தும். தூவாமாயையில் தோன்றியுள்ள வித்தை சுத்தவித்தையின் துணையைக் கொண்டு உயிருக்கும் பொருள்களுக்கும் இடை நின்று உயிர்களுக்கு அறிதல் விளைவிக்கும். இதனை இவ்வாறு செலுத்துவது சிவசத்தி ஆகும்.

மேலே இருபத்தோராவது பாடலில் எடுத்துரைக்கப்பட்ட சுத்த தத்துவங்கள் சிவசத்தியால் காரியப்படுத்தப்படும். அதன் பின்னர் அவற்றால் கலை முதலியன காரியப்படுத்தப்படும். கலை முதலியவற்றால் உயிர்களுக்கு அறிவு விளையும்

அதன் முறைமையாவது, கிரியாசத்தி, சத்தி தத்துவத்தைத் தொழிற்படுத்த அது காலத்தையும் நியதியையும் கலையையும் எழுப்பும். சாம்பல் பூத்த தழலில் மேலே படிந்திருக்கின்ற பொடி நீங்குவது போல, கலை உயிரின் அறிவை மறைத்துள்ள ஆணவமலத்தைச் சற்றே நீக்கும். அப்போது அந்தக் கலையே வடிவாக ஆன்மாவுக்கு அறிவு சிறிது விளங்கும். ஞானசத்தி சுத்தவித்தை என்னும் தத்துவத்தைத் தொழிற்படுத்த, அது வித்தையைச் செயல்படுத்தி அதனால் உயிருக்கு அறிவு விளையும்.

நுண் ஒலி (சூக்குமை) சிவதத்துவத்திலும் பைசந்தி என்ற நினைவு ஒலி சத்திதத்துவத்திலும், மிடற்று ஒலி (மத்திமை) சதாசிவதத்துவத்திலும், தன்னால் மட்டும் கேட்கப்படும் செவி ஒலி ஈசுவரதத்துவத்திலும், தனக்கும் பிறருக்கும் கேட்கும் செவி ஒலி (வைகரி) சுத்தவித்தையிலும் இடம் கொண்டிருக்கும். இறைவன், இச்சா ஞானக் கிரியா சத்திகள் சுத்த வித்தை முதலிய தத்துவத் தலைவர்களைச் செலுத்த அவர்கள் தத்தம் தத்துவங்களை வழி நடத்துவர்.

சத்தி தத்துவம் கலையை எழுப்பும் கலை ஆணவ மலத்தைச் சிறிதே நீக்கித் தொழிலாற்றலை விளக்கி வினைக்கு ஈடாக வரும் நுகர்வுகளைப் பொருந்துமாறு அவ்வுயிர்களைச் செலுத்தும். இவ்வாறு கூட்டும் முறைமை சிவபெருமானின் சத்தியாலே நிகழும்.

40 பேசரிய அராகம்தன் கன்மத்துக்கு ஈடாய்ப்
பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் நியதி
தேசம்மிகும் அரசர்தரும் ஆணைசெய்தி
செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல
நேசம்உறும் தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்
நிகழ்காலம் கழிகாலம் எதிர்காலம் என்றே
ஓசைதரவரும் காலம் எல்லைபலம் புதுமை
உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே.

சொல்லுவதற்கு அரிதாகிய அராகம் என்னும் தத்துவம் உயிர்கள் வினைக்கு ஈடாகப் பெற்றதிலே நின்றும் பெருததற்கு ஆசையை உண்டாக்கும். நியதி தத்துவம் என்பது நாட்டை ஆளும் அரசர் தமது ஆணையின் வலிமையினுல் நல்லது செய்தார்க்கு நன்மையும், தீயது செய்தார்க்கு ஒறுத்தலும் இயற்றுவது போல உயிர்களின் முன்னை வினை செய்தவர்க்கன்றி மற்றவர்க்குச் சேராவாறு வரையறை செய்யும். நிகழ் காலம், இறந்த காலம், வருங்காலம் என்று மூன்று வகையாகச் சொல் லப்படும் கால தத்துவம் முறையே பலம் எல்லை புதுமை ஆகியவற்றை உண்டாக்கும். இவற்றையெல்லாம் உயிர்க்குக் கூட்டுவது இறைவ னுடைய திருவருளாகிய சத்தியே.

அராகம் என்பது விருப்பம். உயிர்களின் விருப்பம் என்பது எல்லை யற்று வளர்ந்து கொண்டே போகும். ஆதலால் பேசரிய அராகம் எனப் பட்டது. அராகம் என்ற ஒரு தனித் தத்துவம் தேவையில்லை. நுகர் பொருள்களே ஒருவனுக்கு விருப்பத்தை எழுப்பும் என்று சிலர் வாதிடுதல் கூடும். பொருள்களின் இயல்பை உள்ளவாறு உணர்ந்தோர் வேண்டா மையில் தலைப்பட்டு மேன்மேல் எழும் விருப்பத்தைக் கட்டுப்படுத்துவதைக் காண்கிறோம். ஆதலின் அராகம் என்ற தத்துவமே விருப்பத்தை விளை விப்பது என்பதும், அதனுலே அவா அழுக்காறு முதலியன தோன்றி உயிர் களுக்கு வினைப் பயன்களை விளைவிக்கும் என்பதும் தெளிவாகிறது. அராகம் ''தம் கன்மத்துக்கு ஈடாய்ப் பெற்றதனில் ஆசைதனைப் பெருகு விக்கும்'' என்று ஆசிரியர் கூறுவதை நுணுகிப் பொருள் காண்க.

திருவாசகத்தில் ''பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக் கும் அன்பின் வெற்றடியேனை விடுதி கண்டாய்'' (நீத்தல் விண்ணப்பம் 23) என்ற மாணிக்கவாசகரின் திருவாக்கால் பெற்றவற்றிலேயே பேராசை மிகும் என்பது விளக்கப்படுகிறது. நீதி நெறி விளக்கத்தில் குமரகுருபர முனிவர் ''பெற்ற சிறுகப்பெருத பெரிது உள்ளும் சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிது அம்மா'' எனக் கூறுவதிலிருந்து பெற்ற பொருள் இருக்கப் பெருத பொருளினுக்கும் உயிர் பேராசை கொள்ளும் என்பதைஅறியலாம்.

நியதி தத்துவம் என்பது உலகத்து அரசர்கள் தம் ஆணையின் வழி நடந்து கொண்டவர்களுக்குப் பரிசைத் தந்தும், தம் ஆணையின்படி நட வாதவர்களுக்குத் தண்டனை அளித்தும் வருவதைப் போன்று, செய்தவர் செய்த வினையின் பயனை நுகருமாறு கூட்டுவதாகும். அதாவது வரை முறை செய்து மிகுதியும் குறைவுமில்லாமல் ஒருபடித்தாக வினைப்பயன் களை உயிர்களுக்கு ஊட்டும் தத்துவம் நியதி தத்துவம் ஆகும்.

அதனை அடுத்துக் கூறப்படும் கால தத்துவம் என்பது இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என்று மூன்று வகைப்படும். ''ஓசை தர வரும்'' காலம் என்பது இப்பாடலில் ''சொல்லப்படும் காலம்என்பது'' என்ற பொருள் குறித்து நின்றது. அதன் முன்னர்க்கூறப்பட்ட முக்காலங் கள் வரிசையாகத் தரப்படாமல் ''நிகழ்காலம், கழிகாலம், எதிர்காலம் என்றே'' என்று செய்யுள் ஆகலின் முறை பிறழ வைக்கப்பட்டது. இறந்த காலம் என்பது இன்பத் துன்ப நுகர்ச்சிகளுக்குஎல்லையை வகுத்துத் தரு வது. நிகழ்காலம் என்பது வினையினால் விளையும் பயனை உரிய பருவம் வந்தவுடன் உயிர்களிடம் சேர்த்துப் பலனைத் தருவது. எதிர்காலம் என்பது உயிர்களால் அறிய முடியாதபடி மறைக்கப்பட்டு நிற்பதனாலே உயிர் களுக்குப் புதுமையான நுகர்ச்சிகளை விளைவிப்பது.

மெய்கண்டாரின் நேரடி மாணவராகிய திருவதிகை மனவாசகம் கடந்தார் தம்முடைய நூலாகிய உண்மை விளக்கத்தில் கால தத்துவத் தைப்பற்றிக் கூறும்பொழுது ''எல்லை பலம் புதுமை எப்போதும் நிச்சயித் தல்'' (உண்மை விளக்கம்-19) என்று கூறி இருப்பது இங்கு நினையத் தக்கது.

இவை யாவற்றையும் சிவபெருமானுடைய திருவருளால் சத்தியே கூடி நின்று செயற்படுத்தும் என்பதையும் ஆசிரியர் விளக்கினார்.

**41 ஐவகையால் உறுபயன்கள் நுகரவரும் காலம்**
**அதுபுருட தத்துவம் என்று அறைந்திடுவர் அறிந்தோர்**
**மெய்வகைய கலாசுத்திதனில் இதற்கும் சுத்தி**
**மேவியிடும் வகைதானும் விரும்பிய நூல்விளம்பும்**
**செய்வகையின் தொடர்ச்சி இங்குத் தோன்றுவிக்கும்குணத்தின்**
**சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் அவைதாம்**
**இவ்வகையில் சாத்துவித ராசத தாமதமாய்**
**இயம்புவார்கள் ஒன்று இரண்டு குணம் ஏற்க உடைத்தே**

முன் இரண்டு பாடல்களிலும் கூறப்பட்ட கலை வித்தை அராகம் நியதி காலம் என்னும் ஐந்து தத்துவங்களாலும் வருகின்ற பயன்களை அனுபவிக்கும் பக்குவத்தை அடைந்த உயிரைப் புருட தத்துவம் என்ற பெயரிட்டுக் கூறுவர் உயர்ந்தோர். சிவாகமங்கள், கலா சுத்தி செய்யும் பொழுது இப் புருட தத்துவமும் சுத்தியடையும் என்று கூறும். பிரகிருதி

எனப்பட்ட மூலப்பகுதி மூன்று குணங்களாக விரியும். முக்குணத்தைத் தோற்றுவிக்கும் மூலப் பகுதிக்கு அவ்வியக்தம் என்ற பெயரும் உண்டு. குணதத்துவம் முன் செய்த வினையின் வகைக்கு ஏற்ப இன்பத் துன்பப் பயன்களாகிய தொடர்ச்சியைத் தோற்றுவிக்கும். முக்குணங்களும் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்று பெயர் பெறும். அவை ஒவ்வொன்றும் இரண்டிரண்டு குணங்களை ஏற்று ஒன்பது வகையாக விளங்கும்.

கலை வித்தை அராகம் நியதி காலம் என்ற ஐந்தும் பஞ்ச கஞ்சுகம் எனப்படும். கஞ்சுகம் என்றால் சட்டை அல்லது போர்வை என்று பொருள் தரும். பஞ்ச கஞ்சுகத்துடன் கூடி நுகர்ச்சிக்குத் தகுதி பெற்று நின்றிருந்த ஆன்மா புருட தத்துவம் என்ற பெயரைப் பெறும். இதனை மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் ''இனி, இங்ஙனம் கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் கூடிப் பொதுமையாற் போத்திருத்துவ மெய்தி நின்ற ஆன்மாப் பிரகிருதியைப் போக நுகர்ச்சியின் உன் முகத் திற்கேதுவாகிய அவிச்சை முதலிய பஞ்சக்கிலேச மென்னும் பும்ஸ்துவமல முடையனாய்ப் புருட தத்துவமென நிற்பன்'' எனக் கூறுகிறார்.

பும்ஸ்துவ மலம் என்பது, பஞ்சகிலேசம் எனக் கூறப்படும் ஐம் பெரும் துன்பங்களுக்குக் காரணமாக அமைந்தன. அவை அவிச்சை ஆங்காரம் அவா ஆசை கோபம் என்பன.

கலா சுத்தி என்பது தீக்கையின் போது ஆசிரியர் நிவிர்த்தி முதலான ஐந்து கலைகளையும் மாணவனின் உடலிலே ஐந்து வகைப்படுத்திச் செய்ய வேண்டும் ஆகையால் அதனோடு தீக்கையின் போது இவற்றிற்கும் சுத்தி மேவியிடும் என்று சிவாகமங்கள் கூறும் என்று உரைத்தார்.

மூலப்பகுதி என்பது அரும்பில் மணம் போல முக்குணங்களும் விளங்காது அடங்கி நிற்கும் வெளிப்படாத குண வடிவம் ஆகும். வெளிப் பட்டுத் தோன்றுவன முக்குணங்களும் அவற்றின் விரிவுகளும் ஆகும்.

**42 அலகில்குணம் பிரகாசம் லகுதை வியாபிருதி**
**அடர்ச்சி மிகும் கௌரவம் அநியமம் இவை அடைவே**
**நிலவியிடும் மும்மூன்றும் உயிர் ஒன்றில் கலந்தே**
**நிற்கும்இவை நிறைபுலனின் பயன் எவையும் கவரும்**
**குலவிவரு போகங்கள் இடமாய் மாறுக்**
**குறைவில் ஒளியாம் அலகில் புலனிடத்தின் ஒருமை**
**பலவகையும் உடையதாய்ப் பரன் அருளால் புந்தி**
**பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்கும் தானே**

அளவற்ற குணங்களுள் சாத்துவிகத்தில் பிரகாசமும் இலகுதையும் விளங்கும். இராசதத்துள் வியாபிருதியும் அடர்ச்சியும் விளங்கும். தாமதத் துள் கௌரவமும் அநியமமும் விளங்கும். இவ்வாறு கூறப்பட்ட ஆறும், சாத்துவிகம் இராசதம் தாமதம் ஆகிய மூன்றும் கூடி ஒன்பது குணங்களும்

உயிர்தோறும் கலந்தே நிற்கும். முக்குணங்களில் தாமதத்தால் புலன் இன்பத்தை மிக விரும்புகின்ற இயல்பும் மந்தமும் உயிருக்கு உண்டாகும். இராசதத்தால் நுகர்வுகளைத் துய்க்கின்ற வேகம் உயிர்களுக்கு வரும், சாத்துவிகத்தால் ஒருபோதும் மாருததும் குறைவற்றதும் ஆகிய அறிவு உயிர்களிடத்து விளங்கி நிற்கும். புத்தி தத்துவம் புலன்களோடு பல வாருகத் தொடர்பு கொண்டு விளங்குவதாகி ஐம்பது வகையான பாவகங் களையும் உண்டாக்கும்.

குணதத்துவம் என்பது ஆலமரத்தின் வித்துப்போல முக்குணங் களும் விரவித் தன்னளவில் நிற்கும் நிலையிலிருந்து அவ்வித்தின் முளை தோன்றினுற் போல மூன்று குணங்களும் ஏற்றத் தாழ்வின்றி அலைவற்று நிற்கும் நிலை. முக்குணங்களும் வேறுபட்ட அளவில் மிகுந்தும் குறைந்தும் கூடி வருவது புத்தி தத்துவம் ஆகும். குணதத்துவம் ஒன்பது வகையாக வும், புத்தி தத்துவம் ஒன்பது குணத்துக்கும் ஐம்பது ஐம்பதாக நானூற்று ஐம்பது பாவகங்களாகக் காரியப்படும் என்றும் இப்பாடலில் கூறினுர். பஞ்சாசத் என்ற வடசொல் ஐம்பது என்று பொருள் தரும்.

குண தத்துவம் மூலப்பகுதியின் விருத்தியே அல்லாமல் மற்றவற் றைப் போலப் பரிணமம் அன்று ஆதலின் இரண்டும் ஒன்ருக வைத்தும் எண்ணப்படும்.

சாத்துவிக குணம் மிகுந்தும் இராசதம் தாமதம் குறைந்தும் நிற்கும்போது பிரகாசம், இலகுதை என்று இரண்டு குணங்கள் தோன் றும். பிரகாசம் என்பது ஒளியும் இலகுதை என்பது மனமொழி மெய் களின் மென்மையான செயற்பாடும் ஆகும்.

இராசத குணம் மிகுந்தும் சாத்துவிகமும் தாமதமும் குறைந்தும் நிற்கும் போது வியாபிருதியும் அடர்ச்சியும் தோன்றும். வியாபிருதி என் பது சலனம் அல்லது வேகமான அசைவு என்று பொருள் தரும். அடர்ச்சி என்பது மனம் மொழி மெய்களின் கொடிய செயல்பாடுகளாம்.

தாமத குணம் மிகுந்தும் சாத்துவிகமும் இராசதமும் குறைந்து நிற் கும் போது கௌரவமும் அநியமமும் தோன்றும். கௌரவம் என்பது செருக்கு அநியமம் என்பது வரைமுறை பிறழ்ந்துகாலம் தாழ்த்திச்செயல் படுதல்.

இங்குக்கூறப்பட்ட மும்மூன்றும் ஒவ்வொரு உயிரிலும் கலந்தே நிற் கும் என்று விளக்கிய ஆசிரியர் இக்குணங்களால் வரும் பயன்களை எதிர் நிரல் நிறையாக எடுத்துக் கூறுகிருர். தாமத குணத்தின் மிகுதியால் செருக்கும் அறிவின்மையும் சோம்பலும் முதலியன தோன்றும். இராசத குணத்தின் மிகுதியால் செயல்படும் தன்மையும் இன்பத்தில் ஆர்வமும், கொடுமையும் முதலியன தோன்றும். சாத்துவிக குணத்தின் மிகுதியால்

ஒளியும் அமைதியும் அடக்கமும் முதலியன தோன்றும். இவற்றின் விரிவுகள் பல்வேறு வகைப்பட்டு பௌட்கர ஆகம விருத்தியுரை, சிவஞான மாபாடியம் முதலிய நூல்களுள் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

இவற்றின் விளைவாகப் புத்தி தத்துவம் பல்வேறு வகைப்பட்ட பாவகங்களையும் செய்யும் என்று உரைத்தார். இப்பாவகங்கள் நானூற்று ஐம்பது என்றும் அறுநூற்றுப் பதினன்கு என்றும் பல்வேறு வகையால் ஆசிரியர்களால் எடுத்துக் கூறப்படுகின்றன. பாவகங்கள் எண்ணற்ற வகைப்படுவன என்பதனை மாணிக்கவாசகர்,

''அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்றும் அறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு
அளவிலா ஆனந்தம் அளித்தென்னை ஆண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே''

[திருவாசகம்-கண்டபத்து-8]

என்று கூறுகிற திருவாக்கால் அறியலாம்.

**43** **ஆனதனு அதனில்உறும் அநிலனையும் இயக்கி**
**ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்**
**யான்அலது பிறர்ஒருவர் எனைஒப்பார் புவியில்**
**இல்லைஎனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்**
**தான்நுகரும் அளவில் அதில் முந்திஉறும் இச்சை**
**தான்உருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து**
**மானதம் ஆனதுநிற்கும் சிந்தைநினைவு ஐயம்**
**வந்துதரும் மனம்ஒழிய வகுப்பு ஒன்றே.**

ஆங்காரம் என்னும் தத்துவம் வினைக்கு ஈடான உடம்பிலே பொருந்திய வளிகளை இயங்கச் செய்து யான் என்னும் செருக்குக்கு வித்தாகி, எனக்கு ஒப்பானவர்கள் என்னைத் தவிர இவ்வுலகில் வேறு எவரும் இலர் என்ற அகந்தை உடையது ஆகிப் புலன் நுகர்ச்சிகளிலே முற்பட்டு நிற்கும். மனம் என்னும் தத்துவம் விழைவே உருவாகி சங்கற்பம் நிகழ்வதற்குக் கருவியாய் எந்நேரமும் அசைவு உடையதாய் விளங்கும். சித்தம் என்பது ஒப்பிட்டுக் காணும் நினைவோடு ஐயத்தினைத் தோற்றுவிக்கும். மனத்தின் வேருகச் சித்தம் என்ற ஒன்று உண்டெனினும் அது மற்றைத் தத்துவங்கள் போலப் பரிணமம் அல்லாததல், அதனை மனத்தினின்றும் வேறுபட்டது என்று கூற இயலாது.

உடலில் ஐந்து வாயுக்கள் இயங்குகின்றன என்பர். அவை பிராணவாயு, அபானவாயு, வியானவாயு, சமானவாயு, உதானவாயு எனப்படும். இந்த ஐவகை வளிகளும் காற்றே ஆயினும் தொழில் வேறுபாட்டால் ஐந்து வகைப்படும். ஆங்கார தத்துவம் இந்த வளிகளை இயக்கித் தானே இயங்கும். அதுவல்லாது என்னை ஒப்பார் இவ்வுலகில்

என்னைத் தவிர வேறு யாரும் இலர்'' என்னும் நீங்காத அகந்தைக்கு ஆங்காரமே வித்தாகும். அநிலம் — காற்று. உலகப் பொருள்களை உயிர் நுகரும் பொழுது அப்புலன்களிலே முந்திப் பொருந்தும் இயல்பினை உடையது இத் தத்துவம்.

மனம் என்னும் தத்துவம் இச்சையே வடிவமாகி எதிலும் நிலை பெருமல் ஒன்றுவிட்டு ஒன்று பற்றிச் சங்கற்ப விகற்ப உணர்வுகளுக்குக் கருவியாய் விளங்கும்.

சித்தம் என்பது ஐயத்தைத் தோற்றுவிப்பதாக, மனத்தின் வேருக வகுத்துச் சொல்ல முடியாது என்று இப்பாடலின் கடைசி வரியில் சொல்லப்பட்டது. எனினும் அந்தக்கரணங்கள் மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என நான்காகவே வகுத்து ஓதப்படும். அப்படியாயின் இப்பாடலின் இறுதி வரி முரண்பட்ட கருத்தைக் கூறுவதாகக் கொள்ளலாமோ எனின், அதன் விளக்கம் மாதவச் சிவஞான முனிவரால் சிவஞான மாபாடியத்துள் எடுத்துரைக்கப்பட்டு அமைதி கூறப்படுகிறது,

''இதனுனே மனத்தின் விருத்தியாகிய சித்தம் ஒன்று உண்டு என்பது பெற்ரும். அஃது ஏனைத் தத்துவங்கள் போலப் பரிணுமம் அன்மையின், மனத்தின் வேருக வைக்கற்பாற்று அன்று என்னும் கருத்தால், ''சிந்தை நினைவு ஐயம் வந்து தரும் மனம் ஒழிய வகுப்பு ஒணுதே'' என்ருர் புடை நூலாசிரியரும். ''சிந்தை நினைவு ஐயம் வந்து தரும்'' என்பதனைச் ''சிந்தை நினைவு வந்து ஐயந்தரும்'' என மாறுக.''சிந்தை நினைவுவந்து ஐயந்தரு'' தலாவது ''சித்தத்தின் தொழிற்பாடாகிய அங்ஙனந் தூக்கியெண்ணும் நினைவு நிகழ்ந்து வாதனையை வெளிப்படுத்து முகத்தான் ஐய நினைவைத் தோற்றுவித்தல்'' என்று சிவஞான மாபாடியத்துள் ஆங்கார தத்துவம் பற்றி விளக்குகின்ற பகுதியில் சித்தத்தைப் பற்றிய தெளிவான விளக்கத்தைக் கூறுகிருர் சிவஞான மாமுனிவர்.

**44 சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்**
**துண்டம்இவை ஐந்திற்கும் தொகுவிடயம் ஆக**
**மன்னிய சத்தப்பரிச ரூபரச கந்தம்**
**மருவியிடும் இவை அடைவே வாக்குப் பாதம்**
**பின்னர்வரு பாணிமிகு பாயுவிஞேடு உபத்தம்**
**பேசல்உறும் ஐந்திற்கும் பிறங்கு ஒலிகொள் வசனம்**
**உன்னரிய கமனதான விசர்க்க ஆனந்தம்**
**உற்றதொழில் பெற்றிடுவது உண்மை ஆமே.**

முன் கூறப்பட்ட முறைமையிலே உட்கரணங்களைத் தவிரவும் புறக்கரணங்கள் ஆகிய செவி, தோல், கண், நாக்கு மூக்கு ஆகிய இவை ஐந்தும் பற்றுவதற்கு உரியனவாக ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் ஆகிய

ஐந்தும் பொருந்துவனவாகும். செவி முதலிய இவ்வைந்தும் அறிவுப் பொறிகள். அவற்றை அடுத்துத் தொழிற் பொறிகள் ஆகிய வாய், கால், கை, எருவாய், கருவாய் என்ற ஐந்தினுக்கும் முறையே பேசுதல் நடத்தல் கொடுத்தல் கழித்தல் இன்புறுதல் ஆகிய ஐந்து தொழில்களும் பொருந்துவனவாம்.

இப்பாடலில் புறக்கரணங்களான அறிவுப் பொறிகள் ஐந்தும் அவை பற்றுவதற்குப் பொருளாக உள்ள ஓசை முதலிய ஐந்தும் தொழிற் கருவிகளாகிய வாய் முதலிய ஐந்தும் அவற்றின் தொழிலாகிய பேசல் முதலிய ஐந்தும் ஆகிய இருபதும் உயிருக்குத் துணையாகத் தொழிற்படு வதனை எடுத்துரைக்கிறார். அறிவுக் கருவிகள் ஞானேந்திரியங்கள் என்றும் தொழில் கருவிகள் கன்மேந்திரியங்கள் என்றும் கூறப்படும்.

முந்தைய பாடல்களில் அந்தக்கரணங்கள் எனப்படும் நான்கினை யும் கூறிய ஆசிரியர் மேலும் பத்துக் கருவிகளைப் பற்றிப் பேசுவது மிகை என்று கூறுவார்க்கு, மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத் தில், ''புறக்கரணம் நிகழ்காலப் பொருள் ஒன்றினையே அறியும். அந்தக் கரணம் முக்காலப் பொருளினையும் அறியும்'' என்று விடையிறுக்கிறார்.

அதன் பின்னரும் அறிவுப் பொறிகள் வேறாகவும் தொழிற் பொறி கள் வேறாகவும் கொள்ளுதல் வேண்டுமோ என்று வினா எழுப்புவோருக்கு மாதவச் சிவஞான முனிவர் ''இன்னும் அறிந்தன்றிச் செய்தல் கூடாமை பின், வாக்கு முதலிய கன்மேந்திரியங்களின் தொழிற்குச் செவி முதலிய ஞானேந்திரியங்களின் அறிவு உபகாரம் ஆதல் பற்றியும் அவை ஒருதலை யான் வேண்டப்படும் என்பது அறிக'' என்றும் விடை தருகிறார்.

அறிவுப் பொறிகள் தொழிற் பொறிகளுக்குத் துணையாக நிற்கும். ஆனால் தொழிற் பொறிகள் அறிவுப் பொறிகளுக்குத் துணையாக மாட்டா என்பதனையும் நுணுகி அறியலாகும்.

செவி — காது. துவக்கு — தோல். நோக்கு — கண். நாக்கு — வாய். துண்டம் — மூக்கு. இவை ஐந்தும் முறையே சப்தம் — ஓசை, பரிசம் — ஊறு, ரூபம் — ஒளி, ரசம் — சுவை, கந்தம் — நாற்றம் என்ற ஐந்தினையும் அறிவதற்குத் துணை செய்யும்.

தொழிற் பொறிகள் ஆகிய வாய் கால் கை எருவாய் கருவாய் ஆகிய ஐந்தும் பேசல் நடத்தல் கொடுத்தல் கழித்தல் இன்புறுதல் ஆகிய செயல்களுக்குத் துணை நிற்கும். தொழிற் பொறிகள் ஐந்தும் முறையே வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் எனக் கூறப்படும். இவற்றின் தொழில்கள் முறையே வசனம், கமனம், தானம், விசர்க்கம் ஆனந்தம் என்று கூறப்படும்.

45 முந்திய ஐம்பூதங்கள் வான் ஆதி யாக
முயங்கியநற் செவி நாசி கண்ணும் மெய்ம் முறையால்
இந்தவயின் நின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்உருவில் இலங்கியிடும் புறத்தும்
வந்துஅடைய இடம்கொடுக்கும் நிரந்தரமாய் வானும்
வாயுமிகச் சலித்து எவையும் திரட்டும் தீவெம்மை
தந்தவைசுட்டு ஒன்றுவிக்கும் நீர்குளிர்ந்து பதமே
தரும்உரத்துத் தரிக்கும்மிகு தரணி தானே.

ஐம்பூதங்கள் ஐந்து பொறிகளின் இடத்தில் பொருந்தி ஐம்புலன்களையும் அறிந்து வரும். ஒவ்வொரு பூதத்திற்கும் உருவம் குறியீடு எழுத்து முதலியன தனித்தனியே ஆகமங்களிலே கூறப்பட்டுள்ளன. ஐம்பூதங்களில் வான் எல்லாப் பொருள்களையும் தன்னிடத்திலே நிற்பதற்கு இடம் கொடுக்கும். காற்று பரந்து சலித்துத் திரட்டும். தீ வெப்பத்தைக் கொண்டு சுட்டு ஒன்றுவிக்கும். நீர் குளிர்ந்து தன்னோடு கூடிய பொருள்களைப் பதம் தந்து நெகழ்விக்கும். நிலம் கடினமாகி எல்லாவற்றையும் தாங்கும்.

கண்ணுக்குப் புலப்படும் காது மனித உடலின் உறுப்பு. கேட்கும் ஆற்றல் தொழிற்படுவதற்குத் உரிய இடம் அது. அதனுள் நின்று அறிவதற்குத் துணைசெய்யும் கருவி செவிப்பொறி எனப்படும். செவிப்பொறி ஓசையை அறியும். அவ்வாறு ஓசையை அறிவதற்குப் பற்றுக்கோடாக விளங்குவது வான் என்னும் பூதம். ஒவ்வொரு பொறிக்கும் புலனுக்கும் பொருள்களை மேற்கூறியவாறே கொள்ளுதல் வேண்டும். இனி முறையே தோல் காற்றினைப் பற்றி நின்று ஊற்றுணர்ச்சியை அறியும். கண் தீயைப் பற்றுக் கோடாகக் கொண்டு உருவத்தைக் காணும். வாய் நீரைப் பற்றி நின்று நாவைப் பொருந்திச் சுவையை அறியும். மூக்கு நிலத்தைப் பற்றிக் கொண்டு நின்று மணத்தை அறியும்.

இவ் விளக்கங்கள் யாவும் ஆசிரியர் மனவாசகம் கடந்தார் அருளிச் செய்த உண்மை விளக்கம் என்ற நூலில் விரிவாக எடுத்துச் சொல்லப் பட்டுள்ளன.

பொறிகளை இந்திரியம் என்பர். அவற்றை முறையே சுரோத்திரம் (சோத்திரம்), துவக்கு (தொக்கு), சட்சு, சிங்குவை ஆக்கிராணம் என்றும் கூறுவர். இவற்றிற்குச் செவி, தோல், கண், நாக்கு மூக்கு என்பன பொருள். இவற்றால் அறியப்படும் விடயங்கள் சப்தம், பரிசம், ரூபம், ரசம் கந்தம் என்று கூறப்படும்.

'தம் உருவில் இலங்கியிடும்' என்ற பகுதிக்கு ஐம் பூதங்களுக்கும் உருவம் குறியீடு அடையாள எழுத்து ஆகியவை தனித்தனியே உண்டு என்பதைக் குறிப்பால் உணர்த்தியதாகக் கொள்ள வேண்டும்.

**46 இங்நிரையில் ஐந்துசுத்தம் ஏழ்சுத்தா சுத்தம்**
**எண் மூன்றும் அசுத்தம் எனும் இவை முப்பத்து ஆறும்**
**மன்னியதத்து வங்கள்இடை மயங்கிநெடும் துயர்தாம்**
**மருவும் உருநிலை அழிய வரும்பொழுது வரியார்**
**பன்னகம் அண்டசம் கனவு படர்வகையே முன்னம்**
**பகரவரும் கலாதிநிலை பரவியசூக்குமம் ஆம்**
**தன்உருவில் அணைந்துபயன் அருந்தி அரன் அருளால்**
**தரையின் இடை வரும்என்று சாற்றும் நூலே.**

இம் முறையிலே சிவ தத்துவங்கள் ஐந்தும் சுத்த தத்துவங்கள் எனப்படும். வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்தாசுத்த தத்துவங்கள் எனப் படும். ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் அசுத்தத் தத்துவங்கள் எனப்படும். இவை மூன்றும் கூடி ஆக மொத்தம் தத்துவங்கள் முப்பத் தாறு. உயிர் இத்தத்துவங்களின் நடுவிலே மயங்கி இன்பத் துன்பங்களிலே பொருந்தி உழன்று வரும். நுகர்வதற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட வினைப் பயன்கள் கழியும் காலத்து உயிர் பாம்பு தோலை உரித்துப் புறம் போவது போலவும்; முட்டையில் பொறித்த குஞ்சுகள் முட்டையின் தோட்டை விட்டு நீங்குவது போலவும், நனவு நிலையிலே இருந்து கனவு நிலையை அடைவது போலவும் தொடர்பு முற்றிலும் அறுந்து பருவுடலை விட்டு மற்றையை உடல்களைப் பொருந்தி துறக்க நிரயங்களிலே இன்பத் துன் பங்களை நுகர்ந்து இறைவனருளாலே மீண்டும் இவ்வுலகில் பிறக்கும் என்று அருள் நூல்கள் கூறும்.

பாடலின் முதல் அடியில் இந் நிரையில் என்பதற்குப் பதிலாக இந் நிலையில் என்றும் பாடம் உண்டு. சிவ தத்துவங்கள் ஐந்தும் தூய்மை யானவை என்பது அவை தூமாயையின் தோற்றம் என்பதனுல். அடுத்து வரும் வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்தாசுத்தம் எனப்பட்டன. ஏனெனில் இவை தூவாமாயையில் தோன்றி சுத்த தத்துவங்களால் தொழிற்படுத்தப்படுவதனுல் என்பர். ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கும் மூலப் பகுதியில் தோன்றுவதனுல் அவை அசுத்தம் எனப் பட்டன.

இம் மூன்றும் பிரேரக காண்டம், போக காண்டம், போசயத்திரு காண்டம் என்று மூன்று தொகுதிகளாகக் கூறப்படும். சுத்தத் தத்து வங்கள் ஏவுதலாலும் செலுத்துதலாலும் பிரேரக காண்டம் எனப்பட்டது. வித்தியா தத்துவங்கள் நுகர்ச்சிக்கு உரியன ஆதலால் அவை போக காண்டம் என்ற தொகுதியாயிற்று. ஆன்ம தத்துவங்கள் உயிர்களுக்கு நுகர்ச்சியைக் கொடுத்து உடன் நிற்பதால் அவை போசயத்திரு காண்டம் எனப்படும்.

கலை முதலிய தத்துவங்கள் எட்டும் கூடிய பகுதி பரவுடல் எனப் படும் மிக நுண்ணிய உடல் ஆம். பூதங்கள் ஐந்து தன்மாத்திரைகள்

ஐந்து அறிவுப் பொறிகள் ஐந்து தொழிற் பொறிகள் ஐந்து அந்தக்கரணம் மூன்று குணம் ஒன்று மூலப்பகுதி ஒன்று கலே முதலியன ஐந்து ஆகிய இவை மொத்தம் முப்பது ஆகின்றன. இந்த எட்டுத் தொகுதியும் சேர்ந்த கொத்திற்குப் புரியட்டகம் என்று பெயர் கூறுவர்.

இந்த உலகில் வாழும் உயிர், வினையின் பயன்களை நுகர்ந்து தத்து வங்களில் பட்டு மயங்கித் துயர் உழன்று பருவுடலை விட்டு நீங்குகிற நேரம் வரும் போது அது எவ்வாறு நீங்கும் என்பதற்கு மூன்று உவமை களை ஆசிரியர் பயன்படுத்துகிருர். பாம்பு சட்டையை உரித்து விட்டுப் போவது போலவும் முட்டையை உடைத்து விட்டுப் பறவை தனித்துச் செல்வது போலவும் நனவு நிலே நீங்கிக் கனவு நிலே எய்தியது போலவும் என்பன அம் மூன்று உவமைகள். பாம்பு உவமை உயிர்கள் உடல் மாறிப் பிறக்கும் என்பதற்கும், முட்டை உவமை உயிர்கள் இடம் மாறிப் பிறக்கும் அதாவது, துறக்கம் நிரயம் இவற்றில் சென்று மீண்டும் இவ் வுலகில் பிறக்கும் என்பதற்கும், கனவு உவமை அறிவு வேறுபடுவதற்கும் கொள்ளப்படும்.

**47** **தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்**
**துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கில்**
**ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்பது என்றும்**
**ஊர்வ பதினைந்து அமரர் பதினுென் ருேடு உலவா**
**மாற்றருநீர் உறைவனநற் பறவைகள் நாற்காலி**
**மன்னியிடும் பப்பத்துமானுடர் ஒன்பதின்மர்**
**ஏற்றிஒரு தொகை அதனில் இயம்புவர்கள் யோனி**
**எண்பத்து நான்கு நூருயிரம் என்று எடுத்தே.**

உயிர்கள் உடம்பொடு பொருந்தி இவ்வுலகில் தோன்றும் போது அண்டசங்கள் சுவேதசங்கள் உற்பீசங்கள் சராயுசங்கள் என நான்கு வகைத் தோற்றங்கள் உடையன, இவ்வாறு தோன்றுவன ஏழுவகைப் பிறவிகளை உடையன. அவை தாவரங்கள், ஊர்வன, அமரர்கள், நீர் வாழ்வன, பறவைகள், நான்கு கால்களுடைய விலங்குகள், மானிடர்கள் என்று ஏழு வகைப்படும். இவை ஒவ்வொன்று கூடி எண்பத்து நான்கு நூருயிரம் வகைப்பட்ட பிறவிகள் என்று கூறுவர்.

அண்டசம் என்பன முட்டையிற் பிறப்பன. சுவேதசம் என்பன வேர்வையில் பிறப்பன. உற்பீசம் என்பன வித்தில் விளைவன. சராயுசம் என்பன கருப்பையில் தோன்றுவன. பாடலில் கூறப்பட்ட எண்ணேடு நூருயிரம் என்று கூட்டி உரைத்துக் கொள்க.

''ஈரிரண்டு தோற்றத்து எழு பிறப்புள் யோனி யெண்பான்
ஆரவந்த நான்கு நூருயிரத்துள்'' (கந்தர் கலிவெண்பா)

என்ற குமரகுருபரர் திருவாக்கும்

''உரைசேரும் எண்பத்து நான்கு நூருயிரமாம் யோனி பேதம்''
என்ற திருஞானசம்பந்தர் திருவாக்கும் இங்கு நினையத்தக்கன.

**48 இனைய பல பிறவிகளில் இறந்து பிறந்து அருளால்**
**இருவினைகள் புரிந்து அருந்தும் இதுசகலம் அகலா**
**முனம்மருவும் இருபயனும் ஒரு காலத்து அருந்த**
**முந்துநுகர் உந்துபயன் அந்தம்உற வந்த**
**வினையும் எதிர்வினையும் முடிவினை உதவு பயனுல்**
**நேராகநேர் ஆதல்மேவும் கால்முன்**
**சினம்மருவு திரோதாயி கருணை ஆகி**
**திருந்திய சத்திநிபாதம் திகழும் அன்றே.**

இவ்வாறு இறைவன் திருவருளால் பல்வேறு பிறவிகளிலே பிறந்தும் இறந்தும் இருவினைகளைப் புரிந்தும் அவ்வினைகளின் பயன்களை அனுபவித்தும் வருவது சகலநிலை என்று கூறப்படும். அச் சகலநிலை அகலுவதற்கு முன் வந்து பொருந்திய இன்பத்துன்பங்களாகிய அவ்விரு வினைப் பயன்கள் இரண்டும் ஒரு காலத்தில் உண்ண நுகரும் பயன் முடிவுறும் பொருட்டு வந்த வினையும் எதிர்வினையும் முடிவடையும் பயனுல் வினையிரண்டும் துலை ஒத்து நேராக நேராகும் காலம் வந்தடையும். அதன் முன்னர் வரை சினத்தைப் பொருந்தியிருந்த திரோதாயி கருணையாக மாறித் திருந்திய சத்திநி பாதம் திகழ்ந்து விளங்கும்.

முப்பத்து ஏழாவது பாடல் தொடங்கி இந்தப் பாடலில் இது சகலம் என்பது வரையில் உயிர்கள் சகல நிலையில் நிற்குமாற்றை ஆசிரியர் விளக்கினுர். அதன் பின்னர் இப்பாடலில் சகலநிலை நீங்கும் காலத்து உயிர்களுக்குத் திருவருள் காரணமாக நேரிடும் விளைவுகளைக் குறித் தருளுகிறுர்.

நால் வகைத் தோற்றத்து ஏழுவகைப் பிறப்புள் எண்பத்து நான்கு நூருயிரம் விதமான பிறவிகளில் நல்வினை தீவினைகளுக்கு ஈடாகப் பிறந்தும் இறந்தும் வருகின்ற உயிர்கள் தத்தம் வினைக்கு ஏற்ற இன்பத் துன்பங்களை நுகர்ந்து வரும். இரு வினைப் பயன்கள் இரண்டனையும் காலந் தோறும் நுகர்ந்து கழித்து உரிய காலம் வாய்க்கும் போது அவை முடியும் தருணம் இறைவன் திருவருளால் வரும். இதனை இருவினை யொப்பு என்பர். மலபரிபாகம் எனப்பட்ட, ஆணவ மலத்தின் வலிகுன்றிய நிலை எய்தும் பொழுது சத்திநிபாதம் என்னும் திருவருள் பதிதல் நிகழும்.

இருவினை யொப்பு என்பது இன்பத் துன்பங்கள் இரண்டிலும் ஒப்ப உவர்ப்பு உண்டாதல் அதாவது இரண்டிலும் பற்றற்று இருத்தல் என்பர். சிவஞான சித்தியாரில் இது,

''இருவினைச் செயல்கள் ஒப்பில் ஈசன்தன் சத்தி தோயக்
குருஅருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்

திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறிவு ஒழிந்து ஞானம்
பெருகி நாயகன்தன் பாதம் பெறுவது சுத்தம் ஆமே.''

என்று விளக்கப்படுகிறது.

திரோதான சத்தி என்னும் மறைப்பு ஆற்றல் உயிர்களின் ஆணவ மலத்தின் ஆற்றல் தேயுமாறு ஆன்மாக்களுடன் நின்று உதவிவரும். அவ்வாறு உதவுங்கால் உயிர்களுக்கு இன்பத் துன்ப மயக்கங்கள் உண்டாகும். ஆணவ மலத்தின் வலி குன்றித் தேய்ந்து மல பரிபாகம் நிகழும் போது, திரோதான சத்தியே திருவருள் சத்தியாக மாறி உயிர்கள் பேரின்பத்தை அடைவதற்குத் துணை புரிந்தருளும். இதற்கு மரபு வழியாக ஓர் உவமை சொல்லப்படும். புளிப்புச் சுவையுடைய மாங்காய் பழமாகக் கனியும் காலம் வரும் போது மாம்பழமாகி இனிப்புச் சுவை தருவது போன்றது இத்த மாற்றம் என்று கூறுவர்.

இறைவனது ஆற்றலாகிய திரோதாயி, இயல்பாகச் சினம் உடையதன்று. உயிர்களைப் பக்குவப்படுத்தும் பொருட்டே சினத்தை மருவி உயிர்களைத் துன்பத்தில் செலுத்தி, பக்குவம் வந்துற்ற போது அதுவே கருணையாகி அருள்புரிகிறது என்பதை விளக்க, ''முற்சினமருவு திரோதாயி கருணை ஆகி'' என்று கூறினர். போற்றிப் பஃறொடையில் இக்கருத்து,

''உய்யும் நெறிசிறிதே உண்டாக்கிப் — பையவே
மட்டாய் மலராய் வருநாளில் முன்னை நாள்
மொட்டாய் உருவாம் முறை போலக் — கிட்டியது ஓர்
நல்ல பிறப்பில் பிறப்பித்து நாடும்வினை
எல்லை இரண்டும் இடைஒப்பில் — பல்பிறவி
அத்தம் அதில் அன்றே அளவு என்று பார்த்திருந்து
சத்தி பதிக்கும் தரம்போற்றி''

என்று ஆசிரியர் உமாபதி சிவத்தால் எடுத்துக் கூறப்படுகிறது.

இப்பாடலை மாதவச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியம் எட்டாம் நூற்பாவில் முதல் அதிகரணத்தில் இருவினையொப்பு யாது என்பதனை விளக்குமிடத்து எடுத்துக் கூறிப் பொருளை விரித்து உரைக்கிறார். மற்றைய ஆசிரியர்கள் பாடலின் இரண்டாம் அடியை ''இருபயனும் ஒரு காலத்து அருந்த முந்து நுகர் உந்து பயன் அந்தமுற வந்த வினையும்'' என்று பிரித்துப் பொருள் கூறுகிறார்கள். இதற்கு 'வினைப் பயன்களை ஒரு காலத்தில் அனுபவிப்பதற்கு நுகரும் காலத்தின் கண் உந்துகின்ற பயன் முடிவுற வந்தவினையும்' என்றுபொருள் கூறுகின்றார்கள் அதாவது நுகர் என்பதனை முதல் நிலைத் தொழிற் பெயர் ஆக்கி ஏழாம் வேற்றுமை உருபினை வருவித்து நுகர்வின் கண் என்று பொருள் கொள்ளுவார்கள். மாதவச் சிவஞான முனிவர், தொல்காப்பியம் சொல் அதிகாரத்தில் இடைச் சொற்கள் பற்றிக் கூறுகின்ற ''உம் உந்து ஆகும்

இடனுமாருண்டே'' என்ற நூற்பாவை எடுத்துக் காட்டி நுகருந்து என்பதை நுகரும் என்று பொருள் கொண்டு அதனைப் பெயர் எச்சம் ஆக்குவார். அதனால் பயனும் வந்த வினையும் எதிர் வினையும் என்று எண்ணும்மைகளாகக் கொள்ள வேண்டும் என்பது அவர் கருத்து என்பது புலப்படுகின்றது.

இலக்கணம் சிதம்பரநாத முனிவர் மாதவச் சிவஞான முனிவரின் பன்னிரண்டு மாணவர்களுள் ஒருவர் என்பர். அவர் சிவப்பிரகாசத்திற்கு வகுத்துள்ள உரையில் தான் நுகர் என்ற சொல் முதல் நிலைத் தொழிற் பெயராக கொள்ளப்பட்டு ஏழாம் வேற்றுமை உருபு வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது.

இவற்றின் விரிவும் பொருத்தமும் சிவஞான மாபாடியப் பகுதியில் நுணுகிப் படித்து உணரலாம்.

**49 நாடிய சத்திநிபாதம் நாலு பாதம்**
**நண்ணும்வகை எண்ணரிய ஞானபாதம்**
**கூடுமவர் தமக்குஉணர்வாய் நின்றஞானக்**
**கூத்தன் ஒரு மூர்த்திகொடு குறுகி மோக**
**நீடிய கேவலசகலம் நிகழா வாறு**
**நிறுத்திமலம் அறுக்கும் அது நிலையார் சுத்தம்**
**கேடில்புகழ் தரும்சரியை கிரியா யோகக்**
**கேண்மையரேல் இவைஉணர்த்தக் கிளக்கும் நூலே**

முன் பாடலிலே குறிக்கப்பெற்ற சத்திநி பாதம் என்பது நான்கு வகைப்படும். அவை மந்ததரம், மந்தம். தீவிரம், தீவிரதரம் என்பன. மிகத் தீவிரமான நான்காம் சத்திநி பாதம் நண்ணியவர்களுக்கு உயிருக்கு உயிராய் நின்ற ஞானக்கூத்தப் பெருமான் வடிவம் கொண்டு எழுந்தருளுவான். மறைப்பை உண்டாக்கும் கேவல அவத்தையையும் மாறுபாடுகளை உண்டாக்கும் சகல அவத்தையையும் நிகழாவண்ணம் தன் அருளிலே நிறுத்தி அவர்களின் மலத்தைப் போக்குவான். இது நிலை பெற்ற சுத்த அவத்தை எனப்படும். இந்த நிலை யாருக்கு வாய்க்கும் எனக் கேட்பின் புகழ்மிக்க சரியை, கிரியா யோகங்களை முறையே கடைப்பிடித்தவர்களுக்கு எண்ணுதற்கரிய சுத்தம் உணர்த்தப்படும் என்று ஆகமங்கள் கூறும்

சத்திநிபாதம் என்பதை நான்கு வகைப்படுத்திக் கூறுவது மரபு. அவை முறையே வாழைத் தண்டில் தீப்பற்றுவது போன்றும், பச்சை விறகு, உலர்ந்த விறகு, அடுப்புக்கரி இவற்றில் தீப்பற்றுவது போன்றும் என்று கூறுவர். நான்காம் சத்திநி பாதம் எய்திவர்களுக்கு உணர்வும் உரையும் கடந்து நின்ற இறைவன் அருள் திருமேனி கொண்டு முன்னே தோன்றி மாருத பேரின்பத்தை வழங்கி அருள் பாலிப்பான்.

**50 அரிவையர்இன் புறும்முத்தி கந்தம் ஐந்தும்**
**அறும்முத்தி திரிகுணமும் அடங்கும் முத்தி**
**விரிவுவினை கெடும்முத்தி மலம்போம் முத்தி**
**விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி**
**பரவும்உயிர் கெடுமுத்தி சித்திமுத்தி**
**பாடாண முத்திஇவை பழிசேர்முத்தி**
**திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி**
**திகழ்முத்தி இதுமுத்தித் திறத்தது ஆமே**

பல்வேறுபட்ட சமயங்களிலே முத்தி நிலை என்று கொள்ளப்படுவன பின்வருமாறு அமைகின்றன. மகளிரிடத்து நுகர்கிற இன்பமே முத்தி என்பது உலகாயதர் கொள்கை. உருவம் வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்ற ஐந்து கந்தங்களும் கெடுவதே முத்தி என்பது நான்கு வகைப் பௌத்தர்களில் ஒரு சாரார் ஆன சௌத்திராந்திகர் கொள்கை. முக்குணங்களும் கெடுவதே முத்தி என்பது சமணரில் நிகண்ட வாதியும் நிரீசுர சாங்கியமும் கொண்ட கொள்கை. வினைகள் கெடுவதே முத்தி என்பது பிரபாகர சமயத்தின் கொள்கை. ஆணவ மலம் முற்றிலும் அழிந்து போவதே முத்தி என்பது அகச் சமயத்துள் பேதவாதிகள் கூறும் கொள்கை. இவ்வுடல் முத்தி நிலையிலும் அழியாது நிலை பெற்றிருக்கும் என்பது சிவசமவாதிகள் கூறும் கொள்கை. இந்த வுடலில் கட்டுப்பட்டு நிற்கிற ஆன்மா விவேக ஞானம் பெறுவது முத்தி என்பது மாயா வாதிகளின் கொள்கை ஆன்மா என்ற ஒன்றே அழிந்து போவது முத்தி யாகும் என்பது பாற்கரிய வாதிகளின் கொள்கை. உயிர் பசு கரணம் கெட்டுச் சிவகரணம் பெறுவதே முத்தி என்பது அகச் சமயங்களில் ஒன்றான சிவசங்கிராந்தவாதிகளின் கொள்கை. உயிர் ஒன்றையும் அறி யாமல் கல்லைப்போல் கிடக்கும் நிலையே முத்தி என்பது பாடாணவாதிகள் கூறும் கொள்கை. இவ்வாறு பத்து வகையாகச் சொல்லப்பட்ட முத்தி களும் குற்றமுடையன. முத்தி நிலையைப்பற்றிய சரியான கொள்கை எதுவெனில் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களிலிருந்தும் விடுதலை பெற்று உயிர் அருளோடும் கூடிப் பேரின்பத்தை எய்துவதே முத்தியைப் பற்றிய சிறந்த கொள்கையாகும்.

இது வரையில் காரண அவத்தை என்று சொல்லப்படும் கேவல அவத்தை. சகல அவத்தை. சுத்த அவத்தை ஆகிய மூன்று நிலைகளைப் பற்றியும் விரிவாகக் கூறி வந்த ஆசிரியர் முத்தி நிலை பற்றிப் பொது அதி கரரத்தின் இறுதியிலே எடுத்துரைக்கிறார். பிற சமயங்களிலே கூறப் படுகிற பத்து வகை முத்தி நிலைகளை மட்டும் எடுத்துக் கூறி அவை யாவும் பழிசேர் முத்தி என்று எடுத்துக் காட்டுகிறார்.

இவற்றுக்கு மாறாக சைவசித்தாந்தத்தில் கொள்ளப்பட்ட முத்தி நிலை பற்றிய கொள்கையே சரியான கொள்கை என்றும் அதனாலே முத்தி

நிலையின் உண்மையான இயல்பு உயிர் மும்மலங்களையும் விட்டு நீங்கித் திருவருளோடும் கூடி மாருத பேரின்பம் அநுபவிப்பதாகிய சித்தாந்த முத்தியே சிறந்த முத்தி என்றும் நிலை நாட்டுகிருர்.

இவ்வுலகத்தில் வாழ்கின்ற உயிர்கள் துன்பத்திலும் இன்பத்திலும் மாறி மாறி உழன்று வருவதால் இவ்உலக வாழ்வு குறை உடையது என்பது எல்லாச் சமயங்களிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை. எனவே கட்டுக்களிலிருந்தும் விடுபெற்று இதனினும் உயர்ந்த நிலையினை உயிர்கள் எய்தல் வேண்டும் என்பதும் எல்லாச் சமயங்களுக்கும் ஏற்புடைய கருத்து. முத்தி என்ற சொல் விடுதலை கட்டு நீங்கிய நிலை, வீடு பேறு என்ற பொருள்களைத் தரும் ஆனல் இந்த முத்தி நிலை ஆகிய வீடு பேறு எத்தகைய தன்மை உடையது என்று விளக்குவதிலே சமயங்களுக்குள்ளே கருத்து வேறுபாடு எழுகிறது. இப்பாடலில் ஆசிரியர் பத்து வேறுபட்ட சமயங்களின் முத்தி நிலை பற்றிய கொள்கைகளைக் கூறி அவற்றை மறுக்கிருர்.

இவற்றின் விரிவுகள் சிவஞான சித்தியார் பரபக்கத்திலும், சங்கற்ப நிராகரணத்திலும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

சைவ சித்தாந்தத்தில் முத்தி நிலை, வீடு பேறு என்னும் சொல்லால் குறிக்கப்பெறும். வீடு என்பது தளைகளிலிருந்து விடுபடுவதாகிய பாச வீடும் பேறு என்பது சிவப்பேறு என்பதும் இதனல் உணர்த்தப் படுகிறது. மலங்களிலிருந்து விடுபட்டு சிவபெருமானின் திருவடிக் கீழ் நண்ணரிய சிவானந்த ஞான வடிவே யாகி நிற்றல் சைவ சித்தாந்தம் கூறும் வீடு பேறு.

## உண்மை அதிகாரம்

சிவப்பிரகாச நூலை அருளிச் செய்த ஆசிரியர் உமாபதிசிவம் தாமே அதனை இரண்டு அதிகாரங்களாகப் பகுத்துள்ளார் என்பது நூலிலிருந்தே புலனுகிறது. நூல் வழியும் நூற் பெயரும் கூறுகின்ற பதினேராம் பாடலில் ''பொது உண்மை எனக் கருதி யானும் அருத்தி மிக உரைப்பன் வளர் விருத்தம் நூறும் ஆசில் சிவப்பிரகாசம் ஆகும் அன்றே'' என்று கூறுகிருர். அவ்வாறே ஐம்பத்தொன்ருவது பாடலில் ''இங்கு இவை பொது இயல்பு என்பார்கள்'' என்று கூறுகிருர். ஆதலினுலே ஐம்பது பாடல்கள் முடியப் பொது அதிகாரம் என்பதும் அதன் மேல் உள்ள பாடல்கள் உண்மை அதிகாரம் என்பதும் தெளிவுறுத்திஞர்.

நூலின் இறுதியில் தொண்ணூற்று ஒன்பதாவது பாடலில் 'மலைவு அறும் உணர்வால் பெத்த முத்திகள் மதித்தாம் அன்றே' என்று கூறு வதன் மூலம் இந்நூல் உயிர்கள் கட்டு நிலையில் நின்ற முறைமையும் வீட்டு நிலையில் நிற்கும் முறைமையும் எடுத்துரைத்தது என்பதனைத் தெளிவு படுத்துகிருர்.

சிவஞான போதம் ஆகிய முதல் நூல் இவ்வாறே பொது அதிகாரம் என்றும் உண்மை அதிகாரம் என்றும் இரண்டாகப் பகுத்து வழங்கப்படு கிறது. மாபாடியம் வகுத்த மாதவச் சிவஞான முனிவரும் இவ்வாறே வகுத்துக் கொண்டு உரை வரைந்துள்ளார். சிவஞான போதத்துள் முதல் ஆறு நூற்பாக்கள் பொது அதிகாரம் என்றும் பின் ஆறு நூற்பாக்கள் உண்மை அதிகாரம் என்றும் கொள்ளப்பட்டுள்ளன. மெய்கண்டதேவ நாயனரே இவ்வாறு அதிகாரங்களை வகுத்தாரா என்பதை நூலிலிருந்து அறிந்து கொள்ள அகச்சான்று ஏதும் இல்லை.

சிவஞான போதத்தின் வழி நூலாகவும் அதற்குச் செய்யுள் நடை யில் அமைந்த முதல் விளக்க நூலாகவும் திகழ்கின்ற சிவஞான சித்தியார், பரபக்கம் சுபக்கம் என்ற இருபெரும் பிரிவுகளைக்கொண்டுள்ளது. ஆசிரியர் அருள் நந்தி சிவம் தாமே பிரிவுகளை வகுத்தார் என்பது அந்நூலிலிருந்தே தெரியக் கிடக்கின்றது. ஆயினும் பரபக்கத்தின் தொடக்கத்தில் ''பெத்தமோடு முத்தி எல்லாம்.....துகள்தீர இந்நூலில் சொல்லகிற்பாம்'' என்று கூறிய ஆசிரியர் சுபக்கத்தின் தொடக்கத்தில் பொது உண்மை என்ற அதிகார வரம்பைக் கூறவில்லை என்பதும் நினையத் தக்கது.

சிவஞான போதத்திற்குப் பின்னர் எழுந்த நூல்களாகிய சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் ஆகிய இரண்டையும் முதல் நூலின் பன் னிரண்டு நூற்பாக்களுக்கு ஏற்ப வகுத்துப் பொருள் கூறுவது மரபு. இவ்வாறு அதிகார அடைவு செய்வது சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு மிகவும் பொருந்தி வருகிறது. சிவப்பிரகாசத்திற்குப் பன்னிரு சூத்திர அடைவுஅவ்வளவு பொருந்துவது இல்லை என்பதும் கருதத் தக்கது. ஆயி னும் பழைய உரை ஆசிரியர்கள் பன்னிரண்டு சூத்திரங்களுக்கு அமை யவே சிவப்பிரகாசத்திற்கும் உரை எழுதும் மரபினைக் கைக்கொண்டிருக் கிறார்கள்.

ஆசிரியர் உமாபதிசிவம் தம் நூலின் பகுப்பு முறையை உண்மை அதிகாரத்தின் முதற் பாடலில் தாமே வகைப்படுத்திச் சொல்லுகிறார். என்பதும், அது உரை ஆசிரியர்களின் கருத்துக்குச் சற்றே மாறுபட்டது என்பதும் மனத்தில் கொள்ளத்தக்கன.

**51 இங்குஇவை பொதுஇயல்பு என்பர்கள் இதன்மேல் ஆன்மாத்**
**தங்கிய அஞ்சு அவத்தை தன்உண்மை உணர்த்தும் தன்மை**
**பொங்கு ஒளி ஞான வாய்மை அதன் பயன் புனிதன் நாமம்**
**அங்குஅதில் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளினாலே.**

இந்த நூலுள் இதற்கு முந்திய ஐம்பது பாடல்களிலும் கூறப்பட்ட கருத்துகள் இறை உயிர் தளை ஆகிய முப்பொருள்களின் பொது இயல்பினை உணர்த்தும் என்பர், இதற்கு மேற்பட்ட பாடல்களிலே இறைவன்

திருவருளின் துணை கொண்டு ஆன்ம இலக்கணமும் ஐந்து அவத்தைகளும் ஆன்ம இயல்பை உணர்த்தும் தன்மையும் ஒளி மிகுந்த ஞான வாய்மையும் அதன் பயனும் திருவைந்தெழுத்தும் அணைந்தோர் தன்மையும் எடுத்துரைக்கப்படும்.

இப்பாடலில், வருகின்ற அதிகாரத்துக்கு ஏழு உட் தலைப்புக்கள் அமைக்கப்பட்டுள்ளன என்று ஆசிரியர் கூறியுள்ளார். ஆயினும் காவை அம்பலவாணத் தம்பிரான் இந்நூலுக்கு எழுதியுள்ள கொளுச் செய்யுளில் உண்மை நிலையின் ஒன்பது தன்மையும் என்று கூறியுள்ளமை கருதத் தக்கது. ஞான வாய்மையை அடுத்து அதன் பயன் என்று பாடலில் கூறப்பட்ட பயன் மூன்ருக விரியும். அவை ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி ஆன்ம லாபம் என்பன. ஏழு என்று கூறப்பட்ட இயல்கள் ஒன்பதாக விரியும்.

**52 செறிந்திடும் உடலுள் மன்னிச்சேர்புலன் வாயில்பற்றி**
**அறிந்துஅதில் அழுந்தும்ஒன்றும் அறிந்திடா அறியும்தன்மை**
**பிறிந்து அடை அஞ்சு அவத்தை பெருகிய மலத்தால் பேணி**
**உறும்தனி அதீதம் உண்மை உயிர்க்குஎன உணர்த்தும் அன்றே**

உயிர் என்பது தன் வினைக்கு ஈடாகப் பெற்ற வுடலிலே வாழ்நாள் முழுவதும் நின்று புலன்களைச் சேர்ந்து பொறிகளைப் பற்றி உலகத்துப் பொருள்களை அறிந்தும் அனுபவித்தும் வரும். உயிர் தானே நேராக அறியாமல் இவ்வாறு தத்துவங்களின் வாயிலாக அறிந்து வந்தாலும் அவற்றின் துணையால் அன்ருே அறிகிருேம் என்பதனை உயிர் அறியாது. அத்தத்துவங்களும் அறிவுடையன அல்ல. கருவிகள் கூடிய வழி அறிகின்ற உயிர் அவற்றைப் பிரியும் போது அறியும் இயல்பு குறைந்து கொண்டே வரும். அதனுல் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் ஐந்து நிலைகளையும் பொருந்தியும் நீங்கியும் வரும். இவ்வாறு ஐந்து அவத்தைப் படுவது ஆணவ மலத்திஞல் உளதாகும். உயிரின் உண்மை நிலை என்பது கருவிகளோடு சாராது தனித்து இருக்கும் உயிர்ப்படங்கல் நிலை என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

நனவு முதலிய ஐந்து நிலைகளும் முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்று வழங்கும். இவை காரிய அவத்தைகள் எனப்படும். பதஞ்சலி யோக சூத்திரம் என்ற வடமொழி நூலில் அதன் ஆசிரியர் மூன்று நிலைகளையே கூறி துரியம், துரியாதீதம் என்ற இரண்டனையும் கூறிஞர் அல்லர். அந்நூலுக்கு உரை எழுதிய வாசஸ்பதி மிசிரர் தமது உரையில் துரியத்தைக் கூறிஞர். துரியாதீதத்தை கூறிஞரல்லர். சிவாகமங்கள் துரியாதீதம் உட்பட்ட ஐந்து நிலைகளையும் கூறுகின்றன.

நனவு நிலையிலே முப்பத்து ஐந்து கருவிகளும், கனவு நிலையிலே இருபத்து ஐந்து கருவிகளும், உறக்க நிலையில் மூன்று கருவிகளும், பேருறக்கத்தில் இரு கருவிகளையும் உயிர்ப்படங்கலில் ஒரு கருவியையும் உயிர் பொருந்தி நீங்கும். அதனால் ஐந்து நிலைகளும் நிகழும் என்று உரைப்பர். இந்தக் கருத்து சிவஞான சித்தியார் சுபக்கத்தில்

''சாக்கிரம் முப்பத்து ஐந்து நுதலினில் கனவு தன்னில்
ஆக்கிய இருபத்து ஐந்து களத்தினில் சுழுனை மூன்று
நீக்கிய இதயம் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியாதீதம் நுவலில் மூலத்தில் ஒன்றே.

[சிவஞான சித்தியார்-223[

என்று கூறப்பட்டுள்ளது.

துரியாதீத நிலையில் கருவிகள் ஒன்றுமில்லை என்றாலும் மூலப்பகுதி என்னும் தத்துவம் உயிருக்கு உடலாகப் பொருந்தி இருப்பதனால் அதுவும் உயிரும் தனித்து இருக்கும் என்று பொருள் கொள்ளுவர்.

இந்நூலின் அறுபதாவது பாடலில் ''எண்ண ஒன்று இலாத தீதம்'' என்று கூறப்பட்டுள்ளதும், சிவஞான சித்தியார் சுபக்கத்தில் ''கேவலம் சகலம் சுத்தம்'' என்று தொடங்கும் பாடலில் ''கேவலம் தன் உண்மை'' என்று கூறப்பட்டதும் இக்கருத்தினை வலியுறுத்துவன ஆகும்.

**53 உருஉணர்வு இலாமையாலும் ஓர்ஒரு புலன்கள் ஆக**
**மருவி நின்று அறித லாலும் மனுதிகள் தம்மில் மன்னித்**
**தருபயன் நுகர்த லாலும் உயிர்சடம் ஆதலாலும்**
**அருவினை உடலுள் ஆவி அறிவினால் அறியும் அன்றே**

ஆன்மா எனப்படுவது ஒன்று இல்லை என்று கூறுகின்ற புறச்சமயத்தவரின் கருத்துக்களை மறுத்துக் கூறுவது இப்பாடல். உருவுடைய உடம்பு உறக்கத்தின் போதும் உயிர் நீங்கிய போதும் அறிவதில்லை. ஐம்புலன்களும் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறியாது. எனவே அவற்றால் வரும் பயன்கள் அனைத்தையும் அறிகின்ற ஆன்மா அவற்றிலும் வேறாக ஒன்று உண்டு. மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் ஆகிய நான்கும் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறியாது, ஆகையினாலும், தம்முள்ளும் ஒன்றை ஒன்று அறியாது ஆகையினாலும் இவற்றால் வரும் பயனை நுகர்வதற்கு இவற்றின் வேறாக ஆன்மா என்ற ஒன்று உண்டு. எப்போதும் இயங்கிக்கொண்டிருக்கிற உயிர்க் காற்று (பிராணவாயு) அறிவற்ற சடப்பொருள். எனவே அதுவும் ஆன்மா அன்று. ஆன்மா என்பது அறிவுடைப் பொருளாகி இறைவன் திருவருளாலே அறிவிக்க அறிந்து வினைக்கு ஈடாக எடுத்த உடலுள் வாழும்.

உடலே அறிவென்றும், ஐம்பொறிகளே அறிவென்றும், அந்தக் கரணங்களே அறிவென்றும், உயிர்க் காற்றே அறிவென்றும் எனவே

ஆன்மா என்று ஒன்று இல்லை என்றும் வாதிடுகிற புறச் சமயத்தாரை நோக்கி அவர்களின் கருத்தை மறுத்தற்கு எழுந்தது இப்பாடல். அவர்கள் கூறும் கருத்துக்கள் காரணம் காட்டி மறுக்கப்பட்டன.

உள்ளம் உயிர் என்ற சொற்கள் ஆன்மாவைக் குறிக்கப் பயன் படுத்தப்படும். எனினும் இப்பாடலில் மூன்ருவது வரியில் வருகின்ற 'உயிர்' என்ற சொல் இந்த இடத்தில் ஆன்மாவைக் குறிக்காமல் பிராண வாயுவைக் குறித்தது. நான்காவது வரியில் வருகிற 'ஆவி' என்ற சொல் ஆன்மாவைக் குறிக்கும். உயிர் சிற்றறிவுடையது. ஆதலால் இறைவன் திருவருளால் உணர்த்தினுல் அல்லது உணர இயலாது என்பது தெளி வுறுத்தப்பட்டது.

**54 அறிவுஎனில் வாயில்வேண்டா அன்றுஎனில் அவைதாம் என்னே**
**அறிவதை உதவும் என்னில் அசேதனம் அவைதாம் எல்லாம்**
**அறிபவன் அறியும் தன்மை அருளுவன் என்னில் ஆன்மா**
**அறிவுஇலது ஆகும் ஈசன் அசேதனத்து அளித்தி டானே.**

ஆன்மா தானே எவற்றையும் அறியும் அறிவு என்று கொண்டால் அதற்குப் பொறிகளின் உதவி தேவையில்லை. அங்ஙனமாயின் ஆன்மா அறிவுடையதன்று என்று கொள்ளலாமோ எனில் அறிவற்ற ஆன்மா வுக்குக் கருவிகள் எதற்காக? கருவிகளாகிய இந்திரியங்கள் தான் உயிருக்கு அறிவைத் தருகின்றன என்று கூறின் அக்கருவிகள் அறிவற்ற சடப்பொருள்கள் ஆதலால் அவற்ருல் அறிவைத் தர முடியாது. எல்லாம் அறிந்தவன் ஆகிய இறைவன் இக் கருவிகளின் மூலமாக உயிருக்கு அறிவைக் கொடுப்பான் என்று கொண்டால், ஆன்மா என்ற சடப்பொரு ளுக்கு அறிவு அளிப்பதற்காகக் கருவிகள் என்ற சடப்பொருளின் மூலமாக இறைவன் செயல் படுகிருன் என்று ஆகும் அதைக் கருவிகளின் இடை யீடு இல்லாமலே நேரே உயிருக்கு அளித்திட மாட்டானே என்ற கேள்வி எழும்.

ஆன்மா என்ற பொருள் உண்டு என்று கொண்டு அது அறிவுடைப் பொருளா? அல்லது அறிவற்ற பொருளா? என்பதிலே தமக்குள் பிணங்கிய சமயவாதிகளை மறுத்து சித்தாந்தக் கருத்தை இப்பாடல் விளக்குகிறது.

ஆன்மா அறிவுடையது என்று கொண்டால் தானே அறியும் தன் மையுடைய ஆன்மாவுக்குக் கருவி கரணங்களின் துணை எதற்காக வேண்டப்படுகிறது? காணும் ஆற்றல் உடைய கண் ஆயின் அதற்கு மூக்குக் கண்ணுடியின் துணை எதற்காக? எனவே கண்ணில் குறை இருக் கிறது அந்தக் குறையை நிறைவு செய்யக் கண்ணுடி தேவைப்படுகிறது என்பது புலனுகிறது அன்ருே? திருவருட்பயனில். பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு, அறிவு என்ற பேர் நன்று அற'' (பாடல் 15) என்ற பாடலும் இக்கருத்தை வலியுறுத்துகிறது. எனவே ஆன்மா முற்றறிவு உடையதன்று.

அடுத்துப் பொறிகளே ஆன்மாவுக்கு அறிவை உதவும் என்ருல் என்ன? அறிவுள்ள பொருள் அறிய உதவும் என்ருல் பொருந்தும்; பொறிகள் அறிவற்ற சடப்பொருள்கள் ஆதலால் அவற்ருல் ஆன்மாவுக்கு அறிவைத் தர முடியாது என்பது தெளிவு.

எல்லாம் வல்லவனுகிய இறைவன் சடமாகிய கருவி கரணங்களின் வழி ஆன்மாவுக்கு அறிவினை உதவுவான் என்ருல் அவ்வாறு வழங்கும் இறைவன் அவ்வறிவினை உயிருக்கு நேரே வழங்காது இடையிலே பொறிகளுக்கு வழங்கி அவற்றின் மூலம் ஆன்மாவுக்கு வழங்குவானேன்? நேரடியாக உயிர்க்கு அறிவை வழங்கும் ஆற்றல் இறைவனுக்கு இல்லை எனின் அது அவனது வரம்பில்லா ஆற்றலுடைமைக்கு இழுக்கன்ருே?

எனவே அறிவுடைப் பொருளாகிய உயிர் மலத்தால் பற்றப்பட்டு அறிவு மறைக்கப்பட்டு நிற்கிறது என்றும், இறைவன் திருவருளால் கருவி கரணங்களைக் கூட்டி உயிரின் அறிவை விளங்கச் செய்கிருன் என்பதும்; உணர்த்த உணர்தல் உயிரின் இயல்பு என்பதும் இப்பாடலால் தெளிவுறுத்தப்பட்டது.

**55 அறிவினுல் அறிந்தயாவும் அசத்துஆதல் அறிதிஎன்றும்**
**அறிவினுல் அறியொணுதேல் ஆவதொன்று இன்மைதொன்மை**
**அறிவுதான் ஒன்றை முந்தி அதுஅது ஆகக்காணும்**
**அறிவுகான் அசத்து மற்றஅது அறிவினுக்கு அறியொண்ணுதே**

உயிரறிவினுல் அறியப்படக் கூடிய உலகத்துப் பொருள்கள் எல்லாம் அசத்துப் பொருள்கள் என்று அறிவாயாக. (அசத்து—நிலையற்றது) எனவே இறைவன் என்பவன் உயிரின் அறிவினுல் அறியப்படாதவன் என்பதாயிற்று. அவ்வாருயின் இறைவன் ஒரு காலத்தும் உயிரால் அறியப்படாதவன் என்று கொண்டால் இறைவனுல் உயிருக்கு ஆவது ஒரு பயனும் இல்லை எனப்படும். அப்படியானுல் உயிரின் அறிவால் அறியப்படுவது எது என்னின் பொறி புலன்களோடு கூடி ஒவ்வொன்றும் பற்றிச் சுட்டியறியும் அறிவே உயிரின் அறிவு. அதனுற்ருன் உயிரால் அறியப்படும் பொருள்கள் நிலையற்றன எனப்பட்டன. நிலைத்த பொருளாகிய இறைவன் உயிரின் அறிவாலே அறியப்படாதவன் என்று அறிக.

அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் சுட்டியறியப்படும் பொருள்கள் எல்லாம் தோன்றி நின்று அழியும் இயல்புடையன. சைவ சித்தாந்த மெய்ப்பொருள் நூல்களில் எல்லாம் தலைசிறந்து விளங்குகின்ற சிவஞான போதம் இக்கருத்தை வலியுறுத்தியே தொடங்குகின்றது. இங்கே சுட்டியறிவது உயிரின் அறிவு. சுட்டியறியப்படுவன அவையவப் பகுப்பு உடையனவாய்ப் பொறிகளால் அறியப்படுவனவாய் உள்ள உலகத்துப் பொருள்கள். அவை உயர்திணை ஆயின் அவன் என்றும் அவள் என்றும் அஃறிணையாயின் அது என்றும் சுட்டப்படுவன. இப்படிச் சுட்டப்பட்ட பொருள்கள் எல்லாம் நிலையற்றன.

அசத்து என்ற சொல் சைவசித்தாந்தத்தில் நீர் மேல் எழுத்தும், நிகழ் கனவும், பேய்த்தேரும் போல நிலைத்திருப்பது போலத் தோன்றி, நிலையாது அழிந்து போவனவற்றைக் குறிக்கும். இல்லாத பொருளைக் குறிக்காது. உலகத்துப் பொருள்கள் யாவும் காரண வடிவில் இருக்கும் போது வெளிப்பட்டுத் தோன்ரு. காரிய வடிவில் வரும் போது அவை சுட்டியறியப்படுவனவாய் வெளிப்பட்டுத் தோன்றும். அவை அழியும் போதும் இல்லாமல் போகாமல் மீண்டும் தத்தம் காரணத்துள் ஒடுங்கும். சைவசித்தாந்தத்தில் முப்பொருள்களும் அதாவது பதி, பசு, பாசம் என்ற மூன்றும் என்றும் நிலைபேறு உடையவை. எனவே இங்கு அசத்து என்று குறித்தது பருப்பொருளாக விளங்குகின்ற உலகத்தையே என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

நிலையாதவற்றை நிலைத்தன என்று கொள்ளுவது புல்லறிவு என்பார் திருவள்ளுவர்.

''நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறிவாண்மை கடை (குறள்.331[

கடவுளை என்னுல் காணக்கூடவில்லையே. அவனை எனக்குக் காட்டினுல் தான் நம்புவேன் என்று கூறும் கொள்கையினர்க்கு இதுவே தக்க விடையாதலை நினைவு கூர்க.

உயிரறிவால் காணும் தகைமையன் அல்லன் இறைவன் என்பதனைச் சிவஞான சித்தியார் சுபக்கம்,

''அன்னியம் இலாமை யானும் அறிவினுள் நிற்ற லானும்
உன்னிய எல்லாம் உள்நின்று உணர்த்துவன் ஆதலானும்
என்னது யான்என்று ஓதும் இருஞ்செருக்கு அறுத்தலானும்
தன்னறிவு அதனுல் காணும் தகைமையன் அல்லன் ஈசன்''

என்று கூறுகிறது. திருவாசகத்தின் திருச்சதகத்தில் மாணிக்கவாசகப் பெருமான், ''அனைத்து உலகும் ஆய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா, எனைத்து எனைத்தது எப்புறத்தது எந்தை பாதம் எய்தவே'' என்று கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

உயிரறிவால் அறியப்படாத பொருளாயின் இறைவன் என்பவனுல் உயிருக்கு ஒருபயனும் இல்லையோ எனின், அவ்வாறன்றுஇறைவனைஅறிய முடியாத தன்மை உயிர் சிற்றறிவுடையது என்பதனுல் வந்தது என்க. உயிர் கருவிகளின் துணை கொண்டு சுட்டியறியும் சிற்றறிவுடையது. ஆனுல் இறைவனையறியும் ஞானம் என்பது சுட்டறிவும் சிற்றறிவும் கடந்து நிற்பது. பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன் என்று இறைவனை அருள் நூல்கள் கூறும்.

**56 எவ்அறிவு அசத்து அறிந்தது எனில்உயிர் அறியாதுஈசன்**
**அவ்அறிவு அறியான் அல்லது அசேதனம் அறியாதுஆவி**
**செவ்விய கருவி கூடித் தெரிவுருது அருளில் சேர**
**ஒவ்இரு வகையது என்னில் ஒளிஇருள் ஒருங்கு உருவே**

முப்பொருள்களுள் அசத்து ஆகிய பாசத்தை அறிந்தது எதன் அறிவு? உயிர் தானே அறியும் வல்லமை அற்றது. எனவே அதனுல் அசத்தை அறிய இயலாது. இறைவன் யாவற்றையும் ஒருங்கே அறியும் பேரறிவாளன். ஆகையால் அவன் அசத்தைச் சுட்டியறியமாட்டான். பாசமோ அறிவற்ற சடப்பொருள் ஆதலால் அதனுலும் அசத்தை அறிய இயலாது. தனித்தனியாக நின்ற முப்பொருள்களும் இவ்வாறு அசத்தை அறிய மாட்டா என்னில் அவை தம்முள் இணைந்து நின்று அறியுமோ என்னும் கேள்வி எழுகிறது. உயிரும் பாசமும் கூடினுல் உயிர் தானே அறிய வல்லதில்லை ஆதலாலும் பாசம் அறிவற்றது ஆகையாலும் அவை இரண்டும் கூடி அசத்தை அறியமாட்டா. இறைவனும் உயிரும் கூடிய நிலையில் அசத்தை அறியுமோ எனில், கட்டு நிலையில் இறைவனும் உயிரும் கூடுவதில்லை. இறைவனும் பாசமும் ஒளியும் இருளும் போல ஆதலின் இவ்விரண்டும் கூடி ஓரிடத்தில் இருப்பதில்லை.

முந்திய பாடலில் 'அறிவினுல் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி' என்று அறிவுறுத்திய ஆசிரியர் அவ்வாறு அசத்தினை அசத்து என்று கண்டு அறிவதற்கு உரியது முப்பொருள்களுள் எது என்ற வினுவை எழுப்பி இப்பாடலில் விடை தருகிருர். முப்பொருள்களும் தனித்து நின்றும் அறிவதில்லை. இரண்டிரண்டாகக் கூடி நின்றும் அறிவதில்லை என்று காட்டுகிருர். அடுத்து வரும் பாட்டில் இதற்குத் தெளிவான விடையையும் தருகிருர்.

இப்பாடலில் நான்காவது வரியில் ஒவ்இரு வகையது என்று வருமிடத்தில் உவ்விரு வகையது என்று பாட வேறுபாடும் உண்டு. முதல் பாடத்துக்கு ஒத்த இரு வகை என்று பொருள் காண்பர். இரண்டாவது பாடத்தில் உகரம் சுட்டுப் பொருளில் வந்தது. அவ்விரு வகை என்று பொருள் காண்பர்.

**57 சத்து இதுஎன்று அசத்துத்தான் அறியாது அசத்தைச்**
**சத்துஅறிந்து அகலவேண்டா அசத்துஇது சத்துஇது என்றுஓர்**
**சத்துஇருள் ஒளி அலாக்கண் தன்மையதாம் அசத்தைச்**
**சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத்து ஆமே**

சத்து இது என்று அசத்துப் பொருள் அறியாது. சத்துப் பொருளாகிய ஈசன் அசத்தை அறிந்து அதிலிருந்தும் நீங்க வேண்டுவதில்லை. ஆகையால் அசத்து இது என்றும், சத்து இது என்றும் ஓர்ந்து தெளிந்து அசத்தினை விட்டு நீங்கிச் சத்தினைச்சார்ந்து பயன்பெற வேண்டிய பொருள்

இந்த இரண்டும் அல்லாத சதசத்து எனப்படும் உயிரே ஆகும். இது எவ்வாறு எனில், கண்ணுகிய இந்திரியம் இருள் இது என்றும் ஒளி இது என்றும் ஓர்ந்து அறியும் ஆற்றலைப் பெற்று. அவ்விரண்டிலும் வேருக விளங்குவதைப் போன்றது. சத்துடன் கூடி அசத்தை விட்டு நீங்குவதால் இது சதசத்து எனப்படும்.

அசத்துப் பொருள் அறிவற்றது. ஆகையினுலே சத்துப் பொருளை அறியும் அறிவு அதற்கு இல்லை. இயல்பாகவே பாசங்களில் இருந்து நீங்கியவனுகிய இறைவன் அசத்தை விட்டுநீங்க வேண்டிய தேவையில்லை. பாசங்கள் இறைவனைப் பற்றும் ஆற்றல் உடையவை அல்ல. எனவே இவ்விரண்டனுக்கும் வேருகிய உயிர் அசத்தினை விட்டு நீங்குதலும் சத்தினைச் சார்ந்து பயன்பெறுதலும் வேண்டும்.

இதற்கு உவமையாக இருள், ஒளி, கண் ஆகிய மூன்றையும் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிருர். ஒளி போன்றது சத்துப் பொருள். இருள் போன்றது அசத்துப் பொருள். ஒளியைச் சார்ந்தால் கண் காணும் ஆற்றலைப் பெறுகிறது. இருளைச் சார்ந்தால் காணும் ஆற்றலைக் கண் இழக்கிறது. இந்த இரண்டின் வேருக நின்ற கண்ணுக்கு, கண் ஒளி என்ற ஆற்றல் உண்டு அவ்ஆற்றல் பொருள்களைக் காண்பதற்கு ஓரளவே துணையாகும். எனவே கதிரவன் ஒளியின் துணை கொண்டே கண்ணுல் பொருள்களைக் காண முடிகிறது,

பேரொளிப் பிழம்பாகிய இறைவனின் துணை கொண்டே சிற்றறிவுடைய உயிர் பிறவிப் பெரும்பயனை அடைதல் கூடும் என்பது இப்பாடலில் விளக்கப்பட்டது. சிவஞானசித்தியாரில் இக்கருத்து,

''அறிந்திடும் ஆன்மா ஒன்றை ஒன்றிஞல் அறிதலானும்
அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறிதலானும்
அறிந்திடும் தன்னையும் தான் அறியாமை யானும் தானே
அறிந்திடுவன் அறிவன் அன்றும் அறிவிக்க அறிவன் அன்றே''

என்று விளக்கப்படுகிறது.

**58 கண்ணெளி விளக்கு அளித்தும் காட்டிடும் என்னில்முன்னம்**
**கண்ணெளி ஒன்றும்இன்ரும் விளக்கொளி கலந்துஅவற்றைக்**
**கண்ணெளி அகல நின்றே கண்டிடும் வேறு காணு**
**கண்ணெளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்து ஒன்று அன்றே**

விளக்கொளி தான் கண்ணிற்கு ஒளியைக் கொடுத்துப் பொருள்களைக் காட்டும் என்று கொள்ளுதல் தவருகும். ஏனெனில் அவ்வாறு கொண்டால் கண்ணுக்கு ஒளியில்லை என்ருகும். பொருள்களின் மீதுபடிந்த விளக்கொளியைக் கண்ணெளி அவற்றினின்றும் அகன்று நின்று காணும். அதாவது இருளில் நிற்பான் ஒருவன் கண்களும் இருளுக்குள்ளேயே இருப்பனவாயினும், தொலைவிலே விளக்கொளி படிந்த பொருள்களையும்

அவனால் காண இயலும், எனவே கண்ணுக்கு எனத் தனித்த ஓர் ஒளி உண்டு. ஆயினும் விளக்கில்லாவிடத்துக் கண்ணொளி தானே தனித்து நின்று காணும் ஆற்றல் உடையதன்று. கண்ணின் ஒளியும் விளக்கின் ஒளியும் கூடின என்னும் போது அவை இரண்டும் ஒரே பொருள் அன்று தனித்தனிப் பொருள்கள் என்பதே கருத்து.

கண்ணுக்குத் தனக்கென ஓர் ஒளி உண்டு என்றதன் வழி உயிருக்குத் தனக்கென ஓர் அறிவுண்டு என்பது பெறப்பட்டது.

கண் ஒளியைச் சார்ந்தும் இருளைச் சார்ந்தும் முறையே பார்வை பெற்றும், பார்வையற்றும் நிற்பது என்பதனால் உயிர் இறைவனைச் சார்ந்து பேரின்பத்தையும், மலத்தைச் சார்ந்து அறியாமையையும் பெறுதற்கு உரியது என்பது விளக்கப்பட்டது.

விளக்கொளியின் உதவியின்றிக் கண் காண இயலாதது போலத் திருவருளின் உதவியின்றி உயிரும் அறிய இயலாதது என்பது உணர்த்தப் பட்டது.

கண்ணொளியும் விளக்கொளியும் கூடும் என்ற போதும், இரண்டும் வெவ்வேறு பொருள்களேயன்றி ஒன்று அன்று என்பதன் மூலம் கட்டு நிலையில் இறைவனது உதவி உயிர்க்கு உயிராய் நின்று உணர்த்து மேனும் அவை இரண்டும் அத்துவித நிலையை அப்போது எய்தமாட்டா என்பது கூறப்பட்டது. கண் எல்லாவற்றையும் சுட்டி நின்று அறியும். விளக்கொளி சுட்டாது நின்று எல்லாவற்றையும் காட்டும் என்றும் பொருள் கொள்ளுக.

**59 ஓர்இடத்து இருத்தல் மாயா உருநிறைந்திடுதல் ஒன்றும்**
**பேர்இடத்து உறைதல் தானே பிறங்கு அறிவாகி நிற்றல்**
**சோர்வுடைச் சடம்நிகழ்த்தல் எனும்இவை சொல்லார் நல்லோர்**
**ஓர்விடத்து உணரும் உண்மை ஒளிதரும் உபலம்போலும்**

ஆன்மா ஓர் உடலிலிருந்து அறியும் காலத்து இதயத்தில் புல் நுனியில் தங்கும் பனித்துளி போல இருந்து அறியும் எனச் சிலர் கூறுவர். மற்றும் சிலர் ஆன்மா உடம்பின் அளவு நிறைந்து நின்று அறிந்திடும் என்று கூறுவர். இரண்டும் பொருத்தமற்றன. வேறு சிலர் ஆன்மா என்பது இறைவனைப் போல எங்கும் நிறைந்து அறியும் என்று கொள்ளுவர். இக்கருத்தும் பொருந்தாது. இனிச் சிலர் ஆன்மா அறிவு வடிவாகியே நிற்கும். அதன் முன்னிலையில் கரணங்கள் தொழிற்படும் என்பர். இவர் கருத்தும் பொருத்தமற்றதே. பின்னும் சிலர் ஆன்மா தானே அறியும் வல்லமை உடையது அதனுக்கு ஒருவர் அறிவிக்க வேண்டுமென்பதில்லை என்பர். இவர் கருத்தும் தவறு, வேறு சிலரோ மனம் முதலிய கருவிகள் உயிருக்கு அறிவைத் தருவனவேயல்லாமல்

உயிர் அறிவற்றது என்று கொள்வர். இதுவும் தவருன கருத்தே. சைவ சித்தாந்தம் உணர்ந்த நல்லோர் உயிர் உணர்கின்ற தன்மையை ஆய்ந்து பார்த்து அது ஒளி தரும் படிகத்தின் இயல்பு போலச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது என்பர். மற்றக் கருத்துக்களை சைவ சித்தாந்திகள் ஏற்கவில்லை.

இதயத்தில் பனித்துளி போல இருப்பது ஆன்மா என்ருல் உடம்பின் ஊற்று அறிவு இல்லை என்று ஆகும். மேலும் ஓரிடத்தில் இருக்கும் என்ருல் ஆன்மாவுக்கு உருவம் உளது எனப்பட்டு அது அறிவற்ற தாகவும், அழியும் ; தன்மை உடையதாகவும் முடியும். இவ்வாறு இக்கருத்து குற்றப்படுவதால் நல்லோர் சொல்லார் என்ருர். இவ்வாறே இதன் பின் வரும் கருத்துக்களை மறுக்கும் இடத்தும் நல்லோர் சொல்லார் என்பதனை ஒவ்வோர் இடத்தும் இயைத்துப் பொருள் கொள்ளுக.

மற்ருெரு சாரார் ஆன்மா உடல் முழுதும் நிறைந்து நின்று அறியும் என்பர். அப்படியானுல் உடல் வளரும் போது ஆன்மாவும் வளரும். நோய் முதலியவற்ருல் உடல் வற்றும் பொழுது ஆன்மாவும் சுருங்கும் எனக் கொள்ளுதல் வேண்டும். நனவு, கனவு, உறக்கம், பேர் உறக்கம், உயிர்ப் படங்கல் ஆகிய ஐந்தும் உயிர்க்கு எவ்வாறு வருகிறது என்பதை விளக்க முடியாது. ஐம்பொறிகளும் புலன்களை ஒரு காலத்தில் நுகராமைக்கு விளக்கம் சொல்ல இயலாது. யானையின் ஆன்மா பெரிது, எறும்பின் ஆன்மா சிறிது என்ற கொள்ள வேண்டி நேரும். எனவே இக்கொள்கை பொருந்தாது.

உயிர் இறைவனைப் போல எங்கும் நிறைந்தறியும் என்ற கொள்கையும் பிழையுடையது. ஏனெனில் உயிர் பிறந்து இறந்து வருகிறது. ஐந்தவத்தைப்படுகிறது புலன்களை ஒன்ருென்ருக அறிகிறதே அல்லாமல் ஒருங்கே அறிவதில்லை, எனவே இக்கொள்கையும் பொருத்தமற்றதே.

ஆன்மா அறிவே வடிவாய் நிற்பது என்று கொண்டால் உறங்கும் காலத்தில் உயிர் இருந்தும் கருவி கரணங்கள் தொழிற்படாதது ஏன்? என்ற கேள்வி எழுகிறது. இந்தக் கேள்விக்குத் தக்க விடை இன்மையால் இதுவும் பொருந்தாது.

உயிர் தானே அறியும். அதற்கு ஒருவர் அறிவிக்க வேண்டியதில்லை என்னும் கருத்தும் பிழையானது. பொறிகளின் துணையும் உட்கரணங்களின் துணையுமில்லாமல் உயிருக்கு அறிவு நிகழ்வதில்லை என்பதிலிருந்து இவர் கருத்தும் தவறு என்பது தெளிவாகின்றது.

மற்ருெரு சாரார் உயிர் அறிவற்றது அதற்கு மனம் முதலிய கருவிகள் அறிவை விளைவிக்கும் என்பர். மனம் முதலிய கருவிகள் சடம். சடம் ஒரு காலத்தும் அறிவுடைப் பொருள் ஆவதில்லை. அறிவற்ற ஒரு பொரு

ளுக்கு மனம் முதலிய அறிவற்ற பொருள்கள் அறிவினை உண்டாக்கும் என்று கூறுதல் முற்றிலும் பொருந்தாது.

சைவசித்தாந்தத்தின் கொள்கைப்படி உயிர் உணர்த்த உணர்வது. அதாவது அறிவித்தால் அறிவது. சத்தையும் அசத்தையும் அறியும் ஆற்றலுடைய சதசத்து. அது சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது. இக்கருத்துக்கள் யாவும் இதுவரை கூறப்பட்ட பாடல்களில் தெளிவுற விளக்கப்பட்டன.

**60 எண்ண ஒன்று! இலாது அதீதம் எய்திய துரியத்து ஒன்று**
**நண்ணிடும் சுழுத்தி தன்னில் நயந்துளது ஒன்று பின்னும்**
**அண்ணிடும் கனவு தன்னில் ஆறேழாம் சாக்கிரத்தில்**
**கண் உறும் அஞ்சு ஆறுய கருவிகள் காணும் தானே.**

துரியாதீதம் துரியம் சுழுத்தி கனவு நனவு என்ற வரிசையிலே உயிர் பொருந்தி வரும் காலத்து அதனோடு இணைந்து செயற்படுகிற கருவி களின் எண்ணிக்கை இப்பாடலில் கூறப்படுகிறது. துரியாதீத நிலையில் ஆன்மா ஆணவ மலத்தால் பற்றப்பட்டு எண்ணுவதற்கு ஒரு கருவியும் இன்றி நின்றிடும். அதனை விட்டு ஆன்மா துரியத்தை அடையும் போது அங்கு பிராண வாயு ஒன்று மட்டும் வந்து பொருந்தும். ஆக அந்நிலையில் உள்ளன இரண்டு பொருள்களாம். துரியத்தை விட்டு நீங்கி ஆன்மா சுழுத்தியை அடையும் போது அவை இரண்டோடு கூடச் சித்தமும் வந்து பொருந்தும். இந்நிலையில் உள்ளன மூன்று பொருள்களாம். சுழுத்தி நிலையை விட்டுக் கனவு நிலைக்கு வரும்போது முற்கூறப்பட்ட மூன்றோடு இருபத்து இரண்டு கருவிகள் வந்து பொருந்தும். சப்த பரிச ரூப ரச கந்தம் என்ற ஐந்தும், வசனம் தானம் கமனம் விசர்க்கம் ஆனந்தம் என்ற ஐந்தும் அந்தக் கரணங்களுள் புத்தி, அகங்காரம், மனம் ஆகிய மூன்றும் (இவை மொத்தம் பதின்மூன்று ஆகின்றன. இவை பாடலில் ஆறேழாம் என்று குறிக்கப்பட்டன. ஆறும் ஏழும்' ஆகப் பதின்மூன்று என்று பொருள் கொள்ள வேண்டும்.) வாயுக்கள் பத்தில் பிராண வாயு தவிர்ந்த ஒன்பதும் இங்கேயே பொருந்துகின்றன. ஆக இவ்இடத்துப் பொருந்தும் கருவிகள் பதின்மூன்றும் ஒன்பதும் கூட்டி இருபத்திரண்டு. இவையும் ஏற்கனவே கூறப்பட்ட மூன்றும் சேர்ந்து கனவு நிலையில் இருபத்து ஐந்து கருவிகள் உள்ளன. நனவு நிலையில் ஞானேந்திரியங்கள் ஐந்தும் அவற்றின் வழி வருவதான கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகப் பத்தும், இதற்கு முன் கூறப்பட்ட இருபத்து ஐந்துடன் கூடி மொத்தம் முப்பத்து ஐந்து கருவிகள் பொருந்தும்.

இந்தப் பாடலில் ஆன்மா காரிய அவத்தை அடையும் காலத்து ஒவ்வொரு நிலையிலும் அதனோடு பொருந்தி வருகிற கருவிகளை எண்ணிக்கை வகையால் விளக்கினர். இவை நிகழ்வதற்கு உரிய இடம்:

துரியாதீதம் எனப்படும் உயிர்ப்படங்கல் மூலதாரத்திலும், துரியம் எனப்படும் பேர்உறக்கம் நாபியிலும், சுழுத்தி எனப்படும் உறக்கம் இதயத்திலும், சொப்பனம் எனப்படும் கனவு கண்டத்திலும், சாக்கிரம்எனப்படும் நனவு நுதலிலும் என்று கூறுவர்.

சிவஞான போதத்தில் இங்குக் கூறப்பட்ட முறைமையிலேயே, நான்காம் நூற்பாவில் மூன்றும் அதிகரணத்தில் வருகின்ற எடுத்துக் காட்டு வெண்பாவில்,

''ஒன்று அணையா மூலத்து உயிர் அணையும் நாபியினில்
சென்றணையும் சித்தம் இதயத்து—மன்றஏய்
ஐயைந்தாம் நல்நுதலில் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டு அகன்று வேறு''

என்று மெய்கண்ட தேவநாயனாரால் அருளிச் செய்யப்பட்டது. இப்பாடலுக்குப்பேருரை வரைந்த மாதவச்சிவஞான முனிவர் ஐந்தவத்தை பற்றிய விரிவான விளக்கத்தைச் சிவஞான மாபாடியத்தில் வழங்கியுள்ளார்.

ஆறேழாம் என்று வருகின்ற பாடல் பகுதிக்கு ஆறும் ஏழும் கூடிப் பதின்மூன்றும் என்றும் ஐஞ்சாருய என்பது ஐந்தின் வழி வந்த என்றும் பொருள் கொள்ளுவர். இந்நூலின் அறுபத்து மூன்றுவது பாடலின் பொருளையும் இப்பாடலுடன் பொருத்திப் பார்ப்பது நலம் தரும். இது கீழால் அவத்தை எனப்படும்.

**61 இவ்வகை அவத்தை தன்னில் எய்திடும் கரணம் எல்லாம்**
**மெய்வகை இடத்தில் உற்று மேவுமா கண்டு மிக்க**
**பொய்வகைப் பவம் அகற்றப் புரிந்திடில் அருளால் ஆங்கே**
**ஐவகை அவத்தை உய்க்கும் அறிவினுல் அறிந்து கொள்ளே.**

இந்த முறைமையிலே முந்திய பாடலில் கூறப்பட்ட அவத்தைகள் ஐந்திலும் கருவிகள் கூடியும் குறைந்தும், பொருந்தியும் நீங்கியும் உடம்பின் வெவ்வேறு இடங்களிலே இருந்து அவத்தை வேறுபாடுகளை அடையும் என்பதை அறிக. பொய்யாகிய பிறப்பு இறப்புகளை விட்டு ஆன்மாவை நீக்குவதற்காக இறைவன் தன் பேரருளால் ஐந்து வகை அவத்தைகளையும் உயிருக்கு ஊட்டுவான் என்பதனை ஆசிரியர் உணர்த்த உணர்ந்து கொள்ளுக.

முந்திய பாடலில் கீழால் அவத்தை பற்றி அறிவித்த ஆசிரியர் இந்தப் பாடலில் மத்தியால் அவத்தையும் சுத்தாவத்தையும் பற்றிக் கூறுகிறார். காரண அவத்தைகள் மூன்று காரிய அவத்தைகள் ஐந்து. இவற்றை உறழப் பதினைந்து அவத்தைகள் உள என்று ஆகம நூல்கள் விளக்குகின்றன. மேல் நோக்கி ஏறுவதும் கீழ்நோக்கி இறங்குவதும் இடை நிலையில் நிற்பதும் கருவிகள் கூடி நீங்குவதும் என்பதாக

இறைவன் திருவருளால் உயிர் பல நிலைப்படும். அவற்றின் விரிவெல்லாம் தக்க ஆசிரியர் வழிக் கேட்டு உணர்ந்து கொள்ளுவதே மலைவு இன்றி அறியும் நெறி ஆகும்.

இவ்வகை அவத்தை என்று பாடலில் குறிப்பிடப்படுவது காரிய சகலத்தையும் காரிய சுத்தத்தையும் என்பர். கீழ்நோக்கிச் சென்று ஒடுங்குவது பிறவிக்கு வித்தாகும். மேல் நோக்கி ஏறும் முறைமை வினைப் பயன்களை நுகர்வதற்குக் காரணமாதலால் பிறவியை அறுப்பதற்கு அது காரணமாகும்.

இந்தப் பாடல் மத்தியால் அவத்தையும் சகலத்தில் சுத்தாவத்தையும் உணர்த்திற்று என்பர் பெரியோர்.

**62 நீக்கம்இல் அதீதமாசு நிறைந்த கேவலமாம் நீர்மை**
**சாக்கிரம் கலாதி சேர்ந்த சகலமாம் தன்மையாகும்**
**நீக்கமில் இரண்டும் கூடாது ஒழிய ஓர் நிலையில் நீடும்**
**சாக்கிர அதீதம் சுத்தத் தகைமையது ஆகும்!தானே**

மாயையினால் ஆகிய கருவிகள் எல்லாம் உயிரை விட்டு நீங்க, நீங்காத ஆணவ மலத்தாலே மறைக்கப்பட்டு மூலாதாரத்திலே பொருந்தியிருக்கும் அதீதம் காரண கேவல அவத்தையின் முறைமை ஆகும். கலை முதலிய தத்துவங்களுடனே கலந்து உயிர் பொருள்களில் படிந்து பிரிவது காரிய சாக்கிர அவத்தையின் முறைமை ஆகும். இவ்விரண்டு தன்மையும் இன்றி கேவலம் சகலம் இரண்டிலும் கூடாமல் அருளாகிய ஒன்றுடனே மட்டும் கூடி இரண்டற்ற நிலையிலே உயிர் நிற்பது சுத்தாவத்தையின் சாக்கிர அதீதம் என்பர்.

நீக்கமில் அதீதம் என்பது அறுபதாம் பாடலில் கூறப்பட்ட துரியாதீத அவத்தை. மாசு நிறைந்த கேவலம் என்பது மேலே முப்பத்து மூன்றாவது பாடலில் கூறப்பட்ட மலமன்றி ஒன்றுமில்லை என்னும் கேவல நிலை. இப்பாடலில் இரண்டாம் அடியில் கூறப்பட்ட சாக்கிரம் அதற்கு முந்திய பாடலில் கூறப்பட்ட சாக்கிர நிலை. கலாதி சேர்ந்த சகலம் என்று இங்குக் குறிக்கப்பெறுவது மேலே நாற்பத்து எட்டாவது பாடலில் ''இனைய பல பிறவிகளில் இறந்து பிறந்து அருளால் இருவினைகள் புரிந்து அருந்தும் இது சகலம்'' என்ற நிலை. சாக்கிர அதீதம் என்று பாடலில் இறுதி அடியில் கூறப்பட்டது இனிமேல் வரும் எண்பதாவது பாடலில் விளக்கப்படுகிறது.

**63 மருவியபொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தில் ஒன்றும்**
**கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்தும்கூடி**
**ஒருபுலன் நுகரும் இந்த ஒழுங்கு ஒழிந்து உயிரும் ஒன்றைத்**
**தெரிவுறு அவன் ஒழிந்து அத்திரள்களும் செயல் இலாவே**

உயிர்கள் பொருள்களை அறியும் காலத்து ஐம்பொறிகளுள் ஒன்றும் ஐம்பெரும் பூதங்களுள் ஒன்றும் மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும் தன்னை விட்டு நீக்கமின்றி நிற்கும் கலை முதலிய ஐந்தும் ஆகப் பதினொன்றும் கூடியே அறிந்தும் நுகர்ந்தும் வரும். இவ்வொழுங்கிலிருந்து நீங்கி உயிரும் பொருளை அடைவதில்லை. உயிராகிய அவனை விட்டு நீங்கிக் கருவித் திரள்களும் தொழிற்படா.

''ஐவகையால் உறுபயன்கள் நுகர வரும் காலம்'' என்று முன்னர் நாற்பத்தொன்றும் பாடலில் குறிக்கப்பட்ட கலை முதலியன ஐந்தும் பிற கருவிகளைப் போல ஆன்மாவோடு பொருந்தியும் நீங்கியும் வருவனவல்ல. ஆதலால் அவை ஐந்தும் ''நீங்காக் கலாதிகள்'' எனப்பட்டன.

மேலே கூறப்பட்ட பதினொன்றினையும் பதினெட்டாகக் கொண்டு சில உரையாசிரியர்கள் பொருள் காண்பர். அவர்கள் கலாதிகள் என்ற சொல் கலை முதலிய வித்தியா தத்துவங்கள் ஏழினையும் குறிப்பதாகக் கொண்டும், அதன் பின் வரும் ஐந்தும் என்ற சொல் சுத்த தத்துவங்கள் ஐந்தினைக் குறிப்பதாகக் கொண்டும் ஆகப் பதினெட்டும் கூடி உயிர் ஒரு பொருளை நுகரும் என்று கணக்கிடுவர்.

மாதவச்சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தில் மனம் பற்றிய பேருரையிலும், நான்காம் நூற்பாவின் மூன்றும் அதிகரணத்தில் ஐந்தவத்தை பற்றி வரைந்துள்ள பேருரையிலும் சிவப்பிரகாசத்தின் இந்தப் பாடலை மேற்கோள் காட்டி விளக்கியுள்ளமை இங்கு நினையத்தக்கது.

சிதம்பரநாத முனிவர் ஆன்மாவோடு பொருந்துவன கருவிகள் பதினொன்று என்றே கொண்டு கருவிகள் பதினெட்டு எனக்கொள்ளும் ஆசிரியர்களின் உரையை மறுத்தார்,

ஒரு புலனின் நுகர்வுக்கு இந்த ஒழுங்கே துணையாகும் என்றும் இந்த ஒழுங்கில் அல்லாமல் உயிர் ஒன்றை அறியாது என்றும், ஆன்மாவை விடுத்துத் தத்துவங்கள் செயற்படா என்பதும் இப்பாடலால் வலியுறுத்தப்பட்டது.

**64 தனக்கு என அறிவு இலாதான் தான்இவை அறிந்து சாரான்**
**தனக்கு அறிவுஇலாத வாயில் தான்அறியாது சார:**
**தனக்கு என அறிவுஇலாதான் தத்துவ வன்ன ரூபன்**
**தனக்கு என அறிவாஞல் இச்சகலமும் நுகரும் தானே.**

உயிர் தனக்கென முதன்மையற்ற சிற்றறிவுடைய பொருள். ஆகையால் அது தானாக இத்தத்துவங்களை அறிந்து சார்வதில்லை. அறிவுக்கு வாயிலாக இருக்கின்ற பொறிகளோ எக்காலத்தும் அறிவற்ற சடப் பொருள்கள். எனவே அவை ஆன்மாவை அறிந்து கூடமாட்டா. தனக்

கென அறிவில்லாதவன் எனப்படும் உயிர் தன்னையடுத்த ஐந்து நிறங்களையும் தன் வடிவே போல் காட்டும் இயல்புடைய படிகம் போன்றவன். தனக்கு ஒருவர் அறிவிக்க வேண்டாமல் எல்லாவற்றையும் தானே ஒருங்குணர வல்லவனாகிய சிவபெருமானால் உயிர் யாவற்றையும் சார்ந்தும் நுகர்ந்தும் வரும்.

தனக்கென அறிவிலாதான், தத்துவ வன்னரூபன் என்னும் இரண்டு சொல் தொடர்களும் உயிரையும், தனக்கென அறிவில்லாத வாயில் என்பது தளையையும் இறுதி அடியில் தனக்கென அறிவான் என்றது இறைவனையும் உணர்த்துகின்றன.

தனக்கென முதன்மையும் உரிமையும் அற்ற உயிர் தானாக இத்தத்துவங்களை கூடி அறியாது. மேலும் அது சார்ந்ததன் வண்ணமாய்ப் படிகம் போல விளங்குமாகையால் அதற்குத் தன்னியல்பாய் நிற்கும் உரிமை இல்லை. சடமாகிய பாசக் கருவிகள் அறிவற்றவை. எனவே உயிரைச் சார அறியாதவை. முப்பொருள்களுள் உயிரும் தளையும் இவ்வாறு விலக்கப்பட்டமை பால் ஒழிபு அளவையினால் இறைவனே இவ்விரண்டனையும் கூட்டுவான் என்பதையும், இக்கூட்டத்தால் அவனுக்கு ஒரு பயனும் இல்லையாதலால் சிற்றறிவுடைய உயிர் இக்கூட்டத்தின் பயனால் யாவற்றையும் நுகர்ந்து வரும் என்பதும் விளக்கப்பட்டன.

பாடலில் இரண்டாவது வரியில் அறியாசார என்பதைச் சார அறியா என்று மாற்றி வைத்துப் பொருள் உரைக்க. இதற்கு ஒரு பாட வேறுபாடு அறியா சாரா என்பது. இப்பாடத்துக்கு அறியா அதனால் சாரா என்று பொருள் காண்க.

பாடலில் நான்காவது வரியில் 'தனக்கென அறிவானால்' என்ற பாடத்துக்கு மாற்றாக தனக்கென அறியானால் என்று மற்றொரு பாடம் உண்டு. முதல் பாடத்திற்கு தனக்கு ஒருவர் அறிவிக்காமல் தானே அறிவானாகிய சிவபெருமான் என்று பொருள் கொள்ளுக. இரண்டாவது பாடத்திற்கு, முற்றறிவுடைய இறைவன் தனக்கென அறிய வேண்டுவது ஒன்றும் இல்லாத பதிப்பொருள் என்று பொருள் கொள்க.

**65 கண்டுஅறி புலன்கள் காணும் கருத்தினால் ஒருத்தன்ஞானம்**
**கொண்டுஉளம் அறியும் என்னில் கொள்பவன் முதலி ஆகும்**
**மண்டிய உணர்வு உயிர்க்கா மன்னி நின்று அறியும் என்னில்**
**உண்டிட வேண்டு வானுக்கு ஒருவன் வேறு உண்டல் ஆமே.**

கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியும் புலன்களைக் கொண்டு உயிர் பொருள்களை அறிந்து அனுபவித்து வருகின்ற முறைமை போல, ஒப்பற்ற சிவபெருமானுடைய அறிவைக் கொண்டு உயிர் அறியும் என்று கூறினால் அறிந்து கொள்ளுகிற ஆன்மா முதன்மை

உடையது என்று ஆகும். அதாவது பெருமானுடைய பேரறிவு கருவியாக இருக்க உயிர் கருவியை ஆள்பவனுகக் கொள்ள நேரும். அவ்வாறு அன்றிச் சிவனுடைய பேரறிவு உயிருக்காக அறிந்து வருகிறதே தவிர உயிர்க்கெனச் சிற்றறிவு தானும் இல்லை என்று கொண்டால் பசித்திருப்பவன் ஒருவனுடைய பசியை ஆற்றுவதற்காக மற்றொருவன் உண்டான் என்பது போல முடியும்.

ஐம்புலன்களும் கருவிகளாக நிற்க அவற்றைப் பயன்படுத்தி உயிர் அறிந்தும் துய்த்தும் வருகிறது. இந்த நிலையில் உயிர்க்கே முதன்மை உள்ளது செயல்படும் தன்மையும்} உயிருக்கேயன்றிக் கருவிகளுக்கு இல்லை. இதுபோலவே ஒப்பற்றவனுகிய சிவபெருமானுடைய பேரறிவைக் கருவியாகக் கொண்டு உயிர் அறிகிறது என்ருல் இங்கேயும் முதன்மை உயிர்க்கே உரியதாகிறது. எனவே இது பொருந்தாது. இந்த நிலையில் சிற்றறிவுடைய உயிருக்காகப் பேரறிவாளனுகிய சிவபெருமான் அறிவிக்க அந்த அருட்கொடையினுலே ஆன்மா அறிகிறது என்று கொள்ளுவதே பொருந்தும். இவ்வாறு கொள்ளும் போது வழங்கும் முதன்மை சிவபெருமானுக்கும் ஏற்கும் நிலைமை உயிர்க்கும் உள்ளதாகும்.

திருவாசகம் சிவபுராணத்தில், ''அவன் அருளாலே அவன்தாள் வணங்கி'' என்றும் அப்பர் பெருமான் தேவாரத்தில், ''காண்பார் யார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே'' என்றும் வரும் திருவாக்குகள் இதனை வலியுறுத்தும்.

''உயிருக்கு முதன்மை உண்டு என்று கொள்ள வேண்டியதில்லை, ஏனெனில் உயிர்க்கெனச் சிற்றறிவு தானும் இல்லை. பின் எப்படி உயிர் அறிந்தும் அனுபவித்தும் வருகிறது எனக் கேட்பின் பேரறிவே வடிவாகிய சிவபெருமான் உயிரின் பொருட்டு அறிகிருன் என்பதே பொருந்தும்'' என்று சிலர் வாதிடுவர். இந்தக் கருத்தும் பொருத்தமில்லை என்று மறுக்கிருர் ஆசிரியர், இதனை மறுப்பதற்கு ஓர் உவமையைப் பயன்படுத்துகிருர். பசித்தவன் ஒருவன் இருக்க அவன் பசியை ஆற்றும் பொருட்டு மற்றொருவன் உண்டான் என்பது போன்றது இது. அறியாமையிலிருந்து படிமுறையிலே அறிந்தும் துய்த்தும் வீடுபேறு அடைய வேண்டிய உயிர் தானே அழுந்தி அறியாது எனில் அதனுல் வரும் பயனைப் பெறுவதில்லை.

இவ்வாறு இரண்டு கருத்துக்களையும் மறுத்ததனுல் சிற்றறிவுடைய உயிர், முற்றறிவுடைய சிவன் அறிவிக்க அறியுமேயன்றி இறைவனின் அறிவைத் தனக்கென உயிர் பயன்படுத்தும் என்பதும், அறிவற்ற உயிருக்காக இறைவனே அறிவான் என்பதும் மறுக்கப்பட்டன.

**66 இருள்நனி இரவி தான்வந்து இரித்தலும் இரவில் எண்ணும்**
**பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல**
**மருள்நிலை எங்கும் நீங்க மகிழ்ந்து உயிர் தன்னுள் மன்னும்**
**அருளையும் ஒழியஞாலத்து அறிந்தவாறு அறியும் அன்றே.**

இரவில் பொருள்களைக் காண இயலாத மாந்தர் செயலற்று இருப்பர். விடியற்காலத்தில் கதிரவன் தோன்றிய வுடனே இருள் நீங்கிப்போம். அந்நிலையில் உலகத்துப் பொருள்கள் மாந்தருக்குக் காட்சிப் படும். அவர்கள் தத்தம் தொழில்களில் ஈடுபடுவர். அப்போது பொருள் களைப் பற்றியும் தங்களது செயல்களைப் பற்றியும் நினைப்பதல்லது, மக்கள் கதிரவனைப் பற்றி, அவன் செய்த உதவியைப் பற்றி நினைப்பதில்லை. கதிரவனால் அன்றோ இருள் நீங்கிற்று அதனால் அன்றோ பொருள்கள் காட்சிக்குப் புலப்பட்டன என்று எண்ணாமல் தாமே யாவற்றையும் செய்வ தாக மகிழ்வர். அவ்வாறே ஆணவ மலத்தின் மறைப்பை நீக்குவதற்காக இறைவன் தனது அருளால் உயிர்கள் அறிந்தும் துய்த்தும் வரத் திருவருள் பாலிக்கிறான். ஆனால் உயிர்களோ அவன் திருவருளை மறந்து நான் செய்தேன் பிறர் செய்தார் என்று கருதித் தன் முனைப்போடு செயலாற்றுவர்.

இவ்உவமையில் ஞாயிற்றின் வரவால் இருள் நீங்குவதும், இருள் நீக்கத்தால் பொருள்களின் காட்சியும், அக்காட்சியால் மாந்தர் அவற் றைக் கண்டு பொருந்துவதும் முறையே அருளின் துணையால் அறியாமை நீக்கமும், அதனால் உலகத்துப் பொருள்கள் மீது கொண்ட விருப்பமும் அதனால் திருவருளை மறந்திருப்பதும் பொருத்திக் காட்டப்பட்டன.

கதிரவன் போல இறைவனும் தானாக உயிர்கட்கு உதவும் தன்மை யும் தான் மாறுதலடையாது நின்றே உயிர்களையும் உலகத்தையும் செயல் படுத்தும் ஆற்றலும் குறிப்பாக உணர்த்தப்பட்டன.

**67 அறிந்திடும் மனாதி வாயில் ஆனவை அவன் தனாலே**
**அறிந்திடும் என்றும் ஒன்றும் அறிந்திடா அவைபோல் யாவும்**
**அறிந்திடும் அறியும் தன்மை அறிந்திடா கன்மத்தொன்மை**
**அறிந்து அவை நுகருமாறும் அருளுவன் அமலன் தானே.**

மனம் முதலிய அந்தக் கரணங்களும் பொறிகளாகிய மெய் வாய், கண், மூக்கு, செவி ஆகியவையும் ஆன்மாவோடு பொருந்துவதாலே பொருள்களை அறிகின்றன. ஆனால் அவை ஆன்மாவால்தான் அறிகின் றோம் என்பதனை ஒருபோதும் அறிவதில்லை. அது போலவே தம்மையும் அவை அறிவதில்லை. இது போன்றே கட்டு நிலையிலும் முத்தி நிலையிலும் இறைவனின் துணை கொண்டே ஆன்மாக்கள் அறிந்து வருகின்றன. ஆயினும் ஆன்மாக்கள் இறைவனால் அறிகிறோம் என்பதை அறிவதில்லை. அவ்வாறு அறியும் முதன்மை தமக்கு இல்லை என்பதையும் அவை அறிவ தில்லை. இறைவனே அவற்றின் பழமையான வினைகளுக்கு ஈடாக அவற் றுக்கு அறிவும் நுகர்வும் பொருந்துமாறு கூட்டுகிறான். அந்த இறைவன் அமலன்.

மேல் ஐம்பத்து மூன்றுவது பாடலில் ''மனுதிகள் தம்மில் மன்னித் தருபயன் நுகர்தலானும்'' என்பதை இங்கு நினைவு கூர்க. மனம் முதலி யனவும் அறிவுப் பொறிகள் ஐந்தும் அறிவுடையன போலத் தோன்றி னும்அவற்றுக்கென அறிவில்லை. ஆன்மாவே அவற்றைக் கருவிகளாகக் கொண்டு அறிகின்றது. மெய் வாய் கண் மூக்கு செவி என்பன அளந்தும் அறிந்தும் அறியாதன என்று மெய்கண்ட தேவநாயனுர் இதனைக் குறிப் பிடுகின்றார். ஆன்மாவை அறிய மாட்டாததோடு அவை தம்மையும் அறிய மாட்டா.

இதுபோலவே இறைவனும் உயிர்க்குயிராய் நின்று ஆன்மாக்களின் தொன்மை வினைகளை அறிந்து அறிவூட்டி வருகிருன். வினைக்கு ஈடான பயன்களையும் உயிர்கள் நுகருமாறு ஊட்டுகிருன். ஆயினும் அவ்வான்மாக் கள் இறைவனை அறிவதில்லை. இக்கருத்து சிவஞான சித்தியார் சுபக்கத்துள்,

''பொறிபுலன் கரணம் எல்லாம் புருடனுல் அறிந்து ஆன்மாவை
அறிதரா அவையே போல ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன் தனுலே அறிந்திடும் சிவனைக் காணு
அறிதரும் சிவனே எல்லாம் அறிந்தும் அறிவித்தும் நிற்பன்''

என்று நன்கு விளக்கப்படுகிறது.

இறைவனுடைய திருவருள் ஆற்றல் ஆன்மாக்களுக்குத் துணையாக அறிந்தும் அறிவித்தும் வினைப் பயன்களை நுகர்வித்தும் வருகின்றது என்ருலும் இறைவன் இவற்ருல் தொடக்குறுவன் என்று கொள்ளலாமோ எனக் கேட்பின், எண்குணத்தான் ஆகிய இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் ஆதலால் அவன் தொடக்குறுவதில்லை என்பதை உணர்த்துவதற்காக அவனை அமலன் என்ற சொல்லால் குறித்தார். அமலன்—மலத்தால் பற்றப்படாதவன்.

**68 காட்டிடும் கரணம் ஒன்றும் இல்லையேல் காண ஒணுதாம்**
**நாட்டிய இவற்ருல் ஞானம் நணுகவும் ஒண்ணு முன்னம்**
**ஈட்டிய தவத்தினுலே இறைஅருள் உருவாய் வந்து**
**கூட்டிடும் இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகும் ஆறே.**

ஆன்மாவுக்கு உலகத்துப் பொருள்களை அறியக் காட்டுவன கருவி கரணங்களே. அவை இல்லையெனில் உலகத்துப் பொருள்களைக் கூட உயிர்களால் அறிய முடியாது. இக்கருவி கரணங்கள் கூடிய போதும் மெய்ப் பொருளாகிய இறைவனை அணுகவும் ஆன்மாவால் இயலாது. முற்பிறவிகளிலே ஈட்டிய தவத்தினுலே இறைவனே அருள் உருவாய் வந்து இக்கருவி கரணங்களை நீக்கி இவ்வுயிர்கள் தன் திருவடிப்பேற்றை அணுகுமாறு அருள் பாலிப்பான்.

கருவி கரணங்கள் இன்றி உயிர் தனித்துக் கிடந்த போது அதற்கு அறிவு நிலை ஏற்படுவதில்லை. இது கேவல நிலை. இறைவன் உயிர் களுக்குக் கருவி கரணங்களைத் தந்த போது அவற்றின் உதவியால் உயிர் உலகத்துப் பொருள்களை அறியுமே தவிர மெய்ப்பொருளாகிய இறைவனை அறிய இயலா. இது சகல நிலை.

இந்த இரு நிலைகளிலும் உயிர்களால் இறைவனை அறிய முடியாது எனின் அவனை அறிவது தான் எப்படி? முன்னைப் பிறவிகளிலே செய்த தவத்தின் பயன் வந்து கூடும் போது இறைவனே அருள்மேனி தாங்கிக் குரு வடிவாய் எழுந்தருளி வந்து உயிருக்குத் தன் திருவடியைக் குறுகும் பேற்றை அருளுவான்.

முன்னம் ஈட்டிய தவம் என்பது முற்பிறவிகளிலே உண்மைச் சரியை கிரியா யோகங்களின் மூலமாக எய்திய தவம் என்ற பொருளைத் தந்தது. பெரிய புராணம் கண்ணப்ப நாயனார் வரலாற்றில்,

''முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்ப மான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம்பொங்கி...'' (102)

என்று கூறப்பட்டதும் இதுவே.

இறைவன் திருவடிவாக எழுந்தருளி வந்து உணர்த்துவதை மூன்று வகையாகக் கூறுவர். தன்மை, முன்னிலை. படர்க்கை என்று முறையே ஒரு மலம் இரு மலம் மும்மலம் உடையார்க்கு அருள் பாலிப்பான் என்பர். பாச ஞானம் பசு ஞானம் என்ற இரண்டும் இறைவனை அறிவதற்குத் துணையாக மாட்டா. இறைவனின் திருவருளே அவன் திருவடியை அணுகுவதற்கு உயிர்களுக்கு உதவும் என்பதை இப்பாடலில் ஆசிரியர் விளக்கினார்.

**69 பல்நிறம் கவரும் தொன்மைப் படிகநீடு ஒளியும் பன்மை**
**மன் இலங்கு இயல்பும் தந்த வளர்ஒளி போல வையம்**
**தன்னகம் பயிலும் நற்சிற் சடங்களின் தன்மை தாவா**
**நன்னலம் பெற நிறைந்த ஞானமே ஞானம் என்பர்.**

தன்னை அடுத்து இருக்கின்ற பொருள்களின் நிறங்களைக் கவர்ந்து கொள்ளும் இயல்புடையது படிகம். அதே நேரத்தில் தன் நிறத்தையும் படிகம் காட்டவல்லது. இந்த இரண்டு இயல்புகளும் படிகத்திற்குக் கதிரவன் ஒளியில் மூழ்கி இருக்கும் போதே உளவாகின்றன. அது போலவே இந்த வையகத்தில் பயின்று வருகின்ற நல்ல சித்தும், அசித் தும் ஆகிய இரண்டின் இயல்பையும் பற்றாத உயர்ந்த நலத்தை உயிர்கள் பெறுமாறு வழங்கும் திருவருள் ஞானமே ஞானமாகும் என்பர் பெரியோர்.

இங்கே கூறப்பட்டுள்ள உவமையைச் சற்று ஆழமாக நோக்கிப் பொருள் கொள்ளுதல் வேண்டும். படிகம் தனக்கென ஒரு நிறமற்ற

தேனும் தனக்கென ஓர் ஒளி உடையது. அப்படிகத்தின் பக்கத்தில் சிவந்த பூக்களை வைத்தால் அப்பூக்களின் நிறத்தைக் கவர்ந்து படிகமும் சிவந்திருப்பது போல் காட்டும். ஆனால் இந்த இரண்டும் நிகழ்வதற்குக் கதிரவனின் பேரொளி துணையாக நிற்க வேண்டும். அதாவது இரவில் படிகம் பக்கத்தில் உள்ள பொருள்களின் நிறத்தைக் கவர்வதில்லை. உயிர் தன்னையடுத்த பாசத்தின் இயல்பையும் காட்டும் தன்னியல்பையும் காட்டும். ஆனால் இவ்வாறு கூறப்பட்ட இரண்டு இயல்புகளும் சிவஞானம் என்னும் பேர் ஒளி இல்லையேல் உயிர்க்கு இல்லையாகும். இக்கருத்து திருவருட்பயனில்,

''தன்நிறமும் பல்நிறமும் தானும்கல் தன்மை தரும்
பொன்நிறம்போல் மன்நிறம்இப் பூ''

என்று கூறப்பட்டுள்ளது.

இப்பாடலில் பாசமாகிய சடத்தின் தன்மையைக் குறிப்பதன் மூலம் பாசஞானத்தின் இயல்பைக் குறித்தார். நல்ல சித்துத் தன்மை என்று பசுவினது ஞானத்தின் இயல்பினை எடுத்துரைத்தார். இவை இரண்டும் ஞானம் எனவே கூறப்படினும் இவற்றுக்குத் தன்னுரிமை இல்லாததால் உயிர்கட்கு நன்மை அளிக்க வல்ல சிவஞானமே ஞானம் என்று கூறித் திருவருள் ஞானத்தின் உயர்வை நிலை நிறுத்தினர். மற்ற இரண்டி லிருந்தும் சிவஞானத்தைப் பிரித்து அதன் உயர்வை உணர்த்துவதற்காக ''நன்னலம் பெற நிறைந்த ஞானமே ஞானம் என்பர்'' என்று கூறினர். ஆகவே இந்த ஏகாரத்தைப் பிரிநிலை ஏகாரமாகக்கொள்ள வேண்டும் என்று மாதவச் சிவஞான முனிவர் தனது சிவஞான மாபாடியத்தில் விரி வாக விளக்கியுள்ளார். நற்சித் சடங்களின் தன்மை என்பதை நல்லசித்து சடம் ஆகிய இரண்டின் தன்மை என்று பொருள் கொள்ள வேண்டும். நல் சில் சடங்கள் என்ற பாடம் பொருத்தமுடையது அன்று.

70 மாயைமா மாயை மாயா வரும் இரு வினையின் வாய்மை
ஆயஆர் உயிரில் மேவும் மருள்எனில் இருளாய் நிற்கும்
**மாயைமா மாயை மாயா வரும் இருவினையின் வாய்மை**
**ஆய]ஆர் உயிரில் மேவும் அருள் எனில் ஒளியாய் நிற்கும்.**

மாயையும் மாயையின் காரியங்களும் இருவினையின் பயன்களும் ஆன்மா எந்நிலையில் நின்றதோ அதற்கு ஏற்றபடி நிற்கும். ஆன்மா மலத்தால் கட்டப்பட்டுப் பசு எனப்பெயர் பெற்று நிற்கும் போது மாயை முதலியன அதனைக் கட்டுவதாகி மலமாகி நிற்கும். ஆன்மா கட்டுக்களை விட்டு நீங்கி அருளோடும் கூடிய போது முற்கூறப்பட்ட மாயை முதலி யனவும் பாசம் என்னும் பெயரை நீங்கி அருளேயாக நிற்கும்.

சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்துள் இரண்டாம் நூற்பா வுக்குப் பேருரை எழுதும் போது அதன் இரண்டாம் அதிகரணத்தில்

சிவப்பிரகசத்தின் இந்தப் பாடலை எடுத்துக் கூறி மிக விரிவாக விளக்க மும் தருகிருர். வேறு சில உரையாசிரியர்கள் சொற்களை வருவித்துப் பொருள் கண்டமையை மறுக்கிருர். பாட வேறுபாடு கொண்டு சிலர் கூறும் உரைகளையும் தவறு என்று சுட்டிக் காட்டுகிருர். அவற்றின் விளக்கத்தைச் சிவஞான மாபாடியத்தில் காணலாம்.

முனிவரின் கருத்து, சுருங்கச் சொல்லுவதானல், ''மாயை மாமாயை என்னும் செய்யுளுக்கு மாயை முதலியன மூன்றும் ஆன்மா நின்றபடி நிற்கும் என்பதே செம்பொருள் எனக் கொள்க''. இந்தச் செய்யுள் இதற்கு முந்தைய செய்யுளின் தொடர்ச்சி என்பதும் நன்னலம் பெற நிறைந்த ஞானமே ஞானம் என்ற சொற்ருெடரை வலியுறுத்துவதற் காக ஆசிரியர் இச்செய்யுளை அருளினர் என்பதும் சிவஞான முனிவரின் கருத்து.

உயிர் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது. பிறப்பு நிலையில் மாயை பசுகரணமாய் நின்று உயிரைக் கட்டுப்படுத்துகின்ற நிலையினை இருளாய் நிற்றல் என்ருர்.

அதன் பின்னர் இறைவன் திருவருளால் இருவினை ஒப்பும், மலபரி பாகமும், சத்திநி பாதமும் விளையும். வீட்டு நிலையில் மாயை சிவகரணம் ஆகி நின்று உயிருக்கு உதவும். இதனையே ஒளியாய் நிற்றல் என்ருர்.

மாயை மாமாயை என்பதற்கு மாயை மாயேயம் என்று வேறு பாடம் கொள்வாரும் உண்டு.

**71 தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி**
**ஆசிலா ஆன்ம லாபம் ஆகமூன்று ஆகும்மூன்றும்**
**பாசம் அதுஅகல ஞானம் பற்றல்தான் பணியை நீத்தல்**
**ஏசில் நேயத்து அழுந்தல் எனும்இவற்று அடங்கும் அன்றே,**

முந்தைய பாடல்களில் நன்னலம் பெற நிறைந்த ஞானமே ஞானம் என்பதை எடுத்து விளக்கிய ஆசிரியர் இந்தப் பாடலில் அந்த ஞானத்தின் பயன்களைக் கூறுகிருர். ஞானத்தின் பயன்கள் மூன்ருகும். அவை ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் என்பர். ஆன்ம தரிசனம் என்பது ஆன்மா பாசத்தை விட்டு உண்மை ஞானத்தைப் பற்று வது. ஆன்ம சுத்தி என்பது ஆன்மா தன் செயலை நீத்துத் தன் முனைப்பை அகற்றி இறைவன் திருவருள் வழியில் நிற்பது. ஆன்ம லாபம் என்பது ஆன்மா சிவபோகத்தில் அழுந்துவது.

சுத்தாவத்தை ஐந்து வகைப்படும் என்பர். அவை நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம். நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் என்பன. இவ்வைந்தனுள் முதல் இரண்டையும் பயனில ஆதலின் விட்டுவிட்டுப் பின் மூன்றையும் கூறுவது இப்பாடல்.

உண்மை அதிகாரத்தின் முதல் பாடலில் தாம் கூறப்புகும் பொருள் களை ஆசிரியர் வகுத்துரைக்கிருர். அவற்றுள் பொங்கு ஒளி ஞான வாய்மை என்பது இதற்கு முந்திய இரண்டு பாடல்களாலும் கூறப் பட்டது. அதனைத் தொடர்ந்து அதன் பயன் என்ற தலைப்பிலே வருவ தாகிய ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் மூன்றும் இப்பாட லில் சுட்டப்பட்டன. இதன் பின்வரும் பாடல்களில் இந்த மூன்றும் விளக்கப்படும். நேயம் என்பதற்குப் பதில் ஞேயம் என்ற ஒரு பாட வேறு பாடும் உண்டு. ஞேயம் என்பது காட்சிப் படுபொருள் என்று பொருள் தரும்.

**72 தன்அறிவு அதனுல்ஏதும் தனக்குஅறிவு இல்லையேனும்**
**தன்அறிவு வாகஎல்லாம் தனித்தனி பயன்அருந்தும்**
**தன்னறிவு அறியும் தன்மை தன்னுலேதனை அறிந்தால்**
**தன்னையும் தானே காணும் தான்அது ஆகிநின்றே.**

ஆன்மா சிற்றறிவுடையது ஆதலால் எதையும் தன் அறிவினுலே தானே அறிகின்ற ஆற்றல் அதற்கு இல்லை. ஆயினும் பொறி புலன்களின் வாயிலாக வரும் இன்பத் துன்பங்களை ஒவ்வொன்ருக நுகர்ந்து அவற்றை யெல்லாம் தானே அறிந்து அனுவிப்பதாக எண்ணி வரும். உண்மையில் தன் அறிவுக்கு அறிவிக்கும் சிவஞானப் பெரும் பொருள் ஒன்று உண்டு என்பதை உணர்ந்து தன் முனைப்பை விட்டுத் தானே அதுவாகி நின்று அறியத் தொடங்கினுல் தன்னைத்தான் அறியும் ஆற்றல் ஆன்மாவுக்கு விளைகிறது,

மாயையின் க்காரியங்களாகிய பொறி புலன்களோடு கூடி அல்லாமல் ஆன்மா பொருள்களை அறிந்து அனுபவிக்க இயலாது. அப்போதும் ஆன்மாவின் அறிவு சிற்றறிவு ஆதலால் சிவபெருமானின் பேரருள் அறிந்து அறிவித்தால் அன்றி ஆன்மா எதனையும் அறிவதில்லை. இவ் வுண்மை தெளியாத நிலையில் ஆன்மா தானே அறிந்தும் அனுபவித்தும் வருவதாகத் தவருகக் கருதிக்கொள்ளுகிறது. இத்தவருன கருத்தின் அடிப்படையில் தத்துவக் கூட்டங்கள் வேறு, தான் வேறு என்று அறி கின்ற அறிவு, அதாவது ஆன்மா தான் ஒரு தனிப் பொருள் என்றும் உடல் கருவி முதலிய பொருள்கள் தன்னின் வேருனவை என்றும் அறி கின்ற அறிவு அதற்கு இல்லை.

பின் எப்போது ஆன்மா தன்னை அறியும் அறிவைப் பெறும்? பக்குவ முதிர்வால் தனது கருவி கரணங்கள் சடப்பொருள் எனவும் அவை தன்னின் வேருவன என்றும் தனக்குஅறிவித்து வழிநடத்துவதுதிருவருளே என்றும் தெளிந்து தன்முனைப்பற்றுத் திருவருளிலே அடங்கி நிற்கும் போது தனது உண்மையான இயல்பைத் திருவருள் உணர்த்தஉணரும். சிவஞான சித்தியாரின் ஆசிரியர் அருள்நந்தி சிவம் இக்கருத்தை,

''அறிந்திடும் ஆன்மா ஒன்றை ஒன்றினல் அறிதலானும்
அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறிதலானும்
அறிந்திடும் தன்னேயும் தான்அறியாமை யானும்தானே
அறிந்திடும் அறிவன் அன்ரும் அறிவிக்க அறிவன் அன்றே''
(பாடல் 233)

என்ற பாடலில் எடுத்துரைக்கிருர்.

பட்டினத்துப் பிள்ளேயார் பதினேராம் திருமுறையில், தமது திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில்,

''ஞானநாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னேயும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலே அனேத்தையும் கண்டேன் என்னே
நின்னேக் காணு மாந்தர்
தன்னேயும் காணுத் தன்மை யோரே''

என்று எடுத்துரைப்பதும் இக்கருத்தினேயே. தெய்வத்திருவருள் கைவந்து கிடைத்தலின் இந்த அறிவு உயிருக்கு உளதாகிறது என்பது இப்பாடலால் உணர்த்தப்பட்டது.

இதனே ஆன்ம தரிசனம் என்பர்.

**73 தத்துவம் ஆன வற்றின் தன்மைகள் உணரும் காலே**
**உய்த்து உணர்ந்திட உதிப்பது ஒளிவளர் ஞானம் ஆகும்**
**அத்தன்மை அறியும் ஆறும் அகன்றிட அதுவாய் ஆன்மா**
**சுத்தமாம் சுத்த ஞானத்து ஒருமுதல் தோன்றும் அன்றே.**

ஆன்மா தத்துவங்களுடைய தன்மைகளேத் உணரத் தொடங்கும் போது ஒவ்வொன்றையும் உய்த்துணர்ந்து வரும். அத்தத்துவங்கள் தன்னின் வேருனவை என்றும் அவை சடம் என்றும் அறிகின்ற போது அங்கே உதிப்பது ஒளி மிகுந்த ஞானமாகும். இந்த ஞானமே திருவருள். அத்திருவருளோடு கூடி ஆன்மா தான் காண்கின்ற தன்மையையும் மறந்து தன் முனேப்பற்று நிற்கும் போது ஆன்ம சுத்தி நிகழ்கிறது. அவ்வாறு ஆருயிர்த் தெளிவு நிகழும் போது ஒளிவளர் ஞானம் என்று குறிக்கப்பட்ட திருவருளுக்கு முதலாகத் திகழ்கின்ற சிவம் வெளிப்பட்டுத்தோன்றும்

மேலே அறுபத்து நான்காம் பாடலில் தத்துவ வன்ன ரூபன் என்று ஆசிரியரால் குறிப்பிடப்பட்ட ஆன்மா ஆன்ம தரிசனம் நிகழும் போது தத்துவங்கள் வேறு தான் வேறு என்ற உண்மையை உணருகிறது. இவ்வுண்மையை உணரும் போது ஆன்மாவினிடத்திலே ஒளிவளர் ஞானம் உதிக்கிறது. அதுவே சிவத்தைப் பற்றிய மெய்யுணர்வு. அதனேயே திருவருள் என்று குறிக்கிரேம். இத்திருவருள் குணம் ஆதலால் அதனே உடைய குணி ஆகிய தனி முதல்வன் காட்சியளிக்கிருன். அந்தக் காட்சி

எப்போது நிகழும் என்னில் 'எல்லாம் அற என்னை இழந்த நலம்' என்று பெரியோர் கூறுகிற தன்முனைப்பற்ற போது நிகழும் என்பர். இது தற்போதம் இழத்தல் என்று குறிக்கப்படும்.

ஆன்மா அறிபவன் (ஞாதா). ஆன்மாவின் சிற்சத்தி (ஞானம்). சிவபரம்பொருளே அறியப்படுபொருள் (ஞேயம்). முதல் இரண்டு அடிகளில் அறிவு விளக்கமும் பின் இரண்டு அடிகளில் உயிர்க்குப் பேரின்ப விளக்கமும் எவ்வாறு விளையும் என்பது இப்பாடலில் விளக்கப்பட்டன.

இதனால் ஆன்ம சுத்தி உணர்த்தப்பட்டது.

**74 உறைதரும் உணர்வும் அன்றி அதன்முதல் உள்ளது என்று இங்கு**
**அறைவது என்என்னில் அண்ணல் அருள் எனும் அதுவே அன்றி**
**நிறைஒளி முதல்அது அன்றி நின்றிடா நிமலன் ஆகும்**
**இறையவன் முதல் அவன்தன் இலங்கு அருள் சத்திஆமே.**

''தத்துவங்களின் வேருக ஆன்மா தன்னை அறியும். அவ்வாறு அறிவிப்பது திருவருள் என்று கூறியது பொருந்தும். அதன் மேலும் அந்த ஞானத்துக்கும் முதலாக ஒரு பொருள் உண்டு என்று கொள்வானேன்'' என்று கேட்பின் அருள் என்னும் ஞானம் குணம். குணம் மட்டிலும்தனித்து நிற்காது. குணத்தையுடைய பொருள் ஒன்று உண்டு. அப்பொருளே சிவம். சிவபரம் பொருள் அனாதியே பாசங்களில் நீங்கிய நின்மலப் பொருள். எனவே இறைவன் முதல்வன். அவனுடைய விளக்கம் நிறைந்த அருள், சத்தியாகும்.

அண்ணல் அருள் என்று இப்பாடலில் இரண்டாவது வரியில் குறிப்பிடப்படும் சொற்களுக்கு அண்ணலினது அருள் என்று பொருள் கொள்ள வேண்டும். அண்ணல் ஆகிய சிவம் உடையான், அவனது உடைமை அருள். சிவனும் அருளும் தனித்து நிற்பதில்லை

கதிரவன் முதல். கதிரவனின் ஒளி அம்முதலின் உடைமை. கதிரவன் இல்லாமல் ஒளி தோன்றுதவாறு போல, ஒளியின் துணை கொண்டல்லது கதிரவன் தோற்றப்படாதது போல இறைவனும் அவனது சத்தியாகிய திருவருளும் பிரிப்பின்றி நின்று உயிர்களுக்குப் பெருங்கருணை பாலிக்கும் என்பதை இதன் மூலம் உணர்த்தினர்.

இக்கருத்து சிவஞான சித்தியார் சுபக்கத்தில்,

''அருளது சத்தி ஆகும் அரன் தனக்கு அருளை இன்றித்,
தெருள் சிவம் இல்லை அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை''

என்று கூறி விளக்கப்பட்டுள்ளமையை இங்கு நினைவு கூர்க.

**75 சுத்தமாம் சத்தி ஞானச் சுடர் ஆகும் சிவம் ஒழிந்து அச்**
**சத்திதான் இன்றும் முன்னைத் தகவு இலா மலங்கள் வாட்டி**
**அத்தனை அருளும் எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி**
**வைத்திடும் இரவி காட்டும் வளர்ஒளி போல் மகிழ்ந்தே.**

முந்திய பாடலில் 'நிறை ஒளி முதலது அன்றி நின்றிடா' என்று கூறப்பட்ட பகுதியை ஆசிரியர் இந்தப் பாடலில் விளக்கியருளுகிறுர். சிவம் ஆகிய கதிரவன் இல்லாமல் சுத்த ஞானமாகிய ஒளி வீசுவதில்லே. காலேப் பொழுதில் கதிரொளி தோன்றி உலகெங்கும் கவிந்திருந்த இருளே நீக்கிக் கதிரவனேக் காட்டுவது போலச் சத்தியாகிய பேரொளி உயிர்களேந் தோற்றமில் காலம் தொட்டே பற்றியிருந்த தகவற்ற ஆணவம் முதலிய மலங்களே வாட்டி நீக்கிச் சிவமாகிய சூரியனே மகிழ்ந்து உணர்த்தியருளும்.

சத்தி ஞானத்தின் பிழம்பாகும். சிவம் என்னும் முதல் இல்லேயேல் இந்தப் பேரொளியும் இல்லே. ஏனெனில் சத்தியும் சிவனும் தம்முட் பிரிவனவல்ல. இந்த நிலேயை அபின்னமாய் நிற்றல் என்பர். உயிர்களேப் பிணிப்புக்கு உட்படுத்துவதாலும் அறியாமையில் அழுத்துவதாலும் மலங்களேத் தகவு இலா மலங்கள் என்றுர்.

கதிரவன் புறத்து இருளேப் போக்குகின்றுன். பகல் போய் மாலே வந்ததும் உலகில் மீண்டும் இருள் கவிந்து கொள்ளுகிறது. இவ்வாறே நாள் தோறும் தொடர்ந்து நடந்து வருவதால் ''எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி வைத்திடும் இரவி'' எனக் குறிப்பிட்டார் ஆசிரியர். புறத்து இருளே நீக்கும் கதிரவனேப் போல் அல்லாமல் அகத்து இருளே நீக்கும் சிவஞானப் பேரொளி மலங்களாகிய இருளே மீண்டும் வந்து தாக்காதவாறு தீர்த்தலில் அதனே 'தகவு இலா மலங்கள் வாட்டி என்றுர். மீட்டு இங்கு வந்து வினேப்பிறவி சாராமே ஆட்கொள்ள வல்ல சத்தி ஆகையினுல் அகற்றி என்பதை விட வாட்டி என்பது பொருத்தமாகும்.

சத்தி அருள்வது அத்தனே. அத்தன்—தந்தை. எனவே சத்தியைத் தாய் என்று சொல்லாமலே உணர வைத்தார்.

**76 புகல்அரும் அசத்தர் தம்பால் பொருந்திய அலகையே போல்**
**அகிலமும் உணரும் ஈசன் அருள்உயிர் மேவ லாலே**
**சகலமும் நிகழவேண்டும் தலேவன் ஐந்தொழிலும் தானே**
**இகல்அற இயற்றல் வேண்டும் என்றது நன்றி இன்றே.**

பிசாசு பிடித்தவர்கள் தம் அறிவை இழந்து அந்தப் பிசாசின் குணமும் செயலும் கொண்டு திரிவதைப் பார்க்கிறேம். எல்லா வல்லமையும் உள்ள பேரறிவாளனுகிய சிவபெருமானுடைய அருள் உயிரிலே பொருந்தினுல், பேய்க்கு உள்ள தன்மை பிடியுண்டவர்க்கும் விளேவது போல, சிவனின் அருள் பெற்றவர்கள் சிவனேப் போலவே யாவற்றையும் ஒருங்கே அறிய வேண்டும் என்றும், சிவனது ஐந்தொழில் ஆற்றும் வல்லமை அந்த உயிர்க்கும் உண்டாக வேண்டும் என்றும் கொள்ளுவது பொருந்தாது.

இந்தப் பாடலில் சிவசமவாதிகள் கொள்ளும் கருத்தை எடுத்துக் கூறி அவர்கள் கூற்றுப் பொருந்தாது என்று கூறி மறுக்கிறுர். பிசாசினுல் பிடிக்கப்பட்டவர்கள் பிசாசின் குணமும் தொழிலும் கொண்டவர் ஆவது போலச் சிவன் அருளைப் பெற்ற உயிர்கள் சிவனைப் போலவே முற்றுணர் வும் உடையவராகி ஐந்தொழிலும் இயற்ற வேண்டும் என்பது சிவசம வாதிகள் கருத்து. அது பொருந்தாது என்று இப்பாடலில் கூறி விட்டு, இதையடுத்த பாடலில் அக்கருத்தை, எடுத்துக் காட்டு மூலம் ஆசிரியர் மறுத்து உரைக்கிறுர். எனவே இப்பாடலின் பொருள் வருகின்ற பாட லோடு இயைத்து உணரத்தக்கது.

**77** **இன்றுநோக்கு உரை நடக்கும்**
**இயல்புஇலோர்க்கு இனைய வாய்ந்து**
**நின்றதோர் அலகை நேர்ந்தால்**
**நிகழ்வதுஎன் அதுபோல் உள்ளத்து**
**ஒன்றிய உணர்வு தம்பால்**
**உள்ளது நிகழ்த்தும் ஈசன்**
**தன்தொழில் நடத்தும் மேனி**
**தனக்குஎனக் கொண்டு தானே.**

குருடனும் ஊமையும் முடவனும் ஆகிய ஒருவனை அவ்வுறுப்புக் குறைகள் இல்லாத பேய் ஒன்று பற்றிக்கொள்ளுமானுல் என்ன நிகழும்? அவனுக்குப் பேச்சு வராது. காண முடியாது. நடக்கவும் இயலாது. ஏனெனில் இக்குறைபாடுகள் அவனிடத்தில் ஏற்கனவே உள்ளன. ஆத லால் அவனை விட்டு அவை நீங்கா. ஆன்மாவின் இடத்திலே பொருந்திய அருள் அதன் இச்சை ஞானம் கிரியைக்கு ஈடாக அறிவித்து நிற்குமே அன்றி அதற்கு மேல் வேறு எதனையும் ஆன்மா பெறுதல் இயலாது. இறைவன் திருமேனி கொண்டு தனக்குரிய ஐந்தொழில்களை ஆற்று வதைப் போல ஆன்மா ஆற்றுதல் இயலாது.

திருவருள் ஆன்மாக்களின் விழைவு அறிவு செயல்களைத் தடுத்து நின்ற மலத்தை அகற்றி, அவற்றிற்கு இறைவனைக் காட்டும் பேருதவி யைச் செய்கிறது. அவ்வளவே தவிர ஆன்மாக்களை இறைவனேடு ஒத்தவையாகச் செய்யும் என்று கொள்ளுவது தவறு. ஏனெனில் இறை வன் அருள் திருமேனி கொண்டு ஐந்தொழிலை இயற்றுகின்றுன்.

சிவஞான சித்தியாரில், ''உம்பர் பிரான் உற்பத்தி ஆதிகளுக்கு உரியன் உயிர் தானும் சிவானு பவம் ஒன்றனுக்கும் உரித்தே'' (பாடல் 319) என்று கூறப்படுவதும் இதுவே.

இவ்விரண்டு பாடல்களும் இடைப்பிறவரல் போன்று ஓர் ஐயத் தினை நீக்கின என்று பெரியோர் கொள்வர்.

**78 இந்நிலை தன்னில் மன்னி எய்திடும் கலாதி போதம்**
**தன்அளவு அறிந்து நிற்கும் தகவுஇலா நலங்கள் நீத்த**
**அந்நிலை கரணம் ஆகா வகைஅதில் அறிவு அடங்கி**
**மன்னிட வியாபி யாய வான்பயன் தோன்றும் அன்றே.**

சகல நிலையில் ஆன்மா தன்னைச் சார்ந்த கலை முதலிய தத்துவங்களால் வருகின்ற வரையறைக்குட்பட்ட அறிவோடு தனக்கெய்தியவற்றை அறிந்து நிற்கும். தகவற்ற மலங்கள் நீங்கிய நிலையில் அது திருவருளோடு சேர்ந்து நிற்கும். அந்நிலை சுத்த நிலை ஆகும். சுத்த நிலையில் ஆன்மா கரணங்கள் ஏதும் கொள்ளாது. திருவருள் வெளிக்குள் ஆன்மா அடங்கி நிலை பெறும். அப்போது வரையறையற்ற வியாபக ஞானம் என்னும் பயன் விளங்கித் தோன்றும்.

இப்பாடலை எழுபத்து ஐந்தாம் பாடலில் ''முன்னைத்தகவு இலா மலங்கள் வாட்டி'' எனக் கூறப்பட்டதனோடு ஒருங்கு வைத்துப் பொருள் காணுதல் வேண்டும். இந்நிலை என்பது இந்தச் சகல நிலை என்று பொருள் தந்து நின்றது. எனவே அணிமைச் சுட்டால் குறிப்பிடப்பட்டது. அந்நிலை என்றது சகலத்தின் நீங்கிய சுத்த நிலையைக் குறித்தது. எனவே சேய்மைச் சுட்டால் குறிப்பிடப்பட்டது.

திருவருள் தன்னையும் ஆன்மாவையும் பாசங்களையும் இன்ன தன்மைய என்று காட்ட ஆன்மா அவற்றைக் காண்பது ஆன்ம தரிசனம். ஆன்மா தன் முனைப்பு அற்றுந் திருவருளிலே மூழ்கி நிற்கின்ற நிலை ஆன்ம சுத்தி. தன் முனைப்பு அற்றமையால் ஆன்மாத் தன் பணி நீத்தது. அந்த நிலையில் இறைபணி நிற்கும் இயல்பை எய்தியது. அவ்வாறு எய்தவே ஆன்ம லாபம் என்னும் ''வியாபியாய வான்பயன் தோன்றும்''. ஆன்மாவுக்கு இதனினும் மேலான பேரின்பப் பயன் வேறில்லை என்பதை உணர்த்த வான் பயன் என்றார் ஆசிரியர்.

தன் முனைப்பு அடங்கினால் அன்றி வினைத் தொடக்கு அறாது. அறாதவரை புலன்வழிச் செல்லும் தன்மை ஆன்மாவை விட்டு நீங்காது. அது நீங்குவதற்குத் தன் பணி நீத்தலும் இறைவன் பணி நிற்றலும் கட்டாயமாகத் தேவை. இவ்வாறு கூறுவதால் இப்பாடலில் பாச நீக்கமும் சிவப்பேறும் உணர்த்தப்பட்டன.

**79 அடைபவர் சிவமேஆகும் அதுஅன்றித் தோன்றும் என்ற**
**கடன்அதுஎன் என்னில் முன்னம் கண்டிடார் தம்மைப் பின்னும்**
**தொடர்வுஅரும் அருளினாலும் தோன்றுமா காணார் ஆயின்**
**உடையவன் அடிசேர் ஞானம் உணர்தல் இன்று அணைதல் இன்றே.**

ஆன்மா திருவருள் வழிச் சென்று சிவத்தை அடையும் காலத்தில் அது சிவமே ஆதல் வேண்டும். அதுவன்றி மற்றொரு வான்பயன் தோன்

றும் என்று கூறுதல் எவ்வாறு பொருந்தும்? எனக் கேட்பின் திருவருட் பேற்றுக்கு முன்னும் தம்மையறியாத ஆன்மாக்கள், அப்பேற்றின் பின்னர்த் தொடர்வதற்கரிய ஞானத்தின் துணை கொண்டும் தம்மை உள்ளவாறு காணுவாயின் இறைவனின் திருவடி ஞானத்தை உணர்வதும் இல்லை, அணைவதும் இல்லை.

இதற்கு முந்திய பாட்டில் 'வான்பயன் தோன்றும்' என்று கூறப் பெற்றிருப்பதைப் பற்றியே இங்கு வினு எழுப்பப்படுகிறது. சிவத்தை அடைந்த பிறகு உயிர் சிவத்தோடு கலந்து பொருந்தி இரண்டற நிற்கும் என்று கொள்ளல் ஆகாதா? அதன் பிறகும் வேறு ஒரு பயன் தோன்றும் என்று ஏன் கூறப்பட்டது?

சைவசித்தாந்தத்தில் முப்பொருள்களும் என்றும் உள்ளவை. எனவே இவற்றில் எந்த ஒரு பொருளும் இல்லாத நிலை கட்டு நிலையிலும் இல்லை; வீடு பேற்று நிலையிலும் இல்லை. வீடு பேற்று நிலையில் உயிர் உயிராகவே நின்று இறைவனின் பேரின்பத்தை என்றும் அநுபவித்துக் கொண்டிருக்கும். அந்தப் பேரின்ப அநுபவம் தான் வான் பயன்.

கட்டு நிலையில் தன்னையும் அறிய இயலாத ஆன்மா இறைவனை அறியாதிருந்தது. அதற்குக் காரணமாக அமைந்தது ஆன்மாவைப் பற்றியிருந்த மலம்.

முத்தி நிலையில் தன்னை அறிந்து அருளையும் அறிந்து வீடு பேற்றினைப் பெறும். நான் இது என்று தன் உண்மைத் தன்மையை அறிய இயலவில்லை ஆயின் எவ்வாறு அருளை அறியும்? எவ்வாறு அருளை அடையும்? தன்னையே அறியாத போது அடிசேர் ஞானத்தை உணர்தலும் இல்லை.

பெறுவானும் பேறும் இல்லையெனில் சாயுச்சியும் என்னும் சொல்லுக்குப் பொருள் இல்லை.

**80 பொறற்புறு கருவி யாவும் புணராமே அறிவிலாமல்**
**சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற**
**சிற்பரம் அதனுல் உள்ளச் செயல் அறுத்திட உதிக்கும்**
**தற்பரம் ஆகி நிற்றல் சாக்கிராதீதம் தானே.**

பொலிவுமிக்க கருவிகள் யாவும் பொருந்தாமலும், ஆணவ மலத்தால் மறைப்புண்டு அதீத அவத்தைப் பட்டு அறிவிலாமல் கிடவாமலும் இரண்டையும் கடந்த நிலையில் ஆன்மாவினிடத்திலே உயர்ந்ததாகிய சிற்பரம் தோன்றும். அதன் துணை கொண்டு தன் பணி நீத்து இறை பணி நின்று ஞானவடிவாய் நிற்கவே தற்பரம் ஆகிய சிவத்துடன் நிலை பெற நிற்கும் சாக்கிர அதீதம் தோன்றும்.

கேவல அவத்தை என்பது பொற்புறு கருவிகள் எதுவும் புணராமல் இருக்கும் நிலை. கருவிகள் பொருந்தும் போது கேவல அவத்தை நீங்கு

கிறது. சகல அவத்தை தொடங்குகிறது. இது இரவு நீங்கிப் பகல் தொடங்குவது போன்றது. உயிருக்கு இந்த இரண்டு அவத்தைகளும் உள. கேவல அவத்தையில் ஆணவத்தில் கட்டுண்டு காரிருளில் கிடந்த உயிருக்குச் சகல அவத்தை வந்தவுடன் உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகிய பலவும் வந்து பொருந்துகின்றன.. ஒரு வகையில் சகல அவத்தை கேவல அவத்தையை விட உயர்ந்தது. ஏனெனில் ஆன்மாவின் அறிவு இங்கு சிறிதே வெளிப்படுகின்றது. ஆயினும் சுத்த அவத்தையிலும் சகல அவத்தை கீழ்ப்பட்டதே. இதுவரை சகல அவத்தையை விளக்கினுர் ஆசிரியர். அவர் பயன்படுத்திய சொற்ருெடர் 'பொற்புறு கருவி யாவும் புணராமே' என்பது.

அதை அடுத்துக் கேவல அவத்தையைக் குறித்து ''அறிவிலாமை சொற்பெறும் அதீதம் வந்து தோன்ருமே'' என்று ஆசிரியர் குறிப்பிடுகிருர். முன் கூறப்பட்ட சகல நிலேயும் இப்போது கூறப்பட்ட கேவல நிலேயும் இல்லாது, இதனினும் உயர்ந்த சுத்த நிலேமை அடைவது விழிப்புடன் இருக்கும் ஆன்மாக்களுக்கே எய்தற்பாலது, இல்லே எனில் கேவலமும் சகலமும் மாறி மாறித் தோன்றி பிறப்பும் இறப்பும் எய்தி உயிர் உழன்று கொண்டே இருக்கும்.

கேவலத்தையும் சகலத்தையும் நீங்கிய பக்குவம் உடைய ஆன்மாக்களுக்குத் தோன்றுவது சிற்பரம். சித்—அறிவு. பரம்—மெய். சிற்பரம் என்ற சொல் மெய்யுணர்வாகிய சிவஞானத்தைக் குறிக்கும்.

மேலே நாற்பத்தொன்பதாவது திருப்பாடலில், ''ஞானக் கூத்தன் ஒரு மூர்த்தி கொடுகுறுகி மோக, நீடிய கேவல சகலம் நிகழாவாறு, நிறுத்தி மலம் அறுக்கும் அது நிலேயார் சுத்தம்'' என்று ஆசிரியர் கூறியது இங்கு நினேவு கூரத்தக்கது.

சிற்பரம் அதனுல் உள்ளச் செயல் அறுத்தல் என்பது ஆன்மா சிவ ஞானத்தின் துணே கொண்டு தான் அதில் அடங்கித் தனக்கென ஒன்று இன்றி ஏகனுகி இறைபணி நிற்றலேக் குறித்தது. திருஉந்தியாரில் திருவியலூர் உய்யவந்த நாயனுர்,

''நம்செயல்அற்று, இந்த நாம் அற்றபின், நாதன்
தன்செயல் தானே என்று உந்தீபற
தன்னேயே தந்தான் என்று உந்தீபற'',

என்றதும் இக்கருத்தே பற்றி.

தற்பரமாய் நிற்றல் என்பதை அந்தப் பரமாகியே நிற்றல் என்பர். அநந்நியமாய் நிற்றல்—அத்துவிதமாய் நிற்றல். ''ஊன் கெட்டு உயிர் கெட்டு என் உள்ளமும் போய், நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ'' என்ற திருவாசகம் இந்த உண்மையை உணர்த்தும்.

சாக்கிராதீதம் என்பது கேவலம் சகலம் இரண்டையும் நீங்கி நனவிலேயே அதீத நிலையை அடைதல்.

**81 ஒடுங்கிடா கரணம் தாமே ஒடுங்குமாறு உணர்ந்து ஒடுக்க**
**ஒடுங்கிடும் என்னில் நின்றது ஒடுங்கிடா கரணம் எல்லாம்**
**ஒடுங்கிடா ஒடுங்க உள்ள உணர்வுதான் ஒழியும் வேறாய்**
**ஒடுங்கிடில் அன்றி மற்ற உண்மையை உணரொணுதே.**

முந்தைய பாட்டில் பொற்புறு கருவியாவும் புணராமே என்று கூறியதற்கு விளக்கம் தருகிருர் ஆசிரியர்.

கருவி கரணங்கள் உலக நுகர்விலும் அதன் வழியாக வினை ஈட்டத்திலும் தாமே ஓடும் இயல்புடையன. அவற்றை ஒருவன் ஒடுக்கிக் கொள்ளுகிற முறையை உணர்ந்து ஒடுக்கிஞல் அவை அவ்வாறு வரம்பின்றி ஓட மாட்டா என்று சிலர் கொள்வர். அப்படி உணர்வு கொண்டு கரணங்களை ஒடுக்குவ தென்பது இயலாதது. நான் இவற்றை ஒடுக்குகிறேன் என்ற உணர்வு உள்ள வரையில் அங்கே ஆன்ம போதம் எனப்படும் உயிரின் அறிவு ஒடுங்கவில்லை என்பதே உண்மை. உயிருக்கு வாயிலாகிய கரணங்கள் ஒடுங்குகிறபோது ஆன்மாவிற்கு அறிவு கெட்டு அது கேவல நிலையை அடையும் என்பது தான் உண்மை. பின் எந்த ஒடுக்கம் உயர்ந்தது எனின் கேவலம் தோன்ருதவாறும் முனைப்போடு ஒடுக்காதவாறும் சிவனுடைய பேரின்பத்தில் தன்னை உட்படுத்திக் கொண்டு அதனுள் தன் முனைப்பற்று நிற்பதே சிறந்ததாகும். சிவஞானத்தில் தம்மை ஒடுக்கிக் கொள்ளாதவர்க்கு இவ்வுண்மை உணர இயலாததாகும்.

கரணங்களை ஒடுக்குகிறேன் என்று கருதுகிற பொழுதே ஒடுக்குகிறவன் நான் என்ற உணர்வு தலையெடுக்கிறது. அந்த உணர்வுதான் உயிரின் தன் முனைப்பு. தன் முனைப்பு அருத போது ஒடுக்கம் என்ற சொல் பொருளற்றுப் போகும்.

அல்லாமல் கரணங்கள் உண்மையிலேயே ஒடுக்கப்பட்டுவிட்டால் ஆன்மா கேவல நிலையை அடைந்து விட்டது என்பதுதான் பொருள். ஏனெனில் கேவல நிலையில் இருக்கின்ற உயிர் அறிவற்று விழைவற்று ஆள்வினையற்று கிடந்தது. அப்போது உயிர் அறியாமையே வடிவாகக் கிடந்தது. இறைவன் தன் பெருங்கருணையால் உயிருக்கு உடல் கருவி முதலியவற்றைத் தந்து அதன் அறிவைச் சற்றே விளங்குமாறு திருவருள் பாலித்தான். மீளவும் அக்கேவல நிலையை அடைவது உயிருக்கு முன்னேற்றம் அன்று பின்னடைவே.

பின் எப்படித்தான் பொற்புறு கருவியாவும் புணராமை நிகழும் எனக் கேட்பின் மேற்கூறப்பட்ட இரண்டு நிலைகளுக்கும் மேலாய் உண்மை எனப்படும் சிவானுபவத்தில் தோய்ந்து தன்முனைப்பும் அற்று நிற்றலே கருவிகள் புணராத உண்மையான ஒடுக்கம் என்கிருர்.

**82 பற்றிடும் கருவி யாவும் படர்ந்து உணர்வு அளிக்கும் காலே
உற்று அறிந்திடுவது ஒன்றின் உணர்வினின் உண்மை ஆகும்
மற்றது பகல் விளக்கின் மாய்ந்திட வருவது உண்டேல்
பெற்றிடும் அதனை மாயப் பிறப்பினை அறுக்க லாமே.**

உயிரின் அறிவு விழைவு ஆள்வினை ஆகியவை புறத்தில் உள்ள பொருள்களைக் கருவிகளின் வாயிலாகச் சென்று படர்ந்து, பற்றி உயிருக்கு அறிவு நிகழ்கிறது. அவ்வறிவு சுட்டறிவு எனப்படும் வரையறைக்குட் பட்ட அறிவு. இதனை ஏகதேச அறிவு என்பர். நட்ட நடுப்பகலில் கதிரவனின் ஒளி விளங்கித் தோன்றும் ஓரிடத்தில் ஏற்றி வைக்கப்பட்ட கை விளக்கு எவ்வாறு ஒளி மடங்கி நிற்கிறதோ அதுபோல இறைவனின் பேரொளியில் உயிரின் அறிவு மடங்கி நிற்கின்ற நிலையினை எய்தப் பெற்ருல் அதுவே மாயப் பிறப்பினை அறுப்பதற்கு வழியாகும்.

மேலே எண்பதாவது பாடலில் ''அறிவிலாமை சொற்பெறும் அதீதம் வந்து தோன்ருமை'' என்பதற்கு இந்தப் பாடலில் ஆசிரியர் விளக்கத்தைத் தருகிருர். பெறும் கரணங்களால் அறியப்படும் அறிவு எல்லைக்குட்பட்டது. அது கைவிளக்கின் ஒளி போன்றது. சிவப் பேரின்பம் என்பது கதிரவனின் பேரொளி போன்றது. பேரொளியில் ஏற்றி வைத்த விளக்கு அணைந்து போவதும் இல்லை. அல்லது தன் ஒளியை இழப்பதும் இல்லை. ஆனல் எல்லையற்ற ஒளிக்குள்ளே தானும் ஓர் துளி ஒளிச்சுடராய் நின்று தன்முனைப்பற்று நிலைபெறுகிறது. இந்த உவமை சிவப் பேரின்பத்தில் அழுந்திய உயிர் தன் முனைப்பற்று அருளில் தோய்ந்து நிற்பதற்கு ஆசிரியரால் எடுத்துக்காட்டப்படுகிறது.

பசு ஞானம் சிற்றறிவு, சுட்டறிவு. அது கைவிளக்குப் போல உயிரறிவைக் குறித்தது. சிவஞானம் முற்றறிவு, வியாபக அறிவு. அது நண்பகல் கதிரவனைப் போல் பதி ஞானம் எனப்படும் சிவஞானத்தைக் குறித்தது. சிவஞானத்தில் திளைத்தவர்களே தோன்றி நின்று அழிவதாகிய பிறப்பினை அறுக்கும் உபாயத்தை அறிந்தவர்கள் ஆவார்கள்.

திருமந்திரத்தில், ''ஒத்திட்டு இருக்க உடம்போடு உயிர்தான் செத்திட்டு இருப்பர் சிவயோகியார்களே'' (121) எனக் கூறப்படுவது இதுவே

மற்றது பகல் விளக்கில் என்பதை மற்றதும் பகல் விளக்கில் என்று பாடம் கொள்வாரும் உளர்.

**83 முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அது தாஞக
வந்தவாறு எய்தல் நிட்டை மருவுதல் என்று நான்காம்
இந்தவாறு அடைந்தோர் முத்தி எய்திய இயல்பிஞேரே.**

முன் பிறவிகள் பலவற்றிலும் ஈட்டப் பெற்று வந்த நல்வினையின் பயனாக ஒருவனது மனம் ஒருமையிலே நிற்கின்ற பக்குவத்தைப் பெறும். அப்போது ஞான ஆசிரியன் தோன்றி முப்பொருள் இயல்பும் உண்மையும் உணர்த்துவான். அவ்வாறு ஆசிரியன் மொழிகின்ற மெய்ப்பொருளைக் கேட்டல் ஒன்று, கேட்டவற்றைச் சிந்தித்தல் ஒன்று, சிந்தித்தவற்றின் உண்மையைத் தெளிதல் ஒன்று, பரம்பொருளோடு ஒத்து நிற்கும் நிட்டை கூடுதல் ஒன்று ஆக நான்காகும், முத்திப் பேறு அடையும் வழிகள். இவற்றைப் பொருந்தினோர் முத்தியினைப் பெறுவார்.

தவம் என்பது பல்வேறு மதங்களில் பல்வேறு வகையாகக் கூறப் படும். தன்னை ஒறுத்தல், பட்டினி கிடந்து உடலை வாட்டுதல் சுடு பாறையில் கிடத்தல், குளிர்நாளில் நீர் நிலையில் நிற்றல் போன்றவை யெல்லாம் தவமாகா என்பது சைவசித்தாந்தம் கூறும் உண்மை. படி நிலைக்கு ஏற்றவாறு சைவசித்தாந்தம் கூறும் நால்வகை நெறிகள் சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனப்படும் சரியை கிரியை யோகம் ஞானம் என்பனவாம். இந்த உண்மை நிலைகளை முந்திய பிறவிகளில் செய்து பக்குவம் அடையப் பெற்ற உயிர்களுக்கு இறைவன் குருவடிவாக எழுந் தருளி வந்து தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவிடத்தும் நின்று உபதேசம் செய்வான்.

குருவின் அருளிச் செயல்களை ஒருமனதோடு கேட்டல். கேட்ட வற்றைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்தல், சிந்தித்தவற்றை முன் பின் மலைவு அற்றுப் போகுமாறு தெளிதல், தெளிந்த பின் ஞான வடிவினனாகிய இறைவனின் பேரருளில் திளைத்து நிட்டை கூடுதல் ஆகிய நான்கும் முத்தி நிலை அடைவதற்குரிய வழிகளாகும்.

சிவஞான சித்தியாரில், ''கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தல் என ஈரிரண்டாம் கிளக்கில் ஞானம்'' என்று கூறப்படு வதும் இம்முறைமை பற்றியே. ''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள், பின்னை அவ னுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள், அன்னை யையும் அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத், தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே,'' என்ற அப்பர் பெருமான் திருவாக்கும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கூடுதல் என்ற நான்கு நெறிகளை உள் ளுறையாக உணர்த்துவது ஆகும்.

முதல் வரியின் இறுதியில் கேட்டல் கேட்டல் என்ற பாடத்தைவிட கேட்டல், கேட்ட சிந்தனை செய்தல் என்ற பாடம் பொருத்தமாக உள்ளது.

**84 பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும்**
**ஈசனை உணர ஒண்ணுது இறை அருள் ஞானம் நண்ணித்**
**தேசுறும் அதனுல் முன்னைச் சிற்றறிவு ஒழிந்து சேர்ந்து**
**நேசமோடு உயர் பரத்து நிற்ப துஞான நிட்டை.**

சொல்லுலகும் பொருள் உலகும் ஆகிய இவற்றை அறிவதால் ஏற் படும் சிற்றறிவினுலும் அந்த அறிவின் அடிப்படையில் அகம்பிரமம் என்று கருதுகின்ற உயிர் அறிவாலும் நம்மை ஆளுடைய பெருமானை அறிய ஒண்ணுது. இறைவனுடைய திருவடியைச் சேர்ந்து அவ்வாறு சேர்ந்த தனுல் சிற்றறிவு ஒழிந்து அவன் திருவடியில் உறைத்த அன்போடும் நிற்பது ஞான நிட்டை எனப்படும்.

சிவஞான சித்தியாருள், ''பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடு உள்ளத்தே நாடிப் பாத நீழல் கீழ்'' நிற்றல் என்பதில் இறைவனை இவ்விரண்டு ஞானங் களாலும் நண்ண ஒண்ணுது என்பது விளக்கப்பட்டது. உலகியல் அறிவு உயர்வுகள் தரினும் அவை உய்யும் நெறி காட்ட மாட்டா எனவே பாச ஞானம் பொய்ம்மை ஞானம்.

பசு ஞானம் பாச ஞானத்தினும் பார்க்க ஒருபடி உயர்ந்ததே எனி னும் அதுவும் உயிரை மெய்ந் நெறியில் செலுத்தாது ஆதலால் பய னற்றதே. அதுவும் சிவஞான சித்தியாருள் ''காதலினுல் நான் பரமம் என்னும் ஞானம் கருது பசு ஞானம்'' என்று கழிக்கப்பட்டது. இவ் ஆசிரியர் தாம் இயற்றிய நெஞ்சு விடு தூது என்னும் நூலில், ''பலகாலம் தாம் பிரமம் கண்டவர் போல் தம்மைக் கண்டு ஆங்கு அதுவே, நான் பிரமம் என்பவர்பால் நண்ணுதே'' என்று அறிவுறுத்தியதும் இப் பொருட்டே.

பதி ஞானம் எனப்படுவது திருவருளால் அல்லாமல் நிகழ்வதில்லை என்பதை இந்தப் பாடலின் பின் இரண்டு அடிகள் உணர்த்துகின்றன. 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி, என்று மாணிக்கவாசகப் பெரு மானும், ''அவன் அருளே கண்ணுகக் காணில் அல்லால்... காட்டொ ணுதே'' என்று அப்பர் பெருமானும் கூறியவை இக் கருத்தை வலி யுறுத்தும்.

நிட்டை என்ற வடசொல் உறுதியாக நிற்றல் என்ற பொருளைத் தருகிறது. ஞான நிட்டை — துரியாதீத நிலை.

**85 விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல் முன்னம்**
**அளந்து அறிவு அளித்து அவற்றின் அளவும் மற்று அவற்றினுலே**
**உளம்கொளும் தனையும் உள்ள படியும் உற்று உணர்ந்து செவ்வே**
**தளர்ந்திடாது உவப்ப மற்றுஅத் தன்மையது ஆகும் தானே.**

இதுவரை கூறி வந்த வகையில் நிட்டை கூடுதல் தான் ஞான நிட்டை ஆகும். அத்தகைய நிட்டை கூடுதல் அரிது என்னின் அந்த நிட்டையை எய்துவதற்கு உரிய உபாயம் இப்பாடலில் கூறப்படுகிறது. உலகத்துப் பொருள்களை அளந்தும் அறிந்தும் வருவதற்கு ஆன்மாவாகிய தனக்கு உதவிய தத்துவங்களைத் தெளிய உணர்தல் வேண்டும். அவற்றின் எல்லையை அறிந்து அவற்றை விட்டு நீங்கல் வேண்டும். அவற்றால் பயன் பெறும் தன்னையும் உணர்ந்து அதனையும் நீங்கல் வேண்டும். இறைவனின் உண்மைத் தன்மையை அறிந்து அவனன்றி ஏதும் ஆதாரமில்லை என்பதை உய்த்துணர வேண்டும். முதல்வனின் பேருதவி இத்தகையது என்று செவ்விதின் உணர்ந்து அவனிடத்து அன்பு பூண்டு அந்த அன்பில் தளராது நின்று அவன் திருவடியைப் பற்றிக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஒழுகுவார்க்கு ஞான நிட்டை கைகூடும்.

முன்னம் ஈட்டிய தவத்தால் குருவருள் தோன்றி உணர்த்த ஞான நிட்டை கைகூடுவது என்பது எளிதன்று. மிகவும் அரியதே. குருவருள் வாய்க்கப் பெற்றிலதேல் அதற்கென வாளா விருத்தல் வேண்டா. அதனைப் பெறுவதற்கு உரிய வழியினை எதிர்மறை முகத்தாலும் உடன்பாட்டு முகத்தாலும் ஆசிரியர் இப்பாடலில் அறிவுறுத்துகிறார்.

தத்துவங்கள் எனப்பட்டவை எல்லாம் ஆன்மாவின் அறிவு விளக்கத்திற்கு இறைவன் வழங்கிய கொடை. ஆயினும் பாச ஞானத்தைத் தரும் அவை வரையறைக்குட் பட்ட அறிவையே ஆன்மாவிற்குத் தரும். அதனை அறிந்து அவற்றை விட்டு நீங்குதல் வேண்டும். ஏனெனில் கருவி கரணங்களால் வந்த அறிவு சடத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு தோன்றியவை. எனவே ஆன்மாவிலிருந்து அவை வேறுபட்டவை. அதுவும் இறைவன் திருவருளால் கைவரப் பெற்றவை. இதனை உணர்ந்தால் பாச ஞானத்தின் இயல்பு அறிந்து அதிலிருந்து நீங்குதல் கூடும்.

சடமாகிய தத்துவங்களால் உளம் கொள்ளும் தன்னை உணர்தல் இதற்கு அடுத்த நிலை. தான் சடம் அன்று என்றும் உணர்த்த உணரும் இயல்பும் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையும் தனக்கு உண்டு என்றும் அறிவதும், தனது வியாபக நிலையை உணர்ந்து, தன்னையே பரம்பொருளாக மயங்கி உணர்வதும் பசு ஞானம். இதுவும் முத்திப் பயனைத் தராது என்றுணர்ந்து இதனை விட்டும் நீங்கல் வேண்டும்.

அதனினும் மேம்பட்ட நிலை உள்ள படியே உற்றுணர்தல் என்பது இப்பாடலில் கூறப்படுகிறது. இறைவனின் பெருங்கருணையை நினைந்து நெஞ்சுருகி அவனன்றித் தனக்கு ஓர் ஆற்றல் இல்லை எனத் தெளிவது அது. ''எப்பொருளும் ஆக்குவான் ஈசனே என்னும் உணர்வும் அப்பொருள் தான் ஆளுடையான் அடியார்கள் என்னும் அறிவும், இப்படியால்

இதுவன்றித் தம் இசைவு கொண்டு இயலும், துப்புரவு இல்லாதார் துணிவு துகளாகச் சூழ்ந்து எழுந்தார்'' என்று திருஞானசம்பந்த நாயனர் வரலாற்றில் சேக்கிழார் பெருமான் இதனைத் தெளிய உரைத்து அருளினர்.

இவ்வாறு செவ்வே அறிந்து உணர்த்து தளர்ந்திடாது ஒழுகுபவர்க்கு ஞான நிட்டை எளிதில் கைகூடும்,

**86 பாவிக்கில் மனுதி வேண்டும் பயன்இலை கரணம் நீத்துப்**
**பாவிப்பான் என்னில் என்ன பழுதுஉள பாவகத்தால்**
**பாவிக்க ஒண்ணுன் என்று பாவிப்பன் என்னில் நீஎன்**
**பாவிக்க வேண்டா ஆண்ட பரன்அருள் பற்றி ஞேர்க்கே.**

பாவனையால் சிவஞானம் தோன்றுதோ என்ற கேள்விக்கு ஆசிரியர் இப்பாடலில் விடையிறுக்கிருர். பாவனை என்பது மனத்தின் செயல். மனம் அந்தக் கரணங்களுள் ஒன்று. கரணங்கள் ஒன்றின் துணையாலே பாவிக்கப்படும் பொருள் சத்துப் பொருளாக இருக்க முடியாது. அவ்வாறு அன்று கரணத்தின் துணையின்றிப் பாவிப்பேன் என்னின், கரணங்கள் அற்ற ஆன்மா கேவலத்துள் அழுந்தும். ஆகையால் அது பழுதாகும். அதுவுமன்று இறைவன் பாவனைக்கு எட்டாத பொருள் என்று பாவிப்பேன் என்னில், அதனை நான் பாவிக்கிறேன் என்ற உணர்வு உன்னிலிருந்து நீங்காதிருக்கிறது. அப்போது தன் முனைப்புக் கெடாது. குருவின் உபதேசத்தால் திருவருளைப் பற்றிஞேர்க்கு இம் மூன்று வகையான பாவனைகளும் வேண்டா.

இறைவன் ''கரணங்கள் எல்லாம் கடந்து நின்ற கறை மிடற்றன்'' (திருவாசகம்-திருக்கோத்தும்பி-9) என்கிருர் மாணிக்கவாசகப் பெருமான். அவனை மனம் என்னும் அந்தக்கரணத்தின் துணையால் பாவிப்பேன் என்பது பிழையானது.

இதற்கு அடுத்த உபாயம் கரணத்தின் துணை இன்றியே பாவிக்க இயலாதோ என்ற கேள்வி. கேவல நிலையில் அறியாமையே வடிவாய்க் கிடந்த உயிர்க்கு இறைவன் உடல் கரணங்களைப் பொருத்திய போதே அதற்குச் சிற்றறிவு புலப்படுகிறது. ஆதலால் கரணம் கழன்ற நிலை கேவல நிலை. அது பழுதுடைய நிலை.

மூன்ருவது நிலை இறைவன் பாவிக்க ஒண்ணுதவன் என்று பாவிப்பேன் என்பது. பாவனைக்கு எட்டாத ஒன்றை நான் பாவிக்கிறேன் என்று கூறுவது, நான் என்னும் தன் முனைப்பு என்பது மட்டுமின்றி அது போலியுமாகும்.

பரம்பொருளின் திருவடியைப் பற்றினவர்களுக்கு குருவின் அருளுபதேசத்தால் பாவிக்க வேண்டிய தேவை இல்லை.

பாரதியார் ''காவித்துணி வேண்டா கற்றைச் சடை வேண்டா, பாவித்தல் போதும் பரம நிலை எய்துதற்கே'' என்று கூறுகிறார். அந்தப் பாவனை வகை அனைத்தும் பயன்தரா என்பதனை இப் பாடல் தெளிவுற விளக்கிற்று.

சிவஞான போதத்துள், ''பாவக மேல் தான் அசத்தாம்'' என்று தொடங்கும் ஆறும் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்தின் மூன்றாவது எடுத்துக்காட்டுச் செய்யுளையும், அதற்கு மாதவச் சிவஞான முனிவர் வரைந்த பேருரையையும், சிவஞான சித்தியாரில் சுபக்கத்தில் ''பாவிப்பது என்னில் பாவம்'' என்று தொடங்கும் (245)பாடலையும் இதனுடன் ஒப்பிட்டுக் கற்பது பயன்தரும்.

**87 ஒன்று இரண்டு ஆகி ஒன்றின் ஒருமையாம் இருமை ஆகி**
**ஒன்றில் ஒன்று அழியும் ஒன்றாது என்னில் ஒன்று ஆகா தீயில்**
**ஒன்று இரும்பு உறழின் அன்றாம் உயிரின் ஐந் தொழிலும் வேண்டும்**
**ஒன்றி நின்று உணரும் உண்மைக்கு உவமை ஆணவத் தோடு**
**ஒன்றே.**

இப்பாடலில் ஆசிரியர் ஆன்மாவும் பரம்பொருளும் ஒன்றா வேறா என்ற வினாவிற்கு விடையிறுக்கிறார். சுருங்கிய சொல்லால் விரிவான கொள்கைகளை விளக்கிக் காட்டுகிறார். 1) ஒரே பொருள் இரண்டாக மாறி அதன் பின்னர் இரண்டும் ஒன்றாகும் என்றால் அது ஒரு தன்மை உடையதாக இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லாததால் இக் கொள்கை பொருந்தாது. இது ''ஒன்று இரண்டாகி ஒன்றின் ஒருமை யாம்'' என்ற சொற்றொடரால் கூறப்பட்டது. 2) ஆன்மாவும் இறைவனும் தோற்றமில் காலம் தொட்டே இரண்டு வேறுபட்ட பொருள்களாய் நின்று முத்தி நிலையில் ஒன்றாகி விடும் என்று கொண்டால் ஆன்மா முத்தி நிலையில் அழிந்து போகும் என்று ஆகும். எனவே இக் கொள்கையும் பொருத்தமற்றது. இது பாடலில் 'இருமை ஆகி ஒன்றில் ஒன்று அழியும்' என்ற சொற்களால் குறிக்கப்பட்டது. 3) முத்தி நிலையிலும் ஆன்மா சிவத்தோடு கூடாது. அவை இரண்டும் இருவேறு பொருள்களாகவே நிற்கும் என்றால் முத்தி நிலை பயன் தரு நிலை ஆகாமல் பேறு என்பதே இல்லாமல் போகும். எனவே இதுவும் பொருத்தமான கொள்கையாகாது. இக்கருத்து பாடலில் 'ஒன்றாது என்னில் ஒன்று ஆகா' என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டது. 4) தீயிலே இட்டுக் காய்ச்சப்பட்ட இரும்புத் துண்டு பழுக்கக் காய்ந்த நிலையில் தீயே ஆனாற் போல ஆன்மா சிவத்தோடு கூடி சிவமே ஆகும் என்று கொண்டால் தீயின் ஆற்றல் பழுக்கக் காய்ந்த இரும்பிற்கும் உளதாதல் இல்லை. அது போலவே இறைவன் இயற்றுகின்ற ஐந்தொழிலையும் முத்தி நிலையிலும் ஆன்மாவால் இயற்ற இயலாது. எனவே இந்தக் கொள்கையும் பொருத்தமற்றதே. இது பாடலில் 'தீயின் ஒன்று இரும்பு உறழின் அன்றாம், உயிரின் ஐந்தொழிலும் வேண்டும்.

என்ற சொற்களால் கூறப்பட்டது. பின் உயிரும் சிவமும் ஒன்றி நிற்கும் முறைமைக்கு எதனைத்தான் உவமை கூறுவது? எனக் கேட்பின் தோற்றமில் காலந் தொட்டே உயிர் ஆணவ மலத்தோடு கூடி ஒன்றுபட்டு அழியாமலும் வேறுபட்டு நீங்காமலும் இருந்த கேவல நிலையே இதற்கு ஏற்ற உவமை ஆகும். இது பாடலில் 'ஒன்றி நின்று உணரும் உண்மைக்கு உவமை ஆணவத்தோடு ஒன்றே' என்ற சொற்களால் குறிக்கப் பெற்றது.

செறிவு மிக்க இந்தப்பாடலில் நான்கு வேறு பட்ட கொள்கைகளைக் கூறி அவை யாவும் பிழையுடையன என்பதையும் நிறுவிய ஆசிரியர் அவற்றை அடுத்து சைவ சித்தாந்தத்தில் கூறப்படும் கருத்துக்கு ஏற்ற உவமையைக் காட்டிப் பிறர் கோள் மறுத்துத் தம் கோள் நிறுவுகிறுர்.

முதலாவது கருத்து: ஒரே பரம்பொருள் தானே பரமான்மா என்றும் சீவான்மா என்றும் இரண்டாகப் பிரிந்து தோன்றும். சீவான்மா என்பது பிறப்பு இறப்புக்களிலே உழன்று துயரம் அனுபவித்து நல் ஆசிரியர்களை அடுத்து, அவர்கள் உபதேசத்தால் தானும் பரம்பொருளும் ஒன்று என்பதை அறிந்து மீளவும் பரமான்மாவோடு கூடி ஒன்றுபட்டுப் போகும்.

இக்கொள்கை பொருந்தாது என்பதை உணர வைக்கிறுர் ஆசிரியர். ஒரே பொருள் இரண்டாயிற்று எனில் இரண்டிற்கும் குணம் ஒரே தன்மையாய் இருத்தல் வேண்டும். பரமான்மாவின் குணம் சீவான்மாவில் காணப்படுவது இல்லை ஆதலால் இது பொருந்தாது. அல்லாமலும் முத்தி நிலை அடைந்த பின்பும் சீவான்மா மீளப் பிறத்தலும் கூடும் என்ற குறைபாடும் இக் கொள்கையில் உள்ளது. இந்தக் கருத்து ஏகான்ம வாதம் என வழங்கும். இது பொருத்தமற்றது என்பதை ஆசிரியர் உணர வைக்கிறுர்.

இரண்டாவது கருத்து: ஆன்மா வேறு சிவம் வேறு. அவை இரண்டும் தோற்றமில் காலம் தொட்டே வேறுபாடு உடையன. ஆனுல் முத்தி நிலை அடைந்த ஆன்மா சிவத்தோடு ஒன்ருகிவிடும்.

முத்தி நிலையில் இக் கொள்கையின்படி ஆன்மா அழிந்து போகும். எனவே பெறுவான் ஒருவன் இல்லை. ஆகவே பேறும் இல்லை. ஈவான் இல்லை, ஏற்பானும் இல்லை. ஆகவே முத்தி நிலை என்பது பயனற்ற நிலை என்ருகும். இது ஐக்கியவாத சைவர் கருத்தாகும்.

மூன்ருவது கருத்து: பரமான்மாவோடு சீவான்மா ஒன்றுபட்டு முத்தி நிலையில் இல்லாமல் போகும் என்று கொள்ள வேண்டாம் எப்போதும் இரண்டும் இரண்டு பொருள்களாகவே நிலைபெறும் என்ருல் என்ன? அவ்வாறு கூறப்படுகிற நிலைமை ஒரு பொருட்டாகாது. கட்டு நிலையிலும் இரண்டு பொருள்கள் உள்ளன. முத்தி நிலையிலும் அதே இரண்டு பொருள்களும் தனித்தனியாக முன் இருந்தபடியே உள்ளன என்ற

போது வீடு பேறு என்ற சொல்லுக்கே பொருளில்லாமல் போகும். ஆன்மா பரம்பொருளோடு பொருந்தி இடையரு இன்பத்தில் திளைப்பது தான் வீடு பேறு என்று சொல்லத் தகும் நிலை. அல்லாத போது முத்தி நிலை பயனும் பேறும் அற்ற நிலை. இந்த மூன்றாவது கருத்து சிவ சமவாதிகள் கொள்கை.

நான்காவது கருத்து: உலையில் இட்டுக் காய்ச்சப் பட்ட இரும்பு தீயின் செம்மை நிறத்தையும் வெப்பத்தையும் பெற்றுத் தீக்கங்கு போலவே ஆகி விடுகிறது. ஆன்மாவும் சிவத்தோடு கூடிய நிலையில் சிவ மாகவே மாறிவிடும். தீயின் தன்மையை இரும்பு எய்துகிறது. அந்த நிலையில் தீயும் உண்டு இரும்பும் உண்டு.

இதுவும் பொருந்துவதன்று தீயினால் பழுக்கக் காய்ச்சப் பட்ட இரும்பு தீ செய்யும் தொழிலைச் செய்வதில்லை. தீ வெப்பத்தைக் கொடுக் கும். இரும்பு அதனை ஏற்கும். இரும்பே வெப்பம் தருகிற தொழிலைச் செய்யாது. அது போலவே முதல்வன் உயிர்களின் பொருட்டு ஐந்தொழி லும் செய்வான். உயிர்களுக்கு ஐந்தொழில் நடத்தும் வல்லமை ஒரு போதும் வருவதில்லை. உயிர்க்கு அந்த வல்லமை உண்டு என்று கொண் டால் சிவத்துக்குரிய முதன்மை கெடும். இறைவன் ஒருவனே உளன் அவனுக்கு ஈடும் இல்லை எடுப்பும் இல்லை என்கிற கொள்கை மறுக்கப் படும். எனவே இக்கொள்கையும் பொருத்த மற்ற கொள்கையே. இங்கு மறுக்கப்பட்ட கொள்கை சிவசங்கிராந்த வாதம்.

இவ்வாறு நான்கு கொள்கைகள் மறுக்கப்பட்ட பின்னர் ஆசிரியர் ஓர் உவமையின் மூலம் சித்தாந்தக் கொள்கையை விளக்குகிறார். கேவல நிலையில் உயிர் ஆணவ மலத்தோடு ஒன்றுபட்டிருந்தும் தான் அழியா மலும் ஆணவ மலத்தை விட்டு இரண்டு பட்டு நீங்காமலும் இருக்கிறது. உயிருக்கும் ஆணவத்துக்கும் வேறுபாடு தெரியாத அளவிற்கு உயிரே ஆணவமாகியும் ஆணவமே உயிராகியும் தோற்றமளித்தாலும் இரண் டின் தன்மையும் கெடாமல் உள்ளது. கேவல நிலையில் ஆணவத்தோடு ஒன்றுபட்டிருந்த நிலை இழிவானது. முத்தி நிலையில் ஆன்மா சிவத்தோடு ஒன்றுபட்டு இருக்கும் நிலை மிக உயர்வானது. இது ஒன்று தவிர, கேவல நிலையில் உயிர்க்கும் ஆணவத்துக்கும் உள்ள தொடர்பே முத்தி நிலையில் உயிருக்கும் சிவத்திற்கும் உள்ள தொடர்பு என உவமை காட்டின் அதுவே பொருத்தமான கருத்து.

தாயுமான அடிகள் தாம் இயற்றிய எந்நாட் கண்ணியில்

'' ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம் சாரும் நாள் எந்நாளே.''

என்று கூறியுள்ளது இங்கு நினையத் தக்கது.

88 அழிந்திடும் பாசம் என்னில் நித்தம் என்று உரைத்தல் வேண்டா
அழிந்திடாது என்னில் ஞானம் அடைவது கருதல் வேண்டா
அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடா ஒளியின் முன்னர்
அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா மிடைந்திடாவே.

ஆன்மா சிவத்தோடு கூடிய நிலையில் ஆணவ மலம் அழியுமோ அழியாதோ என்ற கேள்விக்கு இப்பாடலில் ஆசிரியர் விளக்கம் தருகிறார். ஆணவம் அழிந்து போகும் என்று கொண்டால் சைவ சித்தாந்தக் கொள்கையான பதியினைப் போல் பசு பாசம் அனாதி என்ற கருத்து மறுக்கப்படும். ஆணவ மலம் ஒருபோதும் அழியாது என்றால் ஆன்மாவுக்கு சிவனருளாகிய திருவடி ஞானம் வாய்க்கும் என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. பின் எது தான் அழிவது? உயிரின் அறிவாற்றலை மறைக்கின்ற ஆணவ மலத்தின் காரியமாகிய ஆற்றல் அழியும். ஆணவ மலத்தின் இருப்பு அழியாது கதிரவன் ஒளியின் முன்னால் நிற்க முடியாத இருள் அழிவதும் இல்லை. ஒளியின் முன் அடர்ந்து நிற்பதும் இல்லை. அதுபோலவே சிவப் பேரொளியின் முன் ஆணவ மலமும் நிற்பதில்லை.

சைவ சித்தாந்தம் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களும் என்றும் உள்ளவை என்று கூறுகிறது. என்றும் உள்ள பாசம் என்றும் உள்ள உயிரை அனாதியே பற்றி நிற்கிறது எனவும் கூறுகிறது. அப்படியானால் பாசம் அழிந்து போகும் என்று சொல்லுவது சைவ சித்தாந்தக் கொள்கைக்கே முரண்பட்டது. பாசம் அழியாது என்று கொண்டால் அறியாமையாகிய ஆணவ மலத்தில் அழுந்தி இருக்கிற உயிருக்கு ஞானம் வரும் என்று எண்ணிக் கூடப் பார்க்க முடியாது. இந்த முரண்பாட்டை எப்படித் தான் நீக்குவது என்பது கேள்வி.

அதற்கு விடை; ஆணவம் என்ற பொருள் அழியாது என்பது சரி. அந்தந்த ஆன்மாவைப் பற்றி நிற்கிற ஆணவ மலத்தின் வலிமை அழிந்து போகும். அதாவது காரணமாகிய ஆணவ மலம் இருப்பினும் அதன் காரியங்கள் தடைபட்டுப் போகும். எனவே அதன் நித்தியத் தன்மை கெடுவதில்லை. காரியம் கெடுகிறது. எனவே இக் கூற்றில் முரண்பாடு ஏதும் இல்லை.

இதனை விளக்குவதற்கு ஆசிரியர் ஓர் நல்ல உவமையைக் கையாளுகிறார். எல்லா இடத்திலும் இருள் இருக்கிறது. சைவ சித்தாந்தக் கொள்கைப்படி இருள் ஒரு பொருள். ஒளியினது இன்மை (அபாவம்) இருள் என்று சைவ சித்தாந்தம் கூறுவதில்லை இது பற்றிய விளக்கம் சிவஞான மாபாடியத்தில் மாதவச் சிவஞான முனிவரால் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. நட்ட நடுப்பகல் சூரிய ஒளியில் நாம் நடக்கிற போது கூட நமக்கு நிழல் என்ற பெயரில் இருள் கண்ணுக்குப் புலப்படுவதை நாம் பார்க்கிறோம். ஆகவே ஒளியின் முன்னர் இருள் அடர்த்துத்

தோன்றுமல் தன் வலிமையை இழந்து போகிறதே தவிர இருள் என்ற பொருள் அழிந்து போவதில்லை. அது போலவே ஞானப் பேரொளி உயிரின் மீது படியும் போது ஆணவ மலம் தன் ஆற்றலை இழக்கிறது. ஆனுல் அழிவுறுவதில்லை.

இந்நூலின் ஆசிரியர் தாம் இயற்றிய கொடிக்கவி என்னும் நூலில் முதல் பாடலில், ''ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்; ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும் எனினும் இருள் அடராது'' என்று குறிப்பிட்டுள்ளதும் இதனை வலியுறுத்தும்.

**89 எல்லைஇல் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்**
**ஒல்லையில் அகலும் ஏன்ற உடல்பழ வினையது ஊட்டும்**
**தொல்லையில் வருதல் போலத் தோன்றுஇரு வினையது உண்டேல்**
**அல்ஒளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே.**

எல்லையற்ற பிறவிகளைத் தரும் இருவினைகளின் தொகுதியாகிய சஞ்சித கன்மம் என்பது தீயிலே இடப்பட்ட வித்துப் போல் ஞான ஆசிரியரின் அத்துவ சுத்தியினுல் அழியும். இப் பிறவியில் அனுபவிப்பதற்கு ஏன்று கொண்ட பிராரத்த கன்மம் உடல் ஊழாய்க் கழியும் நுகரும் போது ஈட்டுவதாகிய ஆகாமிய கன்மம் என்பது ஒளி முன்பு இருள் நீங்குவது போல ஞான ஆசிரியரின் ஞானத் தீ பொருந்துதலால் அழிந்து போகும்.

மூன்று வகையாகக் கூறப்பட்ட கன்மமலம் ஞானத் தழல் வந்து உறும் போது எவ்வாறு அறவே நீங்கும் என்பதை இந்தப் பாடலில் ஆசிரியர் விளக்குகின்ருர். இதற்கு முந்திய பாடலில் ஆணவமலம் அழியும் என்று உரைத்த பின்னர் இப் பாடல் அதேளுேடு இயைபு உள்ள கன்ம மலத்தைப் பற்றிக் கூறுவது கருதத் தக்கது.

எரிசேர் வித்து என்பது வறுக்கப்பட்ட விதை என்று பொருள் கொள்ளப்படும். வறுத்தெடுத்த வித்து வித்தாகவே இருந்தாலும், அதன் தோற்றமும் உள்ளீடும் மாருதிருந்தாலும், முளைக்கும் தன்மை கெட்டுப் போகும் என்பதற்கு இந்த உவமையைப் பயன்படுத்தினுர்.

**90 பந்தம் ஆனவை அறுத்துப் பவுதிகம் உழலும் எல்லைச்**
**சந்தியாது ஒழியாது இங்குத் தன்மைபோல் வினையும் சாரும்**
**அந்தம் ஆதிகள் இலாத அஞ்சு எழுத்து அருளினுலே**
**வந்தவாறு உரைசெய்வாரை வாதியா பேதியாவே.**

மும்மலங்களை ஞான ஆசிரியர் தீர்த்து வைத்த பிறகு ஆன்மா ஐம் பூதங்களால் ஆகிய உடல் கருவி முதலியவற்ருேடு இவ்வுலகில் வாழும் அளவும் அம்மலங்களின் முன்னைத் தொடர்பால் பெருங்காயம் வைத்த செப்பில் அதை எடுத்த பிறகும் அந்த மணம் நீங்காதது போல வினை

சாருவதுண்டு. அந்தச் சார்பின் விளைவுகள் ஆன்மாவைத் தாக்காது இருக்கும் பொருட்டுத் தோற்றமும் முடிவும் அற்ற திருவைந்தெழுத்தை ஆசிரியர் அருளியவாறே கணித்து வருபவர்க்கு மலங்களால் வரும் வாதனை தாக்காது. ஞான நிட்டையில் நின்று மாறுபடுவதும் இல்லை.

திருவைந்தெழுத்தின் பெருமை திருமுறைகளிலும் அருள் நூல்களிலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. உடலோடு வாழ்வார்க்கு ஞான நிட்டை கூடிய போதும் யாக்கையுடன் உள்ள தொடர்பும் உலகத்துடன் உள்ள தொடர்பும் முற்றிலும் அற்றுப்போவதில்லை. பெருங்காயம் வைத்திருந்த பாண்டத்தில் வைத்த எடை குறையாது எடுத்துவிட்ட பின்னரும் அதன் மணம் நீங்குவதில்லை. அது போன்றதே உலகியல் தொர்டர்பும். 'இங்கு' என்பது பெருங்காயத்தைக் குறிக்கும்.

மந்திரங்கள் தம்மை உச்சரிப்பாரைக் காப்பன. எல்லா மந்திரங்களுக்கும் மேலான திருவைந்தெழுத்து, கணிப்பாரைக் காத்து உய்விப்பன. எனவே தான் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுர் நமசிவாயப் பதிகம் ஒன்றும் பஞ்சாக்கரப் பதிகம் ஒன்றும் இயற்றி அருளினுர். திருநாவுக்கரசு நாயனுரும், சுந்தரமூர்த்தி நாயனுரும் நமச்சிவாயத் திருப்பதிகங்கள் அருளினுர்கள். 'வந்தவாறு உரை செய்' எள்ற பகுதியால், ஆசிரியர் உபதேசித்த முறையிலே திருவைந்தெழுத்தைக் கணிக்க வேண்டும் என்பதைக் கூறினுர்.

**91 திருவெழுத்து ஐந்தில் ஆன்மா திரோதம் மாசு அருள் சிவம்சூழ்**
**தரநடு நின்றது ஒன்றும் தன்மையும் தொன்மை ஆகி**
**வரும்மந மிகுதி யாலே வாசியில் ஆசை இன்றிக்**
**கருவழிச் சுழலும் மாறும் காதலர்க்கு ஓதலாமே.**

ஐந்து திரு எழுத்துக்களிலும் ஆன்மாவைக் குறிக்கும் யகரம் நடுவிலே நிற்கும். திரோத மலத்தைக் குறிக்கும் நகரமும் மலத்தை குறிக்கும் மகரமும் முதலிலே நிற்கும். சிவத்தைக் குறிக்கும் சிகரமும் அருளைக் குறிக்கும் வகரமும் அவற்றின் பின்னர் நிற்கும். இதனை சிவ என்பதனை முன்னுக வைத்து யகரத்தை நடுவிலே வைத்து நம என்பதைப் பின்னுக வைத்து ஓதுவர். இது தொன்மையே வரும் வழக்கு. மந இவற்றை மிகுதிபட ஓதுகையில் வசி இரண்டிலும் உயிருக்கு ஆசை குன்றி இறப்பு, பிறப்புக்களிலே பட்டுச் சுழலும். மலத்தின் பிடி நீங்கிப் பிறவியில் உவர்ப்பு வந்து சிவத்தின் மீது ஆசை மிகுதிப்பட்டோர்க்கு ஞான ஆசிரியன் திருவைந்தெழுத்தை ஓதும் முறைமையை உபதேசிக்கலாம்.

'அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம் சொல்லி' என்பது சுந்தர மூர்த்தி நாயனுரின் திருவாக்கு. ஐந்து எழுத்துக்களும் ஐந்து பொருள்களைக் குறிப்பன. எனவே சிவய நம என்பது முறையே சிவம், திருவருள், ஆன்மா, திரோதமலம், மலம் ஆகியவற்றைக் குறித்தன. உலகியல்

பற்று மிகுதியுடையவர்கள் மலத்தோடு சார்ந்து மலமாகவும், சிவனடிக்குப் பேரன்பு பூண்டவர்கள் சிவத்தோடு சார்ந்து சிவமாகவும் நிற்றலை இத்திருவைந்தெழுத்து நினைப்பிக்கும். எனவே சிவம் முதலே ஆகுமாறு பக்குவம் வாய்ந்த உயிர்களுக்கு ஞான ஆசிரியன் அவரவர் தகுதிக்கு ஏற்ப இத்திருவைந்தெழுத்தை உபதேசிப்பான். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க ஓதுவார்க்கு இம்மந்திரத்தை உபதேசிப்பதே முறைமை.

''ஏதும் ஒன்றும் அறிந்திலராயினும்
ஓதி அஞ்செழுத்து உள்உணர்வார்கட்கு
பேதமின்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே''

என்ற அப்பர் பெருமானின் திருக்குறுந்தொகைப் பாடலை இங்கே நினைக.

**92 ஆசுறு திரோதம் மேவாது அகலுமா சிவ முன்னுக**
**ஓசைகொள் அதனில் நம்மேல் ஒழித்துஅருள் ஓங்கும் மீள**
**வாசியை அருளும் மாயா மற்றுஅது பற்று உற்று அங்கு**
**ஈசனில் ஏகம் ஆகும் இதுதிரு எழுத்தின் ஈடே.**

ஆணவமும் அதனால் உயிரைச் சார்ந்த திரோதமும் அகலுமாறு சிகரமும் வகரமும் முதலில் நிற்குமாறு திருவைந்தெழுத்தை ஓதி வருக. அவ்வாறு செய்யின் நகரமாகிய திரோதம் மேவிய மகரம் ஆகிய மலம் ஒழிக்கப்படும். வகரமாகிய அருளைப் பற்றின் அது சிகரமாகிய சிவத்தை அருளும். அதனையே பற்றுகக் கொண்டால் அந்நிலையில் இறைவனோடு அத்துவித நிலையை எய்துவிக்கும். இது திருவைந்தெழுத்தின் பெருமை யாகும்.

ஐந்தெழுத்தின் பெருமையைக் கூறி வருகிற ஆசிரியர் அதனை இடைவிடாது ஓதுவார் அடையும் பெரும் பயனை இந்தப் பாடலுள் தெளிய எடுத்துரைக்கிறார். ''மருந்து வேண்டில் இவை மந்திரங்கள் இவை'' எனவும் ''மருந்தவை மந்திரம் மறுமை நன்னெறி அவை மற்றும் எல்லாம் அருந்துயர் கெடும் அவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே'' என்றும் ''ஆலைப் படுகரும்பின் சாறு போல அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான்'' என்றும் இன்னும் பலவாறும் ஐந்தெழுத்தின் பெருமை திருமுறைகளில் உயர்த்திக் கூறப்படும்.

அவ்வவர் பக்குவத்திற்கு ஏற்ப ஞான ஆசிரியர் ஐந்தெழுத்தின் பருமை, நுண்மைகளைக் கூறி உபதேசித்த பின்னர் நிற்கும் முறைமையும் ஓதும் முறைமையும் மாறுபடாது திருவைந்தெழுத்தை ஓதிவரின் அது மலத்தைக் கெடுத்துச் சிவத்தைக் கொடுக்கும். கொடிக் கவியில்,

''அஞ்சு எழுத்தும் எட்டு எழுத்தும் ஆறு எழுத்தும் நால் எழுத்தும்
பிஞ்சு எழுத்தும் மேலைப்பெரு எழுத்தும் — நெஞ்சு அழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமல் காட்டக் கொடி.''

என்ற பாடலின் பொருள் இங்கு ஒப்பிட்டுக் காணத் தகுந்தது.

**93 தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவிதத்தால்**
**நீங்கிட நீங்கா மூல நிறை இருள் இரிய நேயத்து**
**ஓங்கு உணர்வு அகத்து அடக்கி உளத்துள் இன்பு ஒடுங்க நேரே**
**தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகள் இலோரே.**

தீங்கினைத் தருகின்ற மாயப் பிறவி மீளவும் சேராதபடி மூன்று விதங்களால் நீங்கிட, என்றும் உயிரை விட்டு நீங்காத நிறைந்த இருளாகிய ஆணவம் கெடுமாறு அன்பினால் உள்ளத்து ஒளிர்கின்ற சிவப் பேரறிவுக்குள்ளே அடங்கித் தன்முனைப்பற்றுச் சிவபோதம் தழைத்து வினையத் தம் செயலற்று இருப்பார்கள். இவர்களே குற்றமற்ற தன்மை கொண்ட சிவஞானிகள் எனப்படுவர்.

இப்பாடல் அணைந்தோர் தன்மையைக் குறிக்கிறது. அணைந்தோர் எனப்பட்டவர்கள் இவ்வுலகத்தில் வாழ்கின்ற போதே இறைவனது திருவடிஞானம் வாய்க்கப் பெற்று சிவப் பேரின்பத்தை இடையறாது துய்க்கும் தகுதி பெற்ற சீவன் முத்தர் எனப்படுவர். முத்தி நிலை என்பது உயிர் இவ்வுடலை விட்டு நீங்கிய பிறகே எய்தக் கூடியது என்னும் கருத்து சைவசித்தாந்தத்திற்கு ஏற்புடையதன்று. உயிர் நீங்கிய பின்னரே முத்தியடைதல் கூடும் என்ற கருத்து வைணவத்தில் வலியுறுத்தப்படுகிறது. அது விதேகமுத்தி எனப்படும். இங்கே கூறப்படுவது சீவன்முத்தியே

வினை முற்றிலும் நீங்கிய பிறகே பிறவி அறும். தொல்வினை நுகர் வினை ஏறுவினை (சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்) என்ற மூன்றும் சிவஞானம் கைவரப்பெற்றவர்களுக்கு எவ்வாறு நீங்கும்என்பதை இதற்கு முன் உள்ள பாடல்களால் எடுத்துரைத்த ஆசிரியர் இப்பாடலில் அவற்றைத் தொகுத்து வினை திரிவிதத்தால் நீங்கிட என்று குறிப்பிடுகிறார்.

திரிவிதத்தால் என்பதற்கு மதுரைச் சிவப்பிரகாசர் ''மூன்று வகையாவது தன்னை, வினையை, தலைவனை அறிகிற ஞானம் என அறிக''என்று உரை எழுதுகிறார்.

இலக்கணம் சிதம்பரநாத முனிவர், ''கேட்டல் முதலிய மூவிதத்தாலும் நீங்கா நிற்ப'' என்று பொருள் காண்கிறார். அதற்கு, கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்று மூன்று வகையாலே வினை நீங்கிட நான்காம் நிலையாகிய ஞானத்தினைப் பெறுவார்கள் என்று பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு வினை நீங்கிய பின்னர் நிறைந்த இருளாகிய மூலமலமும் இரிந்து ஓடுமாறு உள்ளத்தின் உள்ளே எழுகின்ற சிவப்பேற்று உணர்வின் ஊறுகின்ற இன்பத்தைத் தன் முனைப்பற்று நிற்பவர்களே அணைந்தோர் என்ற பெருமைக்குரிய சீவன்முத்தர்கள் ஆவார்கள். தொன்மையாக வந்த துகளினை அறுத்தவர்கள் இவர்கள். அன்பினால் இவர்கள் சிவத்

தோடு அத்துவித நிலையில் திளைத்திருப்பர். ஆசிரியர் உமாபதி சிவம் அருளிய மற்றொரு நூலாகிய திருவருட்பயனில் இப்பாடலின் சொல்லும் பொருளும் எடுத்தாண்டு, ''ஓங்கு உணர்வின் உள்அடங்கி உள்ளத்துள் இன்பு ஒடுங்கத், தூங்குவர் மற்று ஏது உண்டு சொல்'' என்று என்று கூறியுள்ளதையும் இங்கு ஒப்பிட்டுக் காணல் பொருந்தும்.

**94 குறிப்பிடம் காலம் திக்கு ஆசனம் கொள்கை குலம் குணம்சீர்**
**சிறப்புறு விரதம் சீலம் தபம்செபம் தியானம் எல்லாம்**
**மறத்துஅற ஒழிதல் செய்தல் மருவிடா மன்னு செய்தி**
**உறக்கு உறுபவர் போல் வாய்மை ஒழிந்தவை ஒழிந்து போமே.**

குறிப்பிட்ட இடம், காலம், திக்கு, ஆசனம், கொள்கை, குலம், சீர், நோன்பு, சீலம், தவம், செபம், தியானம் ஆகிய பதின்மூன்று வகைப்பட்ட ஒழுகலாறுகளை அணைந்தோர் ஆகிய பெரியோர் மறுத்து ஒழித்தலுமில்லை; விரும்பிச் செய்வதுமில்லை. உறங்குகிறவர்களின் கை யிலே பிடித்திருக்கிற பொருள் தானாக நழுவிப் போவது போல உலகத் தார்க்கு விதிக்கப்பட்டன யாவும் சீவன் முத்தர்களிடத்திலிருந்து தாமாக நழுவிப் போகும். மெய்ஞ்ஞானம் ஒன்றே அவர்களை விட்டு நீங்காது.

குறிப்பிடம் என்பது ஒன்றாகக் கொள்ளாமல் குறிப்பும் இடமும் என்று இரண்டாகப் பொருள் கொள்ளப்படுவதும் உண்டு. இப்படிக் கொண்டால் மொத்தம் பதின்மூன்று என்பதற்குப் பதிலாக விதிக்கப்பட்ட ஒழுக்க முறைமைகள் பதினான்கு ஆகும்.

மேலே கூறப்பட்ட பதின்மூன்று வரையறைகளும் உலகியல் வாசனை அறாதவர்களுக்கு விதிக்கப்பட்டவை. சீவன் முத்தர்கள் இவற் றினை விழைந்து செய்வதுமில்லை; வெறுக்து ஒதுக்குவதுமில்லை. உறங்கு கிறவர்கள் கையிலே இறுகப் பற்றிக் கொண்டிருக்கிற ஒரு பொருள் தானாக நழுவிப் போவது போல இவ்வுலக ஒழுக்கமும் அவர்களை விட்டு நழுவும்.

உறக்கு உறுபவர் போல் என்பதற்கு உறங்குபவர் கைப்பொருள் போல் என்று சொல் வருவித்துப் பொருள் கொள்ளுக. இக்கருத்தினை ஆசிரியர் உமாபதிசிவம் திருவருட் பயனில்,

''ஒண்பொருட்கண் உற்றார்க்கு உறுபயனே அல்லாது
கண்படுப்போர் கைப்பொருள் போல் காண்'' (78)

என்று கூறியுள்ளதும் ஒப்பிட்டுக் காண்க.

**95 அகம்புறம் என்றுஇரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச்**
**சகம்தனில் இரண்டும் இன்றித் தமோமயம் ஆகி எல்லாம்**
**நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல ஞானம்**
**திகழ்ந்து அகம்புறம் எனாத செம்மையார் நன்மை யாரே.**

இந்த உலகத்தில் இறைவனை வழிபடுகிறவர்கள் புறப் பூசையாலும் வழிபடுவார்கள். அகப் பூசையாலும் வழிபடுவார்கள். இவர்கள் இறைவனை நினைந்து அவனை அடைதற்கு முயல்பவர்கள். இன்னொரு சாரார் இறைவனை வணங்குவதை எண்ணிக் கூடப் பார்ப்பதில்லை. வினைக்கீடாகப் பெற்ற உலகத்துப் பொருள்களிலே மகிழ்ந்து அறியாமையே வடிவாய் உலகியலில் அழுந்தி இறைவனைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் அலைவர். உண்மை ஞானம் கைவரப் பெற்றவர்கள், செம்மை நிலை வாய்க்கப் பெற்றவர்கள், மேற்கூறிய உலகியவாளரைப் போல ஒரு வகையில் ஒத்தவர்களாய் அக வழிபாடு புற வழிபாடு இரண்டையும் நிகழ்த்தாமல் உள்ளும் புறமும் ஒரு தன்மையராய்ச் சிவமேயாகி நிற்பார்கள்.

உலகத்து மக்களை மூன்று வகையாகப் பகுப்பது ஒரு மரபு. அவர்கள் பிராகிருதர் என்றும், வைநயிகர் என்றும், சாமுசித்தர் என்றும் கூறப்படுவர்.

பிராகிருதர் என்போர் உண்பதும் உடுப்பதும் உறங்குவதுமன்றி வேறு எதையும் பற்றிக் கருதாதவர்கள். அவர்களுக்கு மனச்சஞ்சலம் ஏதுமில்லை. ஏனெனில் தாம் அறியாமையில் வாடுகிறோம் என்பதனையே அவர்கள் அறியாதிருக்கிறார்கள்.

வைநயிகர் என்போர் விநயம் உடையவர்கள். அவர்களுக்கு உலகியல் வாழ்க்கை நிறைவு தருவதில்லை. எனவே அவர்கள் மெய்ப்பொருளைத் தேடும் வேட்கையுடவர்களாகி ஞான நூல்களைக் கேட்கவும் சிந்திக்கவும் தெளியவும் நிட்டை கூடவும் ஆவலுறுகிறார்கள். இவர்கள் பொருட்டே மெய்ந்நூல்கள் அருளப்பெற்றன. இவர்கட்கே மெய்ந்நூல்களைக் கற்பிக்க வேண்டும். இவர்களே விதித்தன செய்து விலக்கியன ஒழியும் இயல்புடையவர்கள். இவர்கள் அகம் புறம் என்ற இருவகை வழிபாடுகளுள் ஒன்றைப் பின்பற்றுவர்.

மூன்றுவது நிலையினரான சாமு சித்தர்கள் முற்பிறவிகளில் ஈட்டப்பட்ட தவத்தின் பயனால் இறைவன் திருவருளுக்கு உடனே இலக்காகும் மேலாம் தரம் பெற்றவர்கள், இவர்களுக்கு நூல்களின் துணை தேவையில்லை.

இப்பாடலில் முதலில் கூறப்பட்ட பிராகிருதர்கள் எனப்படும் உலகியல் வாழ்க்கை உடையவர்களுக்கும், உண்மை ஞானம் வாய்க்கப் பெற்ற ஞானியர்க்கும் உள்ள ஒரு புடை ஒற்றுமை ஆசிரியரால் எடுத்துக் காட்டப்பெறுகிறது. இரண்டு பேர் சித்தத்தினும் சஞ்சலமுமில்லை. தேட்டமுமில்லை. ஆனால் பிராகிருதர் அறியாமையே வடிவாய் இருப்பார்கள். மெய்ஞ்ஞானிகள் சிவத்தோடு சேர்ந்து ஞான வடிவாகவே நிற்பார்கள். இவர்களே செம்மை நலம் அறிந்தவர்கள்.

அகவழிபாடு அந்தரியாகம் எனவும் புற வழிபாடு பகிர் யாகம் எனவும் கூறப்படும்.

**96 அண்டம் மேவிட அனைத்தும் அண்டம் மேவிக்**
**கொண்டல் போல் எவையும் ஞானம் குறைவுஇலா நிறைதலாலே**
**கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினல் காணில்| தானே**
**அண்ட நாயகனுர் மேனி ஆனதேல் ஐயம் இன்றே.**

ஐம்பூதங்களுள் ஒன்ருகிய வான் மற்றைய நான்கு பூதங்களையும் தனக்குள் அடக்கிக் கொண்டு நிற்கின்ற கொள்கை போல், அதே நேரம் தான் யாவற்றுள்ளும் கலந்து நிற்கின்ற தன்மை போல், மெய்ஞ்ஞானியர் சிவஞானத்தால் நிறைந்தும் அந்நிறைவுக்குள் திளைத்தும் இருப்பர், அந் நிலையில் அவர்களது செயல்கள் புறத்தே செல்ல நேரிடினும் குருவருளால் கைவந்த சாதனையினல் சிவபெருமானைத் தமக்கு உயிராயும் தம்மை அவனது திருமேனியாயும் உணர்ந்து நிலைப்படும் அத்துவிதப் பேற்றினை அடைவர் என்பதில் ஐயமில்லை.

சிவஞானசித்தியாரில் இக்கருத்து,

''பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போக ஞாதிருஞான ஞேயம்
தங்கியஞானம் சங்கற்பனை ஞானம் ஆகும்
திருஞானம் இவை எல்லாம் கடந்த சிவஞானம்
ஆதலால் சீவன்முத்தர் சிவமே கண்டு இருப்பர்''

என்று எடுத்து உணர்ந்தப்படுகிறது.

கொண்டல்—கொள்ளப்படுதல். அண்டம் - வானம்· இது ஞான யோகம் எனப்படும்.

**97 மண்முதல் கரணம் எல்லாம் மறுஅசத்து ஆக்கிஞானக்**
**கண்ணினில் ஊன்றி அந்தக் கருத்தினல் எவையும் நோக்கி**
**எண்ணி அஞ்சு எழுத்தும் மாறி இறைநிறைவு உணர்ந்து போற்றல்**
**புண்ணியன் தனக்கு ஞான பூசையாய்ப் புகலும் அன்றே.**

மண் முதலிய தந்துவங்கள் எல்லாம் ஆன்மாகிய தன்னின் வேருனவை என்று கண்டு, தானும் தனக்கு இறைவனல் அளிக்கப்பட்ட தத்துவங்களும் இறைவனலன்றிச் செயல்படா என்பதையும், அவனே யாவற்றுக்கும் ஆதாரமாய் நிற்பவன் என்பதையும் தெளிந்து உணர்ந்து அக்கருத்தோடு யாவற்றையும் கண்டு திருவைந்தெழுத்தை சிகர முதலாகக் கொண்டு இடைவிடாது நினைத்து இறைவனின் எங்கும் நிறைந்த

தன்மையை உணர்ந்து போற்றுதலே புண்ணியன் ஆகிய சிவபெருமானுக்குச் செய்யப்படும் ஐவகைச் சுத்திகளோடும் கூடிய ஞான பூசை என்று ஆகமங்கள் கூறும்.

சிவபூசை செய்யும் காலத்து பஞ்ச சுத்தி என்ற ஐவகைத் தெளிவு மேற்கொள்ளப்படும். அந்த ஐவகைச் சுத்திகளையும் மனம் இறந்து இயற்றும் ஞானப் பூசையாக இப்பாடலில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மண் முதல் கரணம் எல்லாம் மறுவசத்தாக்கல் என்பது பூதசுத்தி. ஞானக் கண்ணினில் ஊன்றல் என்பது ஸ்தானசுத்தி. அந்தக் கருத்தினால் எவையும் நோக்கல் என்பது திரவியசுத்தி. அஞ்செழுத்தும் மாறி எண்ணல் என்பது மந்திரசுத்தி. இறை நிறைவு உணர்ந்து போற்றுதல் என்பது லிங்கசுத்தி. இவ்வாறு பஞ்சசுத்திகளும் குறிக்கப்பட்டன. மதுரைச் சிவப்பிரகாசர் தமது உரையிலே ஸ்தானசுத்தியைக் குறியாமல் அதனை ஆன்மசுத்தி என்று கொள்கிறார்.

மறு அசத்தாக்கி என்று பிரித்துப் பாடம் கொண்டு குற்றமுடைய சடம் என்று அறிந்து எனச் சிலர் பொருள் காண்பர். சில ஆசிரியர்கள் மறுவசத்து ஆக்கி எனப் பிரித்துப் பொருள் கொண்டு தத்துவங்கள் எல்லாம் தானாக மாட்டா என்று அவற்றை தன் வசம் அல்ல பரவசம் என்று பொருள் கொள்ளுவர். இப்பாடல் ஞானக்கிரியை உணர்த்தும் என்பர்.

**98 தொண்டர்கள் இடத்தும் வானோர் தொழும்திரு மேனி தானும்**
**அண்டரும் கண்டிலாத அண்ணலே என வணங்கி**
**வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே**
**கண்டு கொண்டு இருப்பர் ஞானக் கடல் அமுது அருந்தினோரே.**

சிவனடியார்களிடத்தும், வானவரும் தொழுகின்ற பெருமையினை உடைய சிவலிங்கத் திருமேனியிலும் எழுந்தருளி அருள் பாலிப்பது எல்லையற்ற பரிபூரணன் ஆகிய சிவபெருமானே என்பதை அறிந்து வணங்கிக் கண்களிலிருந்து வெண் முத்துக்கள் போலக் கண்ணீர் பொழியக் கசிந்துருகி மேலிட்ட அன்பினால் மொழிகுழற மெய்ப் பொருளையே கண்டு ஞானக் கடலின் அமுதத்தை அருந்திய சிவஞானிகள் சிவபெருமானை இடைவிடாது வழிபட்டுக் கொண்டிருப்பார்கள்

''மால் அறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே'' என்ற சிவஞான போதத்தின் பன்னிரண்டாம் நூற்பாவின் பகுதியை இப்பாடல் விளக்குகிறது, வழிபாடு குரு லிங்க சங்கமம் என்று மூன்று வகையாகக் கூறப்படும். இங்கே சங்கமர்கள் ஆகிய தொண்டர்களையும் லிங்கத் திருமேனியையும் மட்டிலுமே குறித்தார். ஏனெனில் சிவஞான சித்தியாரில் இம்மூன்றையும் இரண்டனுள் அடக்கி,

''தாபர சங்கமங்கள் என்று இரண்டு உருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன் உயிர்க்கு அருளை வைப்பன்''

என்று வழிநூல் உணர்த்திய முறைமையிலே இவரும் உணர்த்தலுற்றார்.

அடியார் திருவேடப் பொலிவு சிவபெருமானையே நினைப்பிக்கும் என்பது கழறிற்று அறிவார் நாயனார் புராணத்தில் உவர் நீரால் மேனி வெளுத்த வண்ணாரை வணங்கி, ''அடியேன் அடிச் சேரன். திருநீற்றின் வார வேடம் நினைப்பித்தீர். வருந்தாது ஏகும்'' என்று சேரமான் பெருமாள் உரைத்த மொழியை இங்கு நினைவு கூர்க. அவ்வாறே திரு ஞானசம்பந்த நாயனார் திருநாவுக்கரசரைக் கண்டவுடன் அவர் பால் தோன்றிய மன எழுச்சியும் சேக்கிழார் பெருமான் திருவாக்கில்,

''சிந்தை இடையரு அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவில் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய
(பெரிய புராணம்-270)
கண்ட கவுணியக் கன்றும் ''கருத்தில் பரவு மெய்க்காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது என்று தொழுதே''
(271)

என்று உயர்த்திக் கூறப்படுவதும் மனம் கொளத் தக்கது.

''திருக்கோவில் உள்ளிருக்கும் திருமேனியை சிவன் எனவே கண்ட வர்க்கு சிவன் உறைவன் அங்கே'' என்பது சிவஞான சித்தியார் (325) காட்டும் உண்மை. அத் திருமேனி வானவர்க்கும் அறிய ஒண்ணாதது என்பது திருவாசகம் திருச்சதகத்தில், ''வான நாடரும் அறிய ஒணாத நீ மறையில் ஈறு முன் தொடர் ஒணாத நீ'' என்று மாணிக்கவாசகர் கூறி யருளியதால் உணரப்படும். இறைவன் அமுதத் தெண்கடல் என்பது திருவாசகம் கோயில் திருப்பதிகத்தில் ''திரை பொரா மன்னும் அமுதத் தெண் கடலே (3) என்றும் அருள் வாக்கால் அறியலாம்.

இவ்வாறு தம்மை மறந்து தலைவன் தாள் தொழுது கல் மனம் கனியக் கண்ணீர் வார, மொழி தடுமாற நிற்றல் ஞானத்தை மாந்திய பெரியோர் இயல்பு என்பது இப்பாடலில் விளக்கப்பட்டது. இது ஞானச் சரியை என்பர். இக் கருத்து சிவஞான சித்தியாரில்,

''செங்கமலத் தாள்இணைகள் சேரல் ஒட்டாத்
திரிமலங்கள் அறுத்து ஈசன் நேசரொடும் செறிந்திட்டு
அங்கு அவர்தம் திருவேடம் ஆலயங்கள் எல்லாம்
அரன் எனவே தொழுது இறைஞ்சி ஆடிப்பாடி
எங்கும்யாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்று இறுமாப்பு எய்தித்
திங்கள்முடியார் அடியார் அடியோம் என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தி உடையோரே.''

என்று எடுத்துரைக்கப்பட்டது ஒப்பு நோக்கத்தக்கது.

**99 நிலவு உலகாயத ஆதி நிகழ் சிவாத்துவித அந்தத்துக்**
**குலவினர் அளவு அளாவாக் கொள்கையது ஆகிவேதத்**
**தலைதருபொருளாய் இன்பாய்த் தாவில் சற்காரியத்தாய்**
**மலைவுஅறும் உணர்வால் பெத்த முத்திகள் மதித்தாம் அன்றே.**

உலகத்தில் நிலவும் உலகாயதம் முதல் சிவாத்துவிதம் ஈருக உள்ள சமயங்களிலே ஒழுகுபவர்கள் கொண்ட கொள்கைகளுக்கு மேலாய் வேதத்தின் முடிந்த முடிபை உணர்த்துவதாகவும் பேரின்பத்தைத் தருவ தாகவும் குறைவற்ற சற்காரிய நெறியிலே நிற்பதாகவும் முன்னோடு பின் மலைவு நேராது தீர்த்தருளும் சிவபெருமானின் திருவருளினால் உயிர் களின் கட்டு நிலையும் வீடுபேற்று நிலையும் இந்நூலில் கூறப்பட்டன.

இந்நூலில் ''புறச்சமயத்தவர்க்கு இருளாய் அகச்சமயத்து ஒளி யாய்'' எனத் தொடங்கும் ஏழாவது பாடலில் கூறப்பட்ட புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் பல்வேறு சமயங்களிலே கூறப்பட்ட கருத்துக்கள் யாவும் தன்னுள் அடங்கத் தனக்கு ஒப்பற்று நிற்பது சைவ சித்தாந்தம் என்பதை நூற்கருத்தைக் கூறும் இப்பாடலில் ஆசிரியர் வலி யுறுத்திக் கூறுகிறார். செக்கிழார் பெருமான் சண்டேசுவர நாயனர் புராணத்தில் 'வேதப்பயனும் சைவம்' என்றும் (9) திருஞானசம்பந்தர் புராணத்தில் வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க'' (1) எனவும் குறித்தமை இங்கே நினைவு கூரற்பாலது. வேதக்கனியைப் பிழிந்த சாறு சைவசித்தாந்தம் எனவும் அதில் தள்ளப்பட்ட கருத்துக்கள் கோது என்றும் உணர்த்தினர். சைவ நெறி 'ஓதும் வேதாந்தத்து உச்சி யில் பழுத்த ஆராஇன்ப அருங்கனி பிழிந்து சாரம் கொண்ட சைவசித் தாந்தம்' என்று குமரகுருபர முனிவரால் பாராட்டப்பெற்றது. குற்றமற்ற சற்காரிய வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. திருவருளால் மலைவு தீர உணரப்படுவது. இதில் உயிர்கள் கட்டு நிலையில் நிற்கும் நிலையும் வீட்டு நிலையில் பெறும் பேறும் எடுத்துரைக்கப்பட்டன.

**100 திருவருள் கொடுத்து மற்றுஇச் சிவப்பிரகாச நன்னூல்**
**விரிவது தெளியும் ஆற்றல் விளம்பிய ஏது நோக்கிப்**
**பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவிப் பின்முன்**
**தரும்மலைவு ஒழியக் கொள்வோன் தன்மையில் சாற்றல் ஆமே.**

முறையே சரியை கிரியை யோகம் என்ற மூன்று நெறிகளிலும் பயின்று இரு வினை ஒப்பும் மல பரிபாகமும் சத்திநி பாதமும் எய்தப் பெற்றவர்க்கு சிவப்பிரகாசம் என்னும் இந்த நன்னூலை விரிவாகவும் தெளி வுறும் வகையிலும் மூவகை ஏதுக்களினாலும் நான்கு வகை உவமைகளா லும் கொள்கைகளை நிறுவிக் காட்டி முன்னொடு பின் மலைவு இல்லாமல் கேட்கின்ற மாணவர்களுக்குக் கற்பிக்கலாகும்.

இந்நூலினைக் கற்கும் தகுதி உடையார் இவர் என்பதனை இப்பாடல் கூறுவதால் இதனை உபதேச முறைமை என்பர். மலைவு அறக் கற்கிற மாணவர்களுக்கு மூன்று ஏதுக்களாலும் நால்வகை உவமைகளாலும் இந்நூலினை விரிவாகவும் தெளிவாகவும் சாற்றலாம் என்று ஆசிரியர் ஆணை தருகிறார். ஏது என்பன மூன்று. அவை இயல்பு, காரியம், அநு பலத்தி என்பன. இவற்றின் விரிவு சிவஞானசித்தியார் சுபக்கத்தில் பதினாறும் பாடலில் அளவை இயல் என்னும் தலைப்பின் கீழ் விரிவாகக் கூறப்பட்டன. உவமை நான்கு என்பது தொல்காப்பியத்துள் ''வினை பயன் மெய் உரு என்ற நான்கே, வகைபெறவந்த உவமத் தோற்றம்'' என்ற நூற்பாவில் கூறப்பட்டது.

---

# பாடல் முதற்குறிப்பு அகராதி

(எண் — பக்க எண்)

## ஏமது வெளியீடுகள் :

1 திருக்குறளும் சைவ சித்தாந்தமும்
2 திருமுறைகளில் சைவ சித்தாந்தம்
3 அருள்நந்தி சிவாச்சாரியார் புராணம்
4 அளவை இலக்கணம்
5 தேவார அருள் முறைத் திரட்டு
6 ஒன்பது இரவுகள் ஏன்?
7 தலமுறையில் தேவாரமும் திருத்தலமும் மலர் I
8 தலமுறையில் தேவாரமும் திருத்தலமும் மலர் II
9 திருவருட் பயன் (ஆங்கில மொழி பெயர்ப்புகளுடன்)
10 திருவைந்தெழுத்து
11 குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவசித்தாந்தம்
12 சிவஞான சித்தியார் சுபக்கம்
13 உண்மை விளக்கம்

## வரவிருக்கும் வெளியீடுகள் :

1 திருஉந்தியார் திருக்களிற்றுப் படியார்
2 வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்
3 இருபா இருபஃது

S. சிதம்பரநாத கல்யாணி,
ஸ்ரீ தனலட்சுமி ஸ்டோர்ஸ்
49-B, கண்ணம்மன் கோவில் தெரு,
திருநெல்வேலி-627 001.

அருள்நந்தி சிவம்
அருட்பணி மன்றம்
78, செல்வி நகர்,
சிந்துபூந்துறை,
திருநெல்வேலி-627 001

ரெக்ஸி, நெல்லை-1.